# இப்பொழுது

## உங்கள் அன்புக்குரிய
## ஆரோக்கியத்தை அளிக்கும்

# விட்டமின்கள்

## அடங்கிய டானிக்
## வாட்டர்பரீஸ் காம்பவுண்டை
## வாங்குங்கள் !

இப்பொழுது நீங்கள் இந்தியாவின் அன்புக்குரிய ஆரோக்கியத்தை அளிக்கும் விட்டமின்கள் மிகுந்த டானிக்கை வாங்கலாம். வாட்டர்பரீஸ் காம்பவுண்டுன் புகழ்பெற்ற கலவையில் ஆரோக்கியத்துடனும், பலத்துடனும் இருப்பதற்குத் தேவையான அதிகப்படியான விட்டமின்கள் சேர்ந்திருக்கின்றன. வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் உங்களுக்கு அநேக விதங்களில் பயனளிக்கிறது. இது இரத்தத்தை பரிசுத்தமாக்குகிறது. இழந்த சக்தியையும், வீர்யத்தையும் மீண்டும் அளிக்கிறது. நரம்புகளைப் பலப்படுத்தி தசைகளுக்கு சமனூட்டுகிறது. சரீரத்தில் வியாதிகளை எதிர்க்கும் சக்தியை உண்டு பண்ணுகிறது. நோயுற்று குணமடைந்தபின் உடம்பு சீக்கிரமாகத் தேற மிகவும் உதவுகிறது.




## வாட்டர்பரீஸ்
### விட்டமின்
## காம்பவுண்ட்

உங்களுக்கு போஷாக்கை அளிக்கிறது.

இருமலையும், ஜலதோஷத்தையும் போக்குவதற்கு கிரியோ ஸோட் மற்றும் க்வயகால் சேர்க்கப்பட்ட சிகப்பு லேபிளுடைய வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் கிடைக்கிறது.



# கல்கி பொருளடக்கம்

சார்வரி, தை 16 ※ ஜனவரி 29, 1961



க்யூபா தீவினர் புகையிலையை வாசனைச் சரக்காக உபயோகித்ததாக, 1492-ல் கொலம்பஸின் மாலுமிப் படையினர் கண்டறிந்தனராம். பொடி போடும் வழக்கம் பூர்வீகக் குடிகளிடம் இருந்ததைத் தமது இரண்டாவது கடற் பயணத்தின்போது கண்டறிந்தார் கொலம்பஸ். தென்னமெரிக்கக் கடலோரப் பிரதேசங்களிலே புகையிலை போடும் பழக்கம் இருந்ததை முதன் முதலாக இஸ்பானியர்கள் 1502—ல் கண்டதுண்டு.

## புகையிலையின் வரலாறு...1







பம்பாய்—57.

# பனமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT.701 TM

Greens' Advtg.



மலர் 20 | இதழ் 26

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# இந்தியாவும் சீனாவும்

சீனாவிலுள்ள இந்தியத் தூதரின் காரியதரிசியைத் தெருவில் மக்கள் எதிரில் சீனப் போலீஸார் அடித்துத் துன்புறுத்தி அவமானப்படுத்தி யிருக்கிறார்கள் என்ற செய்தியைக் கேட்டு நெஞ்சம் துடிக்காதவர்கள் இருக்க முடியாது.

இந்தச் சிப்பந்தி ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். சீனத் தலைநகர் பீகிங்குக்குப் பக்கத்திலுள்ள ஏதோ ஒரு சிறு ஸ்டேஷனில் வண்டி நின்றது. அப்போது சிலர் திடீரென்று நுழைந்து அவரைப் பெட்டியை விட்டு வெளியில் இழுத்து வந்து, கண்டபடி திட்டி, பொய்யும் புளுகும் அவர் மேல் சுமத்த, போலீஸாரும் பொதுமக்களும் அடித்து அவமானப்படுத்தி யிருக்கிறார்கள்.

இந்தச் செய்தி ஒன்று போதும், இந்தியாவையும் இந்திய மக்களையும், இந்திய அரசாங்கத்தையும் சீன அரசாங்கம் எவ்வளவு தூரம் மதித்திருக்கிறது என்பதைக் காட்டுவதற்கு!

இந்த விபரீதமான போக்கு ஒரு தனிச் சம்பவம் அல்ல. கொஞ்சம் கொஞ்சமாக இந்தியாவின் பலத்தை ஆழம் பார்த்து வந்தே இப்படி அவமானப்படுத்தி யிருக்கிறது.

வட எல்லையில் சீனா பல்லாயிரக்கணக்கான சதுர மைல்களை ஆக்கிரமித்தது. அதனைப் பற்றி நேருஜி பாரத மக்களுக்கு அறிவிக்காமல் நான்கு ஆண்டுகள் மூடி மறைத்து வைத்ததே சூ என் லாய்க்குத் தைரியம் அளித்தது!

இது போதாது என்று சூ என் லாயை இந்தியத் தலைநகருக்கு அழைத்து வந்து, 'ஆக்கிரமிப்பு' என்கிற வார்த்தை பேசாமல் அனுப்பி வைத்தது சீனப் பிரதமருக்கு இன்னும் கொஞ்சம் தைரியம் அளித்தது.

திபெத் விவகாரத்தில் இந்தியா உறுதியான நடவடிக்கை எடுக்காமல் சீனா, திபெத்தை விழுங்கியதைப் பார்த்துக் கொண்டிருந்தது நமது பரிதாப நிலையை இன்னும் வெட்டவெளிச்சமாக்கி விட்டது!

கடைசியாக இந்திய தூதராலயச் சிப்பந்தியையும் மற்ற இந்தியர்களையும் துன்புறுத்தவும் அவமானப்படுத்தவும் துணிந்து விட்டது.

நாளுக்கு நாள் சீனாவின் அதிக்கிரமம் அதிகரித்து வருகிறது; இச்செய்தி கேட்டுப் பாரத மக்கள் நெஞ்சம் கொதிக்கிறார்கள்.

ஆனால் அதிகாரத்திலிருக்கும் பிரதமர் நேருவோ தமது கோபதாபங்கள், மான அவமான உணர்ச்சிகளை யெல்லாம் தூரக் கட்டி வைத்து விட்டுச் சாத்விக முறையை அனுசரித்து வருகிறார். இந்திய மக்கள் மீது காண்பிப்பதற்கு மட்டும் தம்முடைய ராஜஸத்தை உபயோகப்படுத்திக் கொண்டு வருகிறார்.

சென்ற வாரம் பத்திரிகை நிருபர்கள், சீன ஆக்கிரமிப்பை அப்புறப்படுத்த வேண்டும் என்று பவநகரில் காங்கிரஸ் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறதே அதை யொட்டி இந்திய சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறார்கள் என்று கேட்டபோது, "இந்திய அரசாங்கம், நிதானமிழந்து கோபாவேசப்பட்டுக் காரியங்கள் செய்ய முடியாது. முக்கியமான விஷயம் என்னவென்றால், நமது பிரச்னை என்ன, குறிக்கோள் என்னவென்பதை நாம் முதலில் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். பிறகு நமக்குள்ள வழி வகைகளை வைத்துக் கொண்டு பிரச்னைக்குப் பரிகாரம் தேடவேண்டும்!" என்று பதிலளித்திருக்கிறார்.

பிரதமரின் பதிலில் ஏதாகிலும் சாரம் இருக்கிறதா? பொருளற்ற சொற்றொடர் என்பதற்கு இதைவிடச் சிறந்த உதாரணம் இருக்க முடியாது!

இவர் இப்படி யென்ருல் இவருடைய தோழர் திரு கிருஷ்ணமேனன் சீனுவைப் பற்றிக் குறிப்பிடும் முறை வியப்பாக இருக்கிறது. இந்திய நாட்டு மந்திரிக்குரிய உணர்ச்சியே இல்லாமல், சீன மந்திரியைப் போலவே பேசியிருக்கிருர் !

"இந்திய எல்லைக்குள் புகுந்து ஆக்கிரமிக்கும் சீனுவின் நடவடிக்கை முட்டாள் தனமானதாகும். இது பஞ்சசீலக் கொள்கையில் சந்தேகம் கொள்ளச் செய்து விட்டது. முன்னேற்றச் சக்திகளுக்கு எதிராக உள்ள கட்சிகளுக்கு ஆக்கம் கொடுப்பதாகி விட்டது!" என்று தில்லியில் பேசியிருக்கிருர்.

உலகக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஆதரவு குறைந்து, மற்ற எதிர்க்கட்சி நாடுகளுக்கு பலம் பெருகிவிட்டதே என்று சீனுவின் நஷ்டத்தைக் கண்டு வருந்தப்படுகிருர்.

அண்ணன் தம்பியைக் கண்டிப்பது போலவும், தந்தை தன்னுடைய மகனைக் கண்டிப்பது போலவும், பரிவோடு கலந்த ஏச்சாக இருக்கிறதே தவிர, இந்திய மண்ணில் அந்நியன் புகுந்து விட்டதால் உண்டான தேசபக்தி கொண்ட பேச்சாக இல்லை. இந்தியத் தூதராலயச் சிப்பந்தி சீனுவில் மிருகத்தனமாக நடத்தப்பட்டார் என்ற செய்தி வந்த பிறகு, இப்படி நேருவும், கிருஷ்ணமேனனும் பேசுகிருர்கள் என்ருல் அவர்களுடைய உணர்ச்சியற்ற குணத்தைப் பற்றி என்ன நினைப்பது ?

நேருஜியின் வெளி விவகார இலாக்காவில் பிரதம காரியதரிசியாகப் பணியாற்றி வந்த கிரிஜாஷங்கர் வாஜபேயர் பல ஆண்டுகளுக்கு முன்பே சீனுவை நம்பக் கூடாது என்று பல முறை எச்சரிக்கை செய்து வந்திருக்கிருர். அனுபவமிக்க ஓர் அதிகாரியின் எச்சரிக்கையைத் தொடர்ந்து அலட்சியப்படுத்தி வந்திருக்கிருர் நேரு. இதைப்பற்றித் தான் என்ன நினைப்பது ?

பிரதமர் நேருஜி சீனு விஷயத்தில் கடைப்பிடிக்கும் வழுவழுவாக் கொள்கையின் காரணமாக, வெகு குறுகிய காலத்தில் இந்தியாவின் அந்தஸ்து அழிந்து விட்டது.

நேப்பாள மன்னர் நேருஜியைக் கலந்தாலோசிக்காமலே தமது மந்திரி சபையை நீக்கிவிட்டு முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றுக் கொண்டார்.

பர்மாவில் சீனப் பிரதமர் பல நாட்கள் தங்கிவிட்டு வந்ததின் விளைவாக, பர்மாவிலும் நமது செல்வாக்கு கரைந்து போய் விட்டது.

இப்பொழுது சீனப் பிரதமர், பாகிஸ்தான் ஜனதிபதியுடன் உடன்படிக்கை செய்து கொண்டு விட்டார். இதன் விளைவாக பாகிஸ்தானுக்கு அதிக லாபமில்லா விட்டாலும், இந்தியாவுடன் பாகிஸ்தான் நெருங்கி நேசப்பான்மை வளர்த்துக் கொள்வதைத் தடுத்து விட்டது.

இப்படி நாலாபக்கமும் நண்பர்களே இல்லாத சூழ்நிலை எவ்வளவு சீக்கிரத்தில் வளர்ந்து விட்டது!

சீன ஆக்கிரமிப்பு ஏற்பட்டவுடனேயே ராஜாஜி, நல்ல யோசனையைக் கூறினுர். பாகிஸ்தான் நீட்டிய உதவிக் கரத்தைப் பற்றிக் கொண்டு, கிழக்காசிய நாடுகளுடன் நேசத்தை ராணுவ ரீதியில் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று யோசனை கூறினுர். இந்தியா இதுவரை கடைப்பிடித்து வந்த வெளிநாட்டுக் கொள்கையை மாற்றிக்கொண்டு, மேற்கத்திய வல்லரசுக் கோஷ்டியுடன் நேசம் கொண்டு நடந்து கொண்டிருந்தால் இந்தியா உலக நாடுகளிடையே பெரு மதிப்பு அடைந்திருக்கும். சீனுவும் வாலாட்டத் துணிந்திராது.

இந்த இதழ் காந்தி மகான் அமரராகிய நாளின்போது வெளிவருகிறது. காந்தி மகானின் நினைவு நாளில், சில சிந்தனைகள் எழுவது இயல்பே யல்லவா?

பிரிட்டிஷ் ஆட்சியில், இந்தியா அமுங்கி அடிமைப்பட்டுக் கிடந்தது. எனினும், காந்திமகான் நிராயுத பாணிகளாய், வாயில்லாப் பூச்சிகளாக இருந்த மக்களை வீரர்களாய், தியாகசீலர்களாய் மாற்றி, உலக மக்களின் உள்ளத்தில் பாரத நாட்டுக்கு மிக உன்னத ஸ்தானத்தை ஏற்படுத்தினுர்.

காந்திமகானின் இந்தச் சீரியபணியில் மிக முக்கியமான கட்டத்தில் ராஜாஜி துணை நின்று, காந்தி மகானின் அஹிம்சைப் போராட்டத்தின் சிறப்பை எடுத்துரைத்து வெற்றியை நிலைநாட்டினுர்.

1921 ம் ஆண்டில் நடைபெற்ற கயா காங்கிரஸில், சித்தரஞ்சன்தாஸ், மோதிலால்நேரு போன்ற அந்தஸ்திலும் செல்வாக்கிலும் மிக உயர்ந்திருந்த தலைவர்கள் காந்திமகானின் ஒத்துழையாமைக் கொள்கையைக் கைவிடவேண்டும் என்று துணிந்து நின்றனர். அந்தச் சமயத்தில் காந்திமகானைப் பின்பற்றிய கூட்டத்தினர் மாலுமி இழந்த நாவாய் போல் அலைபட்டு நின்றனர். அப்போது ராஜகோபாலாச்சாரியார் காந்தி மகானின் ஒத்துழையாமைக் கொள்கையின் சிறப்பை எடுத்துரைத்தார். பெருந்தலைவர்கள் பதில் சொல்லத் தெரியாமல் தோல்வியை ஒப்புக்கொண்டனர். சிறையிலிருந்த காந்தி மகானின் கொள்கை வெற்றி பெற்றது. அன்று பெற்ற வெற்றி இதுகாறும் பாரத

# சேதி தெரியுமா? ....... சாமா



பத்து வருஷத்துக்கு மேல் பதவியில் இருப்பவர்கள் விலக வேண்டும்
நாங்கள் பதவியில் ஒட்டிக் கொள்ள வில்லை. பிரதமரைத் தான் ஒட்டிக் கொண்டிருக்கிறோம்
சஞ்சீவரெட்டி




"பிராம்மணர்கள் ஜாக்கிரதை!"
ஈ.வே.ரா




நான் அடித்தது அவருடைய காரியதரிசியைத்தான், தூதரை அல்ல!




ஆமையும் முயலும்
உலக நாடுகள் கௌரவம்
பாகிஸ்தான்
இந்தியா
திட்டம்
"அவர்கள் தலைமேல் என்ன சுமைகள்?"
"கடன்சுமையும் வரிச்சுமையும்..."
"என்ன கடன்?"
"நாட்டுக் கடன்..."

நாட்டை மிக உயரிய ஸ்தானத்தில் இருத்தி வந்தது.

யுத்தத்துக்குப் பின் பிரிட்டிஷ் ஆதிக்கம் கைமாறிய நல்ல சமயத்தைக் கைவிடாமல் பற்றி இந்தியாவுக்குச் சுதந்திரம் சம்பாதிக்கும் வழி குறித்து ராஜாஜியின் யோசனைகளை வல்லபாய் பட்டேலும், மௌலானா ஆஜாத்தும், காந்தி மகானும் ஒப்புக் கொண்டார்கள். அதன் பயனாக இப்போது இந்தியா சுதந்திர நாடாக இருக்கிறது. இல்லாவிடில் இப்போதுங்கூட இந்தியா, பர்மா, இலங்கை எல்லா நாடுகளும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் அடிமை நிலை நாடுகளாக இருந்திருக்கும்.

இன்றும் ராஜாஜி யிருக்கிறார் நம்மிடையே. அவர் தக்க சமயத்தில் யோசனைகளையும் கூறத்தான் செய்கிறார். அதனைப் புரிந்துகொள்ளும் திறம்தான் நம்மை ஆள்வோரிடையே இல்லை.

## 'டிராக்டர்' ஊழல்

பிரதமர் நமது பாதுகாப்பு மந்திரியின் குணநிசயங்களைப் போற்றப் போற்ற, அவரது நிர்வாகத் திறமையைப் பற்றியும், அவரைப் பற்றியும் புகார்களும், குற்றங்குறைகளும்தான் அதிகமாக வெளியாகின்றன.

தில்லியில் அகதிகள் புனர்வாழ்வுக்காக ஒரு மந்திரியின்கீழ் ஓர் இலாக்கா செயல் படுகிறது. இந்த இலாக்கா, வங்க அகதிகளுக்காகக் காட்டைத் திருத்தி நாடாக்கும் திட்டம் மேற்கொண்டது. இதற்குத் தண்டகாரண்யத் திட்டம் என்று பெயர். இந்தத் தண்டகாரண்யத் திட்டத்தில், நிலத்தைப் பண்படுத்தி வயலாக்க, இந்த இலாக்காவுக்கு டிராக்டர்கள் தேவைப்பட்டன. 'இந்த டிராக்டர்களை இந்நாட்டிலேயே ராணுவத் தொழிற்கூடங்களில் செய்து தருகிறேன்' என்று மேனன் அவர்கள் முன் வந்தார். ராணுவத் தொழிற்கூடங்கள் செய்து கொடுத்த டிராக்டர் **ஒன்றுவது** உபயோகத்துக்குத் தகுதி யுள்ளதாக இல்லையாம்.

அகதிகள் புனர்வாழ்வு இலாகாவுக்கு முதலில் 16டிராக்டர்களைக் கொடுத்திருக்கிறார்கள். இந்தப் பதினாறும் பழுதுள்ளனவாக இருந்தன. ஒன்றிலும் சரியாக இயங்கவில்லை. இதைப் பற்றிப் புகார் எழுந்தபோது, ராணுவப் பாதுகாப்பு மந்திரி மிக அலட்சியமாக, 'சிறிய குறையைப் பெரிது படுத்தும் கட்டுக்கதை' என்று சொல்லித் தள்ளி விட்டார். புனர் வாழ்வு அளிக்கும் மந்திரியோ, பழுது பார்க்க அனுப்பிய 16 டிராக்டர்கள் திரும்பி வந்து சரியாக வேலை செய்கின்றனவா என்றுகூடப் பார்க்காமல் மீண்டும் 125 டிராக்டர்கள் செய்து தரும்படி கோரினார். இந்த உத்தரவின்படி வந்த 42 டிராக்டர்களும் முதலில் வந்த 16 டிராக்டர்களும் சேர்ந்து, 58 டிராக்டர்கள் உபயோகமற்றுக் கிடக்கின்றனவாம்! மூலையில் வெய்யிலிலும் மழையிலும்கிடந்து துருப்பிடித்து வருகின்றன.

ஒரு வெளிநாட்டு தொழிற்கூடத்தாருடன் ஒப்பந்தம் பேசி அவர்கள் இந்த டிராக்டர்களைச் செய்து தர ஒப்புக் கொண்டார்களாம். ஆனால் அந்தத் தொழிற்கூடத்தாருக்கு டிராக்டர்செய்து பழக்கமே இல்லையாம்! இப்படிப்பட்ட கம்பெனியாருடன் தான் பாதுகாப்பு

### வேண்டுகோள்

பணக்காரர்களின் பணத்தைக் கொண்டு மறுபடியும் ஐந்து வருஷங்களுக்குப் பட்டா பெற்றுவிடலாம் என்று காங்கிரஸ் எண்ணுகிறது. இந்தப் பர்மிட் லைசென்ஸ் ராஜ்யத்தை ஒழிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறவர்கள் சுதந்திரப் போருக்கு உதவுங்கள். தாமதிக்க வேண்டாம்.

சுதந்திரக் கட்சிக்காக நிதி உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களின் நன்கொடையை என் பெயருக்கு c/o கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறேன். பெயரிட்டோ, பெயர் சொல்லாமலோ அனுதாபிகள் விருப்பத்தின்படி கல்கியில் நன்கொடைகளின் வரவு பிரசுரிக்கப்படும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

மந்திரி திரு கிருஷ்ணமேனன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார். இந்த அழகில் இவரைப் போன்ற மேதாவி கிடையாது என்று பிரதமர் ஜவாஹர்லால் நேரு சொல்லுகிறார்.

சில ஆண்டுகளுக்கு முன் கிருஷ்ண மேனன் இங்கிலாந்தில் இந்திய தூதராக இருந்த போது, முதலே இல்லாத கம்பெனியிடம் ஜீப்புக்கள் வாங்க உத்தர விட்டார் என்றும் அதன் காரணமாக இந்தியாவுக்குப் பெரு நஷ்டம் ஏற்பட்ட செய்தியும் வெளியாகி நாடும் நகரமும் சிரித்தன. இப்பொழுது ஏற்கனவே டிராக்டர்கள் செய்து நல்ல பெயர் எடுத்த கம்பெனிகளில் வேண்டிய டிராக்டர்களை வாங்காமல், டிராக்டர் செய்து அனுபவமில்லாத ஒரு கம்பெனியுடன் உறவு கொண்டு, அவர்களுக்கு டிராக்டர் செய்யப் பழக்கித் தருகிறார் மந்திரி திரு கிருஷ்ண மேனன்.

'எல்லாம் சர்க்கார் செய்து விடும்' என்ற சோஷலிஸக் கொள்கை எந்த லட்சணத்தில் வேலை செய்கிறது என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு!

# என்ன சேதி?

## நடிகர் நேரு

ஜவாஹர்லால் நேரு அவர்கள் இந்த நாட்டையே ஒரு நாடக மேடையாகக் கொண்டு நடித்து வந்திருக்கிறார் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

ஊதாரித்தனமான செலவுகளுக்கும், வெளி நாடுகளிலிருந்து 'கண்மூடித்தனமாகக் கடன் வாங்குவதற்கும் காரண புருஷரான இவர் சிக்கன விஷயத்தைப் பற்றிப் பேசுகிறார் என்றால் இது நடிப்பைத் தவிர வேறு என்ன? சென்ற வாரம் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் நாட்டு நிர்வாகத்தில் சிக்கனம் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்.

நேருஜி இதைச் சொன்னவுடன் பத்திரிகை நிருபர்கள் வெளிநாட்டிலிருந்து இருநூறு கார்கள் மந்திரிகளுக்காகவும் கவர்னர்களுக்காகவும் இறக்குமதிசெய்ய விருப்பதை எடுத்துரைத்தனர்.

இதற்கும் நேருஜி சிறந்த நடிகரைப் போல்,"அப்படியா சமாசாரம்! எனக்குத் தெரியாதே!" என்று கூறிவிட்டாராம்.

## வாழ்த்துகிறோம்

சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் யோசனைப்படி 60-61க்கான பரிசுகளை ஐந்து தமிழ் நூல்களுக்கு வழங்க இசைந்திருக்கிறது சென்னை அரசாங்கம்.

'கேளாத கானம்' என்ற சிறுகதைத் தொகுப்புக்காக திரு சோமுவும், 'தேரோட்டி மகன்' நாடகத்துக்காக திரு பி. எஸ். ராமையாவும், 'கவிதையும் வாழ்க்கையும்' என்ற கட்டுரைக்காக திரு அ. மு. பரமசிவானந்தமும், 'நாம் இருக்கும் நாடு' என்ற வரலாற்று நூலுக்காக டாக்டர் எம். ஆரோக்கிய சாமியும், 'தென்னிந்தியப் பயிர்கள்' என்ற அறிவு வளர்ச்சி நூலுக்காக திரு வி. டி. சுப்பையா முதலியாரும் பரிசு பெறுகின்றனர். பரிசு பெறும் எழுத்தாளர்களுக்கு நம் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## எழுத்துலகுக்கு நஷ்டம்

சாமி சிதம்பரனார் தமது அறுபத்தோராவது வயதில் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்தாதவர் கிடையாது. தமிழ்ப் பண்டிதராக வாழ்க்கையைத் தொடங்கிய சிதம்பரனார், தற்காலக் கருத்துக்களைப் பகுத்துணர்ந்து எடுத்துரைக்கும் பாங்கும் பெற்றிருந்தார். அவருடைய 'தொல்காப்பிய தமிழர்' முதலிய நூல்கள், அவரது நேரிய ஆழ்ந்த சிந்தனைக்கும் பகுத்தறிவுக்கும் சிறந்த எடுத்துக்காட்டு.

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் உப தலைவராக இருந்து பணியாற்றிவந்தார். சென்னை மகாஜன சபைக்கும் தர்ம கர்த்தாவாக நீண்ட நாட்கள் இருந்து வந்திருக்கிறார்.

அடக்கத்துக்கும் திண்ணிய நெஞ்சுரத்துக்கும் ஆழ்ந்த புலமைக்கும் தெளிந்த உரைநடைக்கும் உறைவிடமாக இருந்த சாமி சிதம்பரனாரின் மறைவு தமிழ் உலகுக்கு, தமிழ் எழுத்துலகுக்குப் பெருத்த நஷ்டமாகும். அவர் மறைவினால் வருந்தும் அவரது உற்றாருக்கும் உறவினர்க்கும் நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## வேலூர் குப்புசாமி முதலியார்

சிறந்த தேசபக்தரும் அஞ்சா நெஞ்சம் படைத்தவருமான வேலூர் குப்புசாமி முதலியார் தமது 72வது வயதில் காலமானார் என்ற செய்தி பழைய சத்தியாக்கிரக நாட்கள் நினைவிலிருப்பவர்களுக்கெல்லாம் பெரும் துயரம் விளைவித்திருக்கும். அவர் சிறந்த பேச்சாளராக

# சுதந்திர நிதி



கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

16–1–61 முதல் 21–1–61 முடிய

| | | |
|---|---|---|
| எம். கே. என். முத்தப்பன் செட்டியார் ... | 10 | 00 |
| சி. ஆர். நடராஜன் ... | 10 | 00 |
| எம். வி. சக்ரபாணி ... | 1 | 00 |
| ஏத்தாப்பூர் ஜி. விசுவநாதன் | 5 | 00 |
| நாராயண சக்கரம் ... | 2 | 00 |
| எஸ். பி. ராஜாமணி ... | 1 | 00 |
| திருவண்ணாமலை சிவா ... | 3 | 00 |
| மதுரை அங்கத்தினர் 'P' ... | 5 | 00 |
| ஸ்ரீமதி எம். ஜெயலக்ஷ்மி ... | 2 | 00 |
| ரகஸ்ய ரஞ்சன் ... | 15 | 00 |
| ஸ்ரீமதி காமாக்ஷி ... | 2 | 00 |
| கே. கே. சுந்தரம் ... | 2 | 00 |
| எஸ். கிருஷ்ணசுவாமி ... | 5 | 00 |
| டி. என். கே. வி.கே. ராமானுஜம் ... | 11 | 00 |
| என்.ஆர்.எஸ். தேசிகன் ... | 10 | 00 |
| கே. ஆர். வேங்கடவரதன் ... | 5 | 00 |
| ஸ்ரீமதி ராஜம்மாள் ... | 1 | 00 |
| ஓர் அன்பர் ... | 5 | 00 |
| ஸ்ரீமதி ராஜேசுவரி அம்மாள் | 10 | 00 |
| சேதுராமன் ... | 1 | 00 |
| எம். விசுவநாதன் ... | 1 | 00 |
| ஏ. சண்முகம் ... | 2 | 00 |
| ஆர். மகாதேவன் ... | 2 | 00 |
| டி. திருநாவுக்கரசு முதலியார் | 2 | 00 |
| எஸ். கோவிந்தராஜன் ... | 2 | 00 |
| ஸ்ரீமதி எஸ். சீதாலக்ஷ்மி | 2 | 00 |
| ஆர். முத்துஸ்வாமி ... | 5 | 00 |
| ஏ. ராமசாமி முதலியார் ... | 1 | 00 |
| ஜி. ராமசாமி நாயுடு ... | 1 | 00 |
| வி. நாராயண சுவாமி ... | 1 | 00 |
| வி. நடராஜன் ... | 2 | 00 |
| டாக்டர் ஸ்ரீஹரி | 116 | 00 |
| 15–1–61 முடிய வரவு | 334 | 01 |
| மொத்தம் வரவு | 577 | 01 |

விளங்கியமையாலே கோடையிடி குப்புசாமி முதலியார் என்ற பெயர் தேச பக்தர்களிடையே நிலவிவந்தது. 1920 முதல் காங்கிரஸில் ஈடுபட்டுப் பலமுறை சிறை சென்றிருக்கிறார். வேலூர் நகர சபை அங்கத்தினராகவும், வட ஆர்க்காடு ஜில்லா போர்டு அங்கத்தினராகவும் பல காலம் பணியாற்றியிருக்கிறார். 1959-ல் சென்னை சட்டசபையில் மேல்சபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் மறைவைக் குறித்து வேலூர் நகரம் கடைகளை மூடி வைத்து மரியாதை செய்தது. இது ஒன்றே அவர் பொது மக்களிடம் எவ்வளவு அன்பைப் பெற்றிருந்தார் என்பதற்குச் சான்று.

## மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்

தனியார் தொழில் வளர்ச்சியில் சென்னை மாநிலம் சமீப காலத்தில் வேகமாக முன்னேறிக் கொண்டு வருகிறது. இதற்கு ஓர் எடுத்துக்காட்டு போல் விளங்குவது மதராஸ் சிமெண்ட்ஸ் கம்பெனி.

ராமநாதபுரம் ஜில்லாவில் சாத்தூர் தாலுக்காவிலுள்ள துலுக்கப்பட்டியில் நிறுவப்பட்டிருக்கும் இந்த செமெண்ட்டுத் தொழிற்சாலைக்கு ஆரம்ப நடவடிக்கைகள் 1957-ம் ஆண்டில் தொடங்கப்பட்டன. சுமார் ஐம்பது லட்சம் வரையில் இதற்கு அப்போது மூலதனம் தேவைப்பட்டது. பத்திரிகைகளில் விளம்பரமின்றியே இந்தப் பெருந் தொகையைத் தங்கள் நண்பர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் சேகரித்து விட்டார் இந்தப் பணியை மேற்கொண்ட திரு பி. ஏ. சி. ராமஸ்வாமி ராஜா. அவரது மேற்பார்வையில் சிறப்பாக இயங்கி வரும் ராஜபாளையம் பஞ்சாலை, ராமராஜு ஸர்ஜிகல் பஞ்சாலை, ஜெயராம பஞ்சாலை முதலியவை அவருடைய திறமைக்குச் சான்று கூறுகின்றன.

இப்போது இத் தொழிற்சாலை அதன் இரண்டாவது கட்ட விஸ்தரிப்பை மேற்கொண்டிருக்கிறது. இதன் விவரங்களை இந்த வாரக் 'கல்கி' இதழில் மற்றொரு பகுதியில் காணலாம்.

துலுக்கப்பட்டித் தொழிற்சாலையில் முதல் கட்ட வேலைகள் ஏற்கனவே பூர்த்தியாகி விட்டதால், சமீபத்திலேயே உற்பத்தி தொடங்கவிருக்கிறது. எனவே, நல்ல எதிர்காலம் உள்ளதும் திறமையுள்ள நிர்வாகம் நடத்தப்படுவதும் ஆகிய ஒரு தொழில் ஸ்தாபனத்தில் தங்கள் உபரி சேமிப்புத் தொகையை முதலீடு செய்ய விரும்புபவர்களுக்கு மதராஸ் செமண்டஸ் கம்பெனி ஒரு வாய்ப்பாக அமைந்துள்ளது. இந்தத் தொழில் விஸ்தரிப்புக்கு எங்கள் வாழ்த்து.

"கேளாத கானம்" என்கிற சிறுகதைப் புஸ்தகத்துக்குச் சென்னை அரசாங்கம் பரிசு கொடுத்தார்கள். — தினசரிச் செய்தி

முத்துகிருஷ்ணய்யருக்கு வயது நாற்பத்தைந்து. அவருடைய மனைவி அவரை விட்டுப் பிரிந்து விஷ்ணுபத மடைந்து பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் இந்த நிகழ்ச்சி. அவருடைய குமாரனுக்குப் பதினேழு வயது. இருவரும் மயிலாப்பூரில் கர்னாடக காயன சபையில் பாட்டுக்கச்சேரிக்குச் சென்றார்கள்.

பாடகர் வரதப்பய்யர் ரொம்ப 'சுமாராக'த்தான் பாடினார். பக்க வாத்தியம் அதைவிட 'சுமார்'. பையன் சங்கரனுக்குக் கச்சேரி பிடிக்கவில்லை. ஆயினும் தகப்பனார் கண்கள் கலங்கிப் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தார். அதனால் சங்கரன் எழுந்து போகாமல் பக்கத்தில் கடைசி வரையில் உட்கார்ந்திருந்தான்.

* * *

அடுத்த நாள் காலை சம்பாஷணை.

"அப்பா நேற்று கச்சேரி எவ்வளவு மோசம் பார்த்தீர்களா? இந்தக் கர்னாடக சபையாரின் நிர்வாகம் ரொம்ப மோசம். நீர் சபையின் உதவித் தலைவராச்சே, ஏதாவது செய்யுங்கள்" என்றான் சங்கரன்.

"அப்படியா? பாட்டு நன்றாய்த்தான் பாடினாரே?" என்றார் முத்துகிருஷ்ணய்யர்.

"யாரோ வரதப்பய்யராம், புது ஆள். ஒன்றும் பிரயோஜனமில்லை. எனக்கு வயோலின் சொல்லித் தரும் வாத்தியாரே அதைவிட நன்றாகப் பாடுவார்" என்றான் சங்கரன் சிரித்துக் கொண்டு.

முத்துகிருஷ்ணய்யர், "இருக்கலாம். எல்லாரும் ஒரேவிதமாகப் பாட முடியுமா?" என்று சொல்லி விட்டுப் பேப்பர் படிக்க ஆரம்பித்தார்.

பத்துமணியானபின், போஜனம் முடித்தபின், சங்கரன் வெளியே கலாசாலைக்குச் சென்றான்.

* * *

முத்துகிருஷ்ணய்யருடைய அக்கா, விதவை; அவள்தான் வீட்டில் எல்லா வேலையும் சாப்பாடு சமைப்பது உள்படச் செய்து வந்தாள். சிறு வயதிலேயே



# கேளாத கானம்

—மற்றொரு கதை

புருஷனை இழந்துவிட்டு அதுமுதல் தம்பியோடேயே இருந்து வந்தாள். முத்துகிருஷ்ணய்யருடைய மனைவி இறந்தபின் அவருக்கு மறு விவாகம் செய்விக்க எவ்வளவோ முயற்சி செய்தாள். அவர் ஒப்பவில்லை!

"முப்பது வயதில் மனைவி இறந்துவிட்டால் மறுபடியும் கலியாணம் செய்து கொள்ளாமல் யாராவது இருப்பார்களா? குழந்தையைப் பார்த்துக் கொள்ளவாவது ஒருத்தி வேண்டாமா? ஏன் இப்படிப் பிடிவாதம் செய்கிறாய்?" என்று ஐந்து ஆறு வருஷங்கள் சொல்லிச் சொல்லிப் பார்த்தாள். மறு விவாகம் செய்து கொண்டு சந்தோஷமாகவும் சுகமாகவும் இருக்கும் பலரை எடுத்து திருஷ்டாந்தம் காட்டுவாள்.






ஆயினும் அவளால் தம்பியின் மனத்தைத் திருத்த முடியவில்லை.

"தாயில்லாத ஒரு குழந்தையைப் பார்த்துக் கொள்வது கஷ்டமானால் ஒரு சிறு பெண்ணையும் கட்டிக்கொண்டு அவளும் உள்பட இரண்டு குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது அதைவிடக் கஷ்டமில்லையா?" என்று முத்துகிருஷ்ணய்யர் வேடிக்கையாக வாதாடுவார்.

"நீ சொல்லுவது வியப்பாக இருக்கிறது. இந்தக் காலத்தில் 20, 22, 25 வயதுப் பெண்கள் கூடக் கிடைப்பார்களே? போட்டி போட்டுக்கொண்டு வருவார்கள். உனக்கென்ன குறை? சொத்து இருக்கிறது. ஒரே ஒரு குழந்தை - நாளைக்கே மூன்று இடங்களைப் பார்த்து உன்னிடம் வரச் செய்கிறேன்" என்பாள் விசாலாட்சி.

முத்துகிருஷ்ணய்யர் சிரிப்பார். "இப்போது ஒரே குழந்தைதான். இரண்டாம் மனைவிக்கு எட்டு குழந்தைகள் மளமள

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

வென்று பிறக்கும். அந்தச் சண்டைகளைத் தீர்க்க நானும் நீயும் வருந்தி வருந்திச் சாவோம்'' என்பார்.

இப்படிச் சில ஆண்டுகள் முயற்சி செய்து பிறகு இது பயனில்லை என்று விட்டு விட்டாள்.

* * *

"நேற்று பாட்டுக் கச்சேரி ரொம்ப மோசம் என்றான் சங்கரன். நீ என்னமோ கடைசி வரையில் இருந்தே தீர்த்தாயாமே!'' என்றாள் விசாலாட்சி.

''சங்கரனுடைய அம்மா பாடிய பாட்டு பாடினார் அந்தப் புது வித்துவான். அவள் அதை அடிக்கடி மிக உருக்கமாகப் பாடுவாள் அல்லவா, உனக்குத் தெரியுமே, விசாலாட்சி? நேற்று என்னவோ கச்சேரியில் என் காதில் அவளுடைய குரலே துவனித்துக் கொண்டிருந்தது. மெய்மறந்து போனேன்!''

''இருபது வருஷங்களுக்கு முன் பாடிய பாட்டு இன்னும் உனக்கு நினைவா? நீ ஒரு பைத்தியக்காரன், முத்து!'' என்றாள் விசாலாட்சி.

''நான் பைத்தியக்காரன்தான்'' என்று சொல்லி அடக்க முடியாமல் விம்மி விம்மி அழ ஆரம்பித்தார் முத்துகிருஷ்ணய்யர்.

''அவளைப்போல் ஒரு பெண் உலகத்தில் இல்லை, முத்து, உண்மை. ஆனால் அழுது என்ன பயன்? இந்தா, காப்பி சாப்பிட்டுப் படுத்துத் தூங்கு'' என்றாள் விசாலாட்சி.

''அவள் பாய்மேல் உட்கார்ந்து பாடியதுபோலவே என் மனக் கண்ணில் கண்டேன். காதிலும் அவளுடைய குரலே தேனைப் பாய்ந்தது. அக்கா! இராத்திரியும் கனவில் வந்தாள். குழந்தையைக் கவனித்துக் கொள் என்று சொல்லிவிட்டு மறைந்தாள்.''

இப்படிச் சொல்லிவிட்டு முத்துகிருஷ்ணய்யர் படுக்கப் போனார். ''பைத்தியக்காரன்!'' என்று விசாலாட்சி தனக்குள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டாள்.

நல்ல கானத்துக்கு மேல் இனிய பொருள் வேறு இல்லை. ஆனால் கேட்கும் கானங்களைவிடக் கேளாத கானங்களே மேல்.

## ராஜாஜியின் சுற்றுப்பிரயாணம்

ராஜாஜி இம்மாதம் 29-ம் தேதி முதல் பிப்ரவரி 6-ம் தேதி வரை, கரூரிலும் கோவை ஜில்லாவிலும் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். நாட்டு மக்களின் சுதந்திரத்தைக் காப்பதற்கும் ஜனநாயகத்தைத் தழைக்கச் செய்வதற்கும் சுதந்திரக் கட்சி இந்நாட்டில் நன்கு வேர் ஊன்ற வேண்டும் என்று விரும்புகிறார் தீர்க்கதரிசி. நாட்டுப் பற்றுள்ள மக்கள் சுதந்திரக் கட்சிக்கு மனமார நிதி உதவி செய்து ராஜாஜியின் பணியையும், நாட்டுப் பணியையும் சிறக்கச் செய்ய வேண்டுமெனக் கோருகிறோம்:

**29-ம் தேதி** கரூரில், ரோட்டரி சங்கம், வக்கீல்கள் சங்கம், பாரதி சங்கம், எழுத்தாளர் சங்கம் ஆகிய எல்லாவற்றிலும் பங்குகொள்கிறார். மாலை பொதுக்கூட்டம்.

**30-ம் தேதி** கன்னிவாடி, மூலனூர், குளத்துப் பாளையம், வீரஜமங்கலம் வழியாகத் தாராபுரம் அடைகிறார். வக்கீல்கள் சங்கம், பொதுக்கூட்டம்.

**31-ம் தேதி** காங்கேயம், பழைய கோட்டை, சித்தோடு, — பவானி, பவானி தாலூக்கா சுதந்திரக் கட்சி மகாநாடு. மாலை 5-30 பொதுக் கூட்டம். இரவு 7 மணிக்கு ஈரோட்டில் பொதுக் கூட்டம்.

**1-ம் தேதி** ஈரோட்டில் வக்கீல்கள் சங்கம், வர்த்தகர்கள் சங்கம், ஊழியர் கூட்டம். மாலை: கோபி செட்டிப் பாளையம், வக்கீல்கள் சங்கம், பொதுக் கூட்டம்.

**2-ம் தேதி** புளியம்பட்டி வழியாக அவிநாசி — காலை 10-30 மணிக்கு பொதுக்கூட்டம் மாலை: 6-30 மேட்டுப் பாளையத்தில் பொதுக்கூட்டம்.

**3-ம் தேதி** சிங்கா நல்லூர், சூலூர், வீரபாண்டி வழியாகத் திருப்பூர். ஊழியர் கூட்டம், அருள்நெறிக் கழகம். மாலை 6 மணிக்கு பல்லடத்தில் பொதுக்கூட்டம், 8 மணிக்கு திருப்பூரில் பொதுக்கூட்டம்.

**4-ம் தேதி** குறிச்சி, போத்தனூர், செட்டிப் பாளையம், கிணத்துக் கடவு கோயில்பாளையம் வழியாகப் பொள்ளாச்சி. மாலை 6-30 மணிக்குப் பொதுக் கூட்டம்.

**5-ம் தேதி** காலை 9 மணி — பீளமேடு பொதுக்கூட்டம். கோவை தாலூகா மகாநாடு—கணபதி. மாலை 7 மணி சிதம்பரம் பூங்காவில் பொதுக் கூட்டம்.

**6-ம் தேதி** பல்லடம், கல்நான் பேட், செஞ்சேரி வழியாக உடுமலைப் பேட்டை. தாலூக்கா மகாநாடு. மாலை 6-45 பொதுக் கூட்டம்.

**7-ம் தேதி** சென்னைக்குப் புறப்பாடு.

# முன் அடி வைக்கும் கென்னடி

புதுமனை புகுவதற்கு—அல்லது மனை பழையதாக இருந்தாலும் அதில் புதிதாகப் புகுவதற்கு—ஏற்ற மாதம் தை; தையிலும் வெள்ளிக்கிழமைக்குத் தனிச் சிறப்பு. இந்த ஆங்கில மாதம் 20ந் தேதி, தை வெள்ளியன்று குடி மாற்றம் செய்த ஒரு குடும்பம் சீரும் சிறப்பும் பெற்று விளங்க வேண்டும் என வாழ்த்துகிறோம்.

நாலே பேர்கள் கொண்டதுதான் இந்தக் குடும்பம். ஆனால் இவர்கள் குடிபுகும் இல்லத்தில் இவர்கள் பிரத்தியேக உபயோகத்துக்கென்றே எழுபது அறைகள் உள்ளன. வீட்டைப் பராமரிக்கவே எஜமானி அம்மாள் வருஷத்துக்குப் பதினாறு லட்சம் ரூபாய் பெறுகிறார். வெள்ளை மாளிகையோ, கொக்கோ!



1942-ல் கென்னடி சகோதரர்கள்

வெள்ளை மாளிகை என்றால் வாஷிங்டனிலுள்ள அமெரிக்க ஜனாதிபதியின் 'அதிகாரபூர்வமான' இல்லமே தான். இந்த மாளிகையில்தான் இம்மாதம் 20ந் தேதி அடி எடுத்து வைத்தார் ஜான் பிட்ஜெரால்ட் கென்னடி. அதே சமயம், உலக அரசியல் அரங்கின் முன்னும் அடி எடுத்து வைத்துவிட்டார். ஏனெனில் இக்கிருகப் பிரவேசத்துக்குச் சிறிது முன்புதான் அந்தக் கென்னடி அமெரிக்காவின் புதிய ஜனாதிபதியாகப் பதவி ஏற்றுவிட்டாரே!

இன்றைய உலகிலேயே மிகச் செல்வாக்கு வாய்ந்த இந்தப் பதவியை யார் வகிக்கிறாரோ அவரைத்தான் சுதந்திரமாக வாழும் நாடுகள் யாவுமே தங்கள் பிரதிநிதியாகக் கருதுகின்றன. சுதந்திர வாழ்வுக்கு உலை வைக்கும் கம்யூனிஸக் கொள்கைகளை முறியடிக்க அவர் மேற்கொள்ளும் வழியை ஒட்டித்தான் உலக சரித்திரமே உருவாகிறது. ஆம், வரலாற்று நிபுணர் ஒருவர் கூறுவது போல், அமெரிக்க ஜனாதிபதியின் 'வாக்காளர் தொகுதி' அந்தத் தேசத்துக்கும் அப்பால் விரிந்துள்ளது. அப்படியொன்றும் அந்தேசத்தின் வாக்காளர் தொகுதி என்பதும் ஏதோ குறிப்பிட்ட ஒரு நகரை மட்டும் சேர்ந்தது இல்லை. அமெரிக்காவின் அத்தனை வயது வந்த மக்களுமல்லவா தங்கள் ஜனாதிபதியை நேரடியாகத் தேர்ந்தெடுக்கிறார்கள்?

இரண்டாவது] உலகப்போரின்போது டார்பிடோ படகில் கமாண்டர் ஜான் கென்னடி.



பிரகடனங்கள் வெளியிடுவது, பரிசுகள் வழங்குவது, விருந்துபசாரம் அளிப்பது எல்லாம் எல்லா நாட்டுத் தலைவர்களும்தான் செய்கிறார்கள். ஆனால் அமெரிக்க ஜனாதிபதியின் வாழ்வு இந்த ஜிலுஜிலுப்போடு நின்றுவிடவில்லை. பிரிட்டிஷ் மன்னரின் கௌரவமும், பிரதம மந்திரியின் அதிகாரமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர் அமெரிக்க ஜனாதிபதி என்று சொல்வார்கள்.

தேசிய நிர்வாகம், அதன் ஒழுக்கம், திறன் எல்லாவற்றுக்கும் ஜனாதிபதிதான் பொறுப்பு. சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் உட்பட எல்லாம் அவரது நியமனமே. சட்டங்கள் நிறைவேற்றுவதும் அவர் பெயரில்தான். பட்ஜெட் தயாரித்து, அமுல் செய்வது கூட அவரேதான். அப்புறம் இருக்கவே இருக்கிறது, அயல் நாட்டுக் கொள்கை நிர்ணயம். ஆனால் இதற்கு மட்டும் அவர் காங்கிரஸின் — நம் பார்லிமெண்ட் மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்களேன் — பெரும்பான்மை அங்கத்தினர்களின் சம்மதத்தைப் பெற வேண்டும்.

அமெரிக்காவில் ஜனாதிபதியேதான் சேனாதிபதியும். (Commander - in - chief) இவற்றோடு 1946-ம் ஆண்டிலிருந்து அவர் ''சுபிட்சத்தின் மானேஜர்'' (Manager of prosperity) என்பதாகப் புதியதொரு பொறுப்பும் பெற்றிருக்கிறார். **''ஒன்றோடொன்று போட்டியிட்டுச் சுதந்திரமான முறையில் முதலீடுகள் செய்யப்படுவதை வளர்க்கவும், வலியுறுத்தவுமே''** அவருக்கு இந்த அதிகாரம் அளித்திருப்பதாக அந்த ஆண்டு நிறைவேறிய அலுவல்—அமர்த்தல் சட்டம் கூறுகிறது.

காங்கிரஸின் மூன்றில் இரு பங்கினர் அவரை ஆட்சேபித்தால் ஒழிய அவர் காங்கிரஸ் நிறைவேற்றும் மசோதாக்களைக் கூட ரத்து செய்ய உரிமை பெற்றிருக்கிறார்.

இவ்வளவு சக்தி இருந்தும், எதிர்க் கட்சி, நீதிமன்றம், நாட்டுப் பொதுமக்கள், இதர உலக நாடுகள் இவை யாவற்றுக்கும் உரிய கௌரவத்தை அளித்துச் செயலாற்றும் பண்பு பெற்றிருப்பதால்தான் இன்று வரை—1789ம் ஆண்டு ஜார்ஜ் வாஷிங்டன் முதல் ஜனாதிபதியாகப் பதவி ஏற்றதிலிருந்து 172 ஆண்டுகளில்—ஆட்சி புரிந்துள்ள 34 ஜனாதிபதிகளில் ஒருவர் கூட ஏகாதிபத்திய தர்பார் நடத்தியதில்லை. தங்களுக்கு சர்வ வல்லமை இருப்பதாகக் கருதி 'எந்தத் துறையிலும் தலையிட்டுச் சட்டம் செய்யலாம் என்று



தந்தை ஜோசப் கென்னடியோடு ஜான் கென்னடி

அவர்கள் கருதுவதே இல்லை. அவர்கள் பலப்பல துறைகளைச் சேர்ந்த பலப்பல நிபுணர் குழுக்களுடன் ஆலோசனை செய்கிறார்கள். இதனால்தான் அமெரிக்க ஜனாதிபதியானவர் மக்களுடைய உணர்ச்சி, அபிலாஷை இவற்றின் ஓர் உருவகமாகவே கருதப்படுகிறார்.

இந்த மகோன்னத ஸ்தானத்தை இன்று பெற்றிருக்கிறார் கென்னடி. நாற்பத்து மூன்றே வயதில், அவர் இப் பதவிக்கு வருவதும், தேர்தலில் எதிர்க்கட்சி அபேட்சகரான ரிச்சர்ட் நிக்ஸனைக் கால்சதவிகிதத்துக்கும்குறைவான அதிகபட்ச வாக்குகளாலேயே வெற்றி கண்டிருப்பதும் இத் தேர்வுக்கு விசேஷ முக்கியத்துவம் அளித்துள்ளன. அதோடு, கத்தோலிக்கர் ஒருவர், அயர்லாந்து வம்சாவளியினர் ஒருவர், அமெரிக்க ஜனாதிபதியாகி இருப்பதும் இதுவே முதல் முறையாகும்.

இந்த ஜனாதிபதி பிறந்தது மாஸசூஸெட்ஸ் ராஜ்யத்து தனாதிபதி ஜோஸப் கென்னடியின் மகனாக. சுப தினத்தில், சுப ஜனனமாகத் தான் இருந்திருக்க வேண்டும். ராசியாதிபதிகள் வக்கரித்துக் கொள்ளாத நாள்தானே இன்று ராஜ்யாதிபதியாகவும் வந்திருக்கிறார்?

'குழந்தைப் பருவத்தைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கும், எல்லாக் குழந்தைகளையும் போல் இதுவும் அழுதும், சிரித்தும் ஆத்திரப் பட்டும்தானே இருக்கும்?' என்பீர்கள். அது தான் இல்லை. அடி நாளிலிருந்தே இந்தக் கென்னடி ஆர்ப்பரித்துச் சிரித்ததும் கிடையாதாம்; அதிகக் கோபமோ, சோகமோ கொண்டதும் கிடையாதாம். இன்றைக்கும் இவருடைய நிலைகுலையாமை, நெஞ்சுரம், அபரிமிதமான தன்நம்பிக்கை இவற்றைப் பற்றித்தான் அப்படிச் சொல்கிறார்கள். உணர்ச்சி வசப்பட்டாற் போல் சொல்மாரி பொழிவதும்மக்களைத்தட்டி எழுப்பத்தானும்.

இவருடன் பிறந்தவர்கள் எண்மர். இவர்களில் இவருக்கு இளையவரான ராபெர்ட் பிரான்ஸிஸ் கென்னடியைத்தான் இவர் அட்டர்னி ஜெனரலாக நியமித்திருக்கிறார்.

ஜோஸப் கென்னடி மிகவும் பரந்த மனப்பான்மை உள்ளவர். பெற்றோரும், குமந்தைகளும் – குழந்தைகள் என்றால் வாஸ்தவமாக அறியாப் பருவத்தினராக இருக்கையிலேயே— ஒருங்கு அமர்ந்து உலக விவகாரம்வரை சகல விஷயங்களும் அத்துப்படி செய்வார்கள். இதனாலேயே ஜானும் தானாகச் சிந்தித்து முடிவுகளுக்கு வரும் திறத்தைப் பெற்றான். தந்தை பிரிட்டனுக்கு ஸ்தானிகராக இருந்த காலத்தில் மகனுடைய அகில உலக ஈடுபாடு வளர்ச்சியுற்றது.

ஆரம்பப் பள்ளிப் படிப்பில் ஜான் வெகு துடியாக இல்லை. பள்ளிப் படிப்பான பின் லண்டனுக்குச் சென்றார். பிரபல சோஷலிஸ்ட் பேராசிரியர் ஹெரால்ட் ஜே. லாஸ்கியிடம் பொருளாதார சாஸ்திரத்தைப் பயின்றார். அமெரிக்கா திரும்பி ஹார்வர்டு சர்வகலாசாலையில் சேர்ந்தார். அரசியல் கலையில் சிறப்புப் பட்டம் பெற்றார். இதற்காக அவர் எழுதிய ''இங்கிலாந்து உறங்கியது ஏன்?'' (Why England Slept?) என்ற ஆய்வுக் கட்டுரையை விமரிசித்த லண்டன் டைம்ஸ் அனுபந்தம், ''இளைஞர் எழுதிய, ஆனால் வயோதிகர்களுக்கும் பெரிதும் அறிவு வளர்க்கும், நூல்'' என்று கூறிற்று என்றாலே போதும், நூலின் சிறப்புக்கு.

1941ம் ஆண்டு தமது இருபத்து நாலாவது வயதில் அமெரிக்கக் கப்பற் படையில் சேர்ந்தார் ஜான் கென்னடி. உலக மகா யுத்தத்திலும் பங்கு பற்றினார். அப்போதுதான் அவரது மனத் திட்பத்தையும் தன்னலமற்ற சேவா மனப்பான்மையையும் வெளிப்படுத்தும் அந்தச் சம்பவம் நடந்தது.

1943ம் ஆண்டு ஆகஸ்ட் இரண்டாம் தேதி. பஸிபிக் மகாசமுத்திரத்தின் தென் பாகத்திலே, சாலமன் தீவுகளுக்கருகே, ரோந்துப் படகொன்றைத் தலைமை தாங்கிச் செலுத்தி வருகிறார் லெப்டினென்ட் கென்னடி. திடுமென ஜப்பானிய நாசகாரிக் கப்பல் ஒன்று படகைத் தாக்குகிறது. அவ்வளவு தான்! படகு பிளந்து விடுகிறது இரண்டாக. ஒரு பாதி மூழ்கி விடுகிறது. மற்றப் பாதி மட்டும் தத்தளித்தபடி மிதக்கிறது. அதில் தான் கென்னடி இருக்கிறார். ஓர் அரை கண்டத்தையே ஆளப் பிறந்தவர் ஜல கண்டத்துக்கு ஆளாக முடியுமா? ஆனால் இருப்பதற்குள் தன் நிலை ஸ்வஸ்தமாக இருப்பதில் மட்டும் திருப்தி அடைந்து விடவில்லை கென்னடி. முழுகும் பகுதியிலுள்ளவர்களையும் தம்முடன் சேருமாறு கூவுகிறார்.



மகள் காரலினுடன் கென்னடி கம்பறி குதூகலித்திருக்கும் காட்சி.

அதோடு மட்டுமில்லை; தடாலென்று தளத்தில் விழுந்து தாமே பலத்த அடிக்கு ஆளாகியிருப்பவர், தம் உயிரைத் திருணமாகமதித்துக் காயத்துக்கு ஆளான வேறு இருவரைத் தாமே இந்தப் பாதிக்குச் சேர்ப்பித்திருக்கிறார். பின்னர் அந்தப் பாதியும் கைவிட்டபோது அவர்களில் ஒருவரைத் தம்முடனேயே பிணைத்துக் கொண்டு, மூன்று மைல்களுக்குக் கடலில் நீச்சல் அடித்துச் சென்று ஒரு தீவை அடைந்திருக்கிறார். அவருடைய நெஞ்சின் அந்த உரத்தைச் சொல்லவா? உடலின் வலிவைச் சொல்லவா? இதயத்தின் கனிவைச் சொல்லவா? இதற்காக அவருக்கு வீரப்பதக்கம் அளித்ததில் அந்தப் பதக்கமே அல்லவா தக்க ஹாரத்தில் முகப்பிடம் பெற்றுவிட்டது?

1945ல் போர் முடிந்தது: வீடு வந்தார்.

வாளை விடச் சக்தி வாய்ந்தது பேனா என்று சொல்வார்களே, அதன் சக்தியையும் பார்த்து விடுவோமே என்று எண்ணினாரோ என்னவோ, சர்வ தேசச் செய்தி ஸ்தாபனத்தில் நிருபராகச் சேர்ந்தார் கென்னடி. இன்று தம் தேர்தல் முடிவை அறிவதற்காக ஆயிரமாயிரம் நிருபர்களைத் துடிக்க வைத்த இவரே அன்று பிரிட்டனின் தேசியத் தேர்தல்களை 'ரிப்போர்ட்' செய்திருக்கிறார்.

பேனாவின் சக்தி இத்தொழிலில் சரியாக வெளிப்படவில்லை என்று கண்டு அதிலிருந்து விடுபட்டார் கென்னடி. இருந்தாலும் இப்பணியானது, மனச்சார்புகள் ஏதுமின்றி எப்பொருளையும் யாரார் வாயும் கேட்கும் பக்குவத்தை அவருக்கு உண்டாக்கி விட்டது.

உத்வேகமும், உயிர்த் துடிப்புமுள்ள கென்னடி நாட்டுக்கும், உலகுக்கும் உருப்படியான முறையில், செயலுருவில், பணியாற்றத் தீர்மானித்தார். 1946ல் காங்கிரஸின் கீழ்ச் சபையாகிய பிரதிநிதிகள் சபைத் தேர்தலில் ஜனநாயகக் கட்சி அபேட்சகராகப் போட்டியிட்டார். பெற்றார் வெற்றியும்! பின்னர் 1948, 1950, ஆகிய ஆண்டுகளிலும் தேர்தலுக்கு நின்று ஜயம் கண்டார். 1951-ல் இந்தியா உள்ளிட்ட பல கீழை நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தார். 1952-ல் மேல் சபையான செனட் தேர்தலில் போட்டியிட்டுப் பிரபல குடியரசுக் கட்சித் தலைவர் ஹென்ரி காபட் லாட்ஜைத் தோற்கடித்தார்.

1953-ல் தம்மைவிடப் பன்னிரண்டு வயது இளையவரான ஜாக்லினை மணம் புரிந்து கொண்டார் கென்னடி. அப்புறம் இரண்டு நீண்ட ஆண்டுகளுக்கு ஆஸ்பத்திரி வாசம். முதுகெலும்பில் இரண்டு முறை அறுவை சிகித்சை. எட்டாண்டுகளுக்குமுன் ரணகளத்தில் ஏற்பட்ட ரணம் உள்ளூற செய்த வினை!

அப்போது கிடைத்த வலுக்கட்டாய ஓய்வை மிகவும் உபயோககரமாகப் பயன்படுத்திக் கொண்டார் கென்னடி. 'வீரத்தில் சில பக்கக் காட்சிகள்' (Profiles in Courage) என்ற அற்புதமான வரலாற்று நூலை இவர் உருவாக்கியது அப்போதுதான். கட்சிக்காகவோ, சில வகுப்பினருக்காகவோ தங்கள் கொள்கைகளை விலை கூறாத எட்டு செனட்டர்களின் வாழ்க்கைச் சரிதமே இது. அமெரிக்காவின் தலைசிறந்த இலக்கிய கௌரவமாகிய புலிட்ஸர் பரிசை இந்நூலுக்காகவே தட்டிக் கொண்டார் கென்னடி.

அப்புறம் நடந்த கதை நாம் அறிந்ததே. உப ஜனாதிபதியாகவிருந்த குடியரசுக் கட்சி அபேட்சகர் நிக்ஸனை வென்று அமெரிக்க ஜனாதிபதியாகியிருக்கிறார் கென்னடி.

நிக்ஸனை விட இவர் அப்படி ஒன்றும் கணிசமான அளவுக்கு மக்கள் ஆதரவைப் பெறவில்லையே என்று தோன்றும். இருக்கலாம்; ஆனால் இவரைத் தேர்வு செய்தவர்கள் இவர் மீது வைத்துள்ள அளவுகடந்த அன்பை—காதலை என்று கூடச் சொல்லலாம்—கவனிக்காமலிருக்க முடியாது. தேர்தல் கூட்டங்களில் இவருடைய கையைக் குலுக்குவதற்காகச் சாரி சாரியாக அப்படி ஒரு மக்கள் காத்துக் கொண்டிருப்பார்களாம். கை குலுக்கியே இவர் விரல்கள் காய்ப்புக் காய்த்து, கொப்பளங்கள் கூட உண்டாகி விட்டன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். இதற்குக் காரணம் மக்கள் மீது இவர் வைத்துள்ள அளவற்ற விசுவாசம்தான்.

அமெரிக்காவில் குடியரசு, ஜனநாயகக் கட்சிகளுக்கிடையே லட்சியத்தில் அப்படி ஒன்றும் பெரிய வித்தியாசம் கிடையாது; செல்லும் வழியில்தான் சில வேற்றுமைகள்.

உலக அமைதியை நிலைநாட்டக் கென்னடி தம் ஹோதாவை எவ்வாறு பயன்படுத்திக் கொள்வார் என்பது போகப் போகத்தான் தெரிய வேண்டும்.

தாய்நாட்டுக்குள் சீரிய திருத்தங்கள் செய்வார் கென்னடி என நம்பலாம்: நீக்ரோ ஒருவருக்கு போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் பதவி அளிக்க முன் வந்தவராயிற்றே!

இனி நம் தாய்நாட்டைப் பார்ப்போம். இந்தியா போன்ற பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடுகளுக்கு அமெரிக்கா பேருதவி புரிந்து, அவை கம்யூனிஸத்தில் சிக்காமல் காக்கவேண்டும் என்று பல காலமாகவே வற்புறுத்தி வருபவர் கென்னடி. நம் சர்க்காரும் இரண்டு கைகளையும் நீட்டி அந்நிய உதவிபெறத் தயார்தான். எனினும், சோஷலிஸ்டுக் கல்வி பயின்ற இவரே, சென்ற ஆண்டு இந்திய - அமெரிக்க நிபுணர் கூட்டமொன்றில் பேசியபோது ''மனித வாழ்வின் மாண்பு, **தனி நபர் சுதந்திரம்** இவற்றுக்கு ஒத்த ஒரு வழி''யைச் சிலாகித்துப் பேசியதாலும், நம் சர்க்கார் நிறுவனங்களின் வேலை முறை எந்த இலட்சணத்தில் உள்ளது என்பது பற்றி அறிக்கை சமர்ப்பித்த பேராசிரியர் கால் ப்ரைத்தை இந்திய ஸ்தானிகராக நியமித்திருப்பதாலும், கண்மூடித்தனமாக 'உதவி' செய்து, இந்நாடு அமெரிக்காவுக்கு அடி வருட வேண்டி வராமல் பார்த்துக் கொள்வார் என்று நம்பலாம் அல்லவா?

அந்த நம்பிக்கையோடு, வெள்ளை மாளிகையில் புகுந்துள்ள கென்னடியை இந்த இதழ் அட்டையில் வெளியிட்டு வாழ்த்துகிறோம். அந்த இல்லத்துக்குரிய இல்லாள்—இல்லச் சிங்காரிப்பில்கூட 'தண்மை, அமைதி, நளினம்' இவற்றை விரும்பும் பண்புள்ள 'அமெரிக்க பிரதம சீமாட்டி'—கென்னடியின் அழகு மனைவி ஜாக்லினின், அருமை மகள் மூன்று பிராயத்து காரலின், அதிருஷ்டக்காரப் பயல் இளைய ஜான்—அப்பா ஜனாதிபதியானபின் பிறந்தவனல்லவா அவன்?—ஆகியோரையும் வாழ்த்துகிறோம்.

## இது ஒரு அறிவிப்பே தவிர பிராஸ்பெக்டஸ் அல்ல

1956ம் ஆண்டு கம்பெனிகள் சட்டத்தின் 60வது பிரிவுபடி முழு பிராஸ்பெக்டஸின் நகல், அதில் கண்டுள்ள இதர தஸ்தாவேஜுகளுடன் பதிவு செய்வதற்காகச் சென்னை மாநில கம்பெனிகளின் ரிஜிஸ்ட்ரார் என்ற அதிகாரியிடம் முறைப்படி தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது.

இதில் குறிப்பிட்டுள்ளபடி மூலதனம் வசூலிப்பதற்கு மத்திய அரசாங்கத்தின் அனுமதியை இக்கம்பெனி பெற்றுள்ளது. இந்தப் புதிய தொழில் ஸ்தாபனத்தை நிறுவி நடத்த மத்திய சர்க்காரிடமிருந்து ஒரு லைசென்சும் பெறப்பட்டிருக்கிறது.

இந்தக் கம்பெனியின் தற்போதுள்ள சாதாரண பங்குகளும் பிரிபரன்ஸ் பங்குகளும் சென்னை ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு லிமிடெட் என்ற பங்கு பேரச்சாலையில் வியாபாரத்துக்கென அதிகாரபூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளன. இப்போது வழங்கப்படும் சாதாரண பங்குகளையும் பிரிபரன்ஸ் பங்குகளையும்கூட வியாபாரத்துக்கு உரிமையுள்ளதாகச் செய்ய உரித்த காலத்தில் சென்னை ஸ்டாக் எக்ஸ்சேஞ்சுக்கு மனு செய்து கொள்ளப்படும்.

**பங்கு பணத்துடன் அனுப்பப்படும் விண்ணப்பங்கள் 27-1-61 வெள்ளிக்கிழமை காலை 10 மணியிலிருந்து 4-2-61 சனிக்கிழமை காலை 10 மணி வரையிலும் அங்கீகரிக்கப்படும். பொது மக்களுக்கு வழங்கப்பட்ட பங்குத் தொகை ஏறக்குறைய முழு அளவுக்கு வசூலாகி விட்டதெனத் தெரிந்தாலும், 4-2-61க்கு முன்னதாகவே விண்ணப்பங்கள் வாங்கிக்கொள்ளுவதைக் கம்பெனி நிறுத்திக்கொள்ளும். எனினும், 1-2-61 புதன்கிழமை காலை 10 மணி வரையிலும் விண்ணப்பங்களை நிச்சயமாக ஏற்றுக்கொள்ளும்.**

# மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்

[(1956-ம் வருஷ கம்பெனிச் சட்டத்தின்கீழ் இணைக்கப்பட்டது)]

## மூலதன விவரங்கள் :

**அதிகாரம் பெற்ற மூலதனம்**

| | | |
|---|---|---|
| 1,50,000 | சாதாரணப் பங்குகள் ஒவ்வொன்றும் ரூபாய் நூறு சம மதிப்புள்ளவை ... | ரூ. 1,50,00,000 |
| 40,000 | இருப்பிப் பெறக்கூடிய கூட்டு வட்டி விகிதம் கொண்ட ஒவ்வொன்றும் ரூபாய் நூறு சம மதிப்புள்ள பிரிபரன்ஸ் பங்குகள் வட்டி விகிதம் 9·3 சதவிகிதம். இது கம்பெனி வருமான வரி அல்லாதது. ஆனால் அவ்வப்போது அமுலிலிருக்கும் வருமான வரி விகிதப்படி கழிக்கப்படும். ... | 40,00,000 |
| 10,000 | வருமான வரி நீங்கலாக நிகரமாக 6¾ சதவிகிதம் கூட்டு வட்டி விகிதம் கொண்ட ஒவ்வொன்றும் ரூ. 100 சம மதிப்புள்ள பிரிபரன்ஸ் பங்குகள் ... | 10,00,000 |
| | ஆக மொத்தம் | ரூ. 2,00,00,000 |

**ஏற்கெனவே வினியோகிக்கப்பட்டது**

| | | |
|---|---|---|
| 40,000 | சாதாரண பங்குகள் ஒவ்வொன்றும் ரூபாய் நூறு சம மதிப்புள்ளது. ... | 40,00,000 |
| 10,000 | வருமான வரி நீங்கலாக 6¾ சத விகிதம் நிகரமாகக் கூட்டு வட்டி கொண்ட ஒவ்வொன்றும் ரூபாய் நூறு சம மதிப்புள்ள பிரிபரன்ஸ் பங்குகள் | 10,00,000 |
| | ஆக மொத்தம் | ரூ. 50,00,000 |

**தற்போது வழங்கப்படுவது**

| | | |
|---|---|---|
| 50,000 | ஒவ்வொன்றும் ரூபாய் நூறு மதிப்புள்ள சாதாரண பங்குகள். ... | 50,00,000 |
| 20,000 | ஒவ்வொன்றும் ரூபாய் நூறு மதிப்புள்ளதும் 9·3 சதவிகிதம் கூட்டு வட்டி கொண்டதும் ரத்து செய்யப்படக்கூடியதுமான பிரிபரன்ஸ் பங்குகள். ... | 20,00,000 |
| | ஆக மொத்தம் | ரூ. 70,00,000 |

### பிரிபரன்ஸ் பங்குகளின் உரிமைகள்

ஏற்கெனவே வினியோகிக்கப்பட்டுள்ள 10,000 பிரிபரன்ஸ் பங்குதாரர்களும் இப்போது வழங்கப்படும் 40,000 பிரிபரன்ஸ் பங்குதாரர்களும் மேலே குறிப்பிட்ட விகிதப்படி கூட்டு வட்டி டிவிடெண்டாக முன்னதாகப் பெறுவதற்கு உரிமையுள்ளவர்கள். கம்பெனியின் லாபத்திலிருந்து, செலுத்தப்பட்டுள்ள பங்குப் பணத்துக்கு பங்கு வழங்கப்பட்ட தேதியிலிருந்து டிவிடெண்டு கொடுக்கப்படும். கம்பெனி கலைக்கப்படுமானால், பிரிபரன்ஸ் பங்குதாரர்கள் தங்களுடைய மூலதனத்தை, சாதாரணப் பங்குதாரர்களின் மூலதனத்துக்கு முன்னதாகத் திருப்பிப் பெறுவதற்கு உரிமை உள்ளவர்கள்.

### பிரிபரன்ஸ் பங்குகளை மீட்பதற்கான ஷரத்துகள்

வழங்கப்பட்ட தேதியிலிருந்து பத்து வருஷத்துக்குப் பிறகு, ஆனால் பதினைந்து வருஷத்துக்கு முன்னதாக, பிரிபரன்ஸ் பங்குகளின் தொகை திருப்பிக் கொடுத்துவிடப்படும். ஆறு வருஷத்துக்குப் பிறகிலிருந்தே இவ்வாறு திருப்பிக் கொடுக்கப்படும் நடவடிக்கை, கம்பெனியின் இஷ்டத்தின்பேரில் மேற்கொள்ளப்படலாம். புது டில்லியிலுள்ள இண்டஸ்டிரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா மட்டும் தாங்கள் வைத்திருக்கும் பிரிபரன்ஸ் பங்குகளுக்குச் சீட்டுக் குலுக்கிப் போடாமல், முன்னதாகவே மூலதனத்தைத் திரும்பிப் பெற உரிமை உண்டு.

### சாதாரண பங்குகளின் உரிமைகள்

**இப்போது வழங்கப்படும் சாதாரண பங்குகள், ஏற்கனவே வழங்கப்பட்டுள்ள சாதாரண பங்குகளுடன் எல்லா அம்சங்களிலும் சம உரிமை பெற்றவை.**

### பங்குகள் வினியோகிக்கப்படும் விவரங்கள்

புதிதாக இப்போது அளிக்கப்படும் சாதாரண பங்குகளும், பிரிபரன்ஸ் பங்குகளும் ஏற்கெனவேயுள்ள பங்குதாரர்களுக்கு முதன் முதலாக வழங்கப்பட்டது. அவர்கள் 5289 சாதாரண பங்குகளும், 2941 திருப்பிப் பெறக்கூடிய கூட்டு வட்டி கொண்ட பிரிபரன்ஸ் பங்குகளும், ஆக 8,23,000 ரூபாய் மதிப்புள்ள பங்குகள் தங்களுக்கென்று எடுத்துக் கொண்டு விட்டனர். மிருதியாக உள்ளவை 44,711 நூறுரூபாய் சம மதிப்புள்ள சாதாரண பங்குகளும், 17059 நூறு ரூபாய் சம மதிப்புள்ள ரத்து செய்யப்படும் கூட்டு வட்டி கொண்ட பிரிபரன்ஸ் பங்குகளும்; இவற்றின் மொத்த மதிப்பு 61,77,000 ரூபாய்.

இவற்றில் 27,500 நூறு ரூபாய் சம மதிப்புள்ள சாதாரண பங்குகளும், 7,500 நூறு ரூபாய் சம மதிப்புள்ள ரத்து செய்யப்படும் கூட்டு வட்டி கொண்ட பிரிபரன்ஸ் பங்குகளும் தாங்கள் எடுத்துக் கொள்ளுவதாக சென்னை இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட் என்ற ஸ்தாபனமும், 2,500 நூறு ரூபாய் சம மதிப்புள்ள ரத்து செய்யப்படும் கூட்டு வட்டி கொண்ட பிரிபரன்ஸ் பங்குகள் இந்திய ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷனும் வாக்களித்து மனுவும் செய்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் கோரிய பங்குகள் முழுவதும் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

### மொத்த வெளியீட்டான ரூ. 70 லக்ஷம் வசூலுக்குக் கீழ்க்கண்டவாறு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது

| உத்தரவாதமளித்த (அண்டர்ரைட்டர்கள்) கம்பெனியின் பெயர் | திருப்பக்கூடிய கியூமுலேடிவ் பிரிபரன்ஸ் பங்குகள் | சாதாரணப் பங்குகள் | மொத்த மதிப்பு ரூ. |
|---|---|---|---|
| மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட் | 7,500 | 27,500 | 35,00,000 |
| இண்டஸ்ட்ரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா | 10,000 | — | 10,00,000 |
| லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா | 2,500 | 7,500 | 10,00,000 |
| இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட் | — | 7,500 | 7,50,000 |
| ப்ரோக்கர்கள் (கூட்டாக)<br>(1) சித்ரா & கோ., சென்னை<br>(2) மெக்கனுக்கி & கோ., சென்னை<br>(3) சோமயாஜுலு & கோ., சென்னை<br>(4) பாட்டர்ஸன் & கோ., சென்னை<br>(5) P. R. சுப்ரமணியம், பம்பாய் | — | 7,500 | 7,50,000 |
| | 20 000 | 50,000 | 70,00,000 |

## தற்போது பொதுமக்களுக்கு வழங்கப்படுவது

இப்போது பொதுமக்களுக்கு வழங்கப்படுவது 17,211 நூறு ரூபாய் சம மதிப்புள்ள சாதாரண பங்குகளும், 7059 நூறு ரூபாய் சம மதிப்புள்ள கூட்டு வட்டி கொண்ட ரத்து செய்யப்படும் பிரிபரன்ஸ் பங்குகளும், ஆக 24,27.000 ரூபாய் மதிப்புள்ள பங்குகள் மட்டுமே. பிராஸ்பெக்டஸில் கண்டுள்ள ஷரத்துக்களின்படி இப் பங்குகளுக்கு விண்ணப்பம் செய்து கொள்ளுபவர்கள், விண்ணப்பத்துடன் பங்கு ஒன்றுக்கு ரூ. 50 வீதம் பணம் செலுத்த வேண்டும். மிகுதி ரூ. 50, கம்பெனியின் டைரக்டர்கள் உசிதம்போல் தேவைப்படும்போது கோரிப் பெற்றுக் கொள்ளுவார்கள். ஆனால் பங்குகள் வழங்கப்பட்ட தேதியிலிருந்து ஆறு மாதத்துக்கு முன்னதாக இந்த மிகுதி 50 ரூபாயைக் கோரமாட்டார்கள்.

இந்திய ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷன், 7,50,000 ரூபாய் மொத்த மதிப்புள்ள, 7,500 நூறு ரூபாய் சாதாரணப் பங்குகளுக்கு விண்ணப்பங்கள் அனுப்பி வைக்க ஒப்புக் கொண்டிருக்கின்றனர். பங்கு வழங்குவதில் இந்த விண்ணப்பங்கள் பொதுமக்களிடமிருந்து வரும் விண்ணப்பங்களுடன் சமமாகவே கருதப்பட்டு, பங்குகள் கொடுக்கப்படும்.

## டைரக்டர்கள் :

1. **திரு டி. கே. பழனியப்பன், ஐ.ஏ.எஸ்.**
   *சென்னை அரசாங்கக் காரியதரிசி*
   *தொழில், கூட்டுறவு, தொழிலாளர்*
   *இலாக்கா, சென்னை.*
2. **திரு பி. ஏ. ஸி. ராமசாமி ராஜா**
   *தொழிலதிபர்*
   *''ராமமந்திரம்'', ராஜபாளையம்.*
3. **திரு எல். அழகுசுந்தரம் செட்டியார்**
   *தொழிலதிபர், பசுமலை, மதுரை.*
4. **திரு கே. வெங்கடஸ்வாமி நாயுடு**
   *பி. ஏ. பி. எல்., அட்வகேட்*
   *94-C, ஷெனாய் நகர், சென்னை-30*
5. **திரு ஏ. எஸ். கே. ரத்தினசாமி நாடார்**
   *68, விக்டோரியா எக்ஸ்டென்ஷன் ரோடு*
   *தூத்துக்குடி*
6. **திரு பி. ஆர். ராமசுப்ரமணிய ராஜா**
   *பி.எஸ்.ஸி.,*
   *''ராமமந்திரம்'', ராஜபாளையம்.*
7. **திரு கே. திருவேங்கட முதலியார், பி.ஏ.**
   *34, இரண்டாவது மெயின் ரோடு*
   *காந்திநகர், அடையாறு*
   *சென்னை-20*
8. **திரு எஸ். சுப்புஸ்வாமி அய்யர்**
   *ஜமீன்தார், ''ஸ்ரீநிலயம்''*
   *வண்ணார்பேட்டை, திருநெல்வேலி-3*
9. **ஸ்ரீமதி வி. பி. லீலாவதி அம்மகாரு**
   *ஜமீன்தாரிணி*
   *பெரிய அரண்மனை*
   *துறையூர், திருச்சி மாவட்டம்*
10. **திரு ஏ. எம். எஸ். பெரியசாமி**
    *ரப்பர் தோட்டத் தொழிலதிபர்*
    *நெ. 3, சுங்கை சிபுட், பெராக், மலாயா.*
11. **திரு வி. எஸ். மணி, பி.ஏ.பி.எல்.,**
    *நிலச்சுவான்தார் அண்டு பாங்கர்*
    *மிட்டா மாளிகை*
    *கிருஷ்ணாபுரம், கடையநல்லூர்.*
12. **திரு கே. இ. எஸ். எல்லப்பன்**
    *நிலச்சுவான்தார் அண்டு பாங்கர்*
    *பங்களாத் தெரு, கோவில்பட்டி.*
13. **திரு கே. எஸ். மஹம்மத் அரீப்**
    *கண்ட்ராக்டர்*
    *199, அங்கப்பநாயக்கன் தெரு, சென்னை-1*
14. **திரு டி. கே. திருமலையப்ப முதலியார்**
    *உரிமையாளர்*
    *காந்திமதி மெடிகல் ஸ்டோர்ஸ்*
    *திருநெல்வேலி ஜங்ஷன்.*

## மானேஜிங் ஏஜெண்டுகள்

**மெஸர்ஸ் பி. ஏ. ஸி. ராமசாமி ராஜா அண்டு கம்பெனி,**
*''ராம மந்திரம்'', ராஜபாளையம் (தென்னிந்தியா)*

## பாங்கர்கள்

**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா,** *ராஜபாளையம்*
**இந்தியன் பாங்க் லிமிடெட்,** *சென்னை*
**இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்,** *சென்னை*
**ஸெண்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்,** *ராஜபாளையம்*
**ராஜபாளையம் கமர்ஷியல் பாங்க் பிரைவேட் லிமிடெட்,** *ராஜபாளையம்*

## ஆடிட்டர்கள்

**மெஸர்ஸ் கிருஷ்ணசுவாமி அண்டு ஜகன்னாதன்,**
*சார்ட்டர்ட் அக்கவுண்டண்டுகள், கோயமுத்தூர்*

ரிஜிஸ்டர்டு காரியாலயம்

"ராமமந்திரம்", ராஜபாளையம்

தொழிற்சாலை காரியாலயம்

துலுக்கப்பட்டி, தென் ரெயில்வே,
சாத்தூர் தாலூகா, ராமநாதபுரம் மாவட்டம்

வெளியீட்டுத் தொகை வசூலுக்கு உத்தரவாதம் அளித்துள்ளவர்கள்
(அண்டர்ரைட்டர்கள்)

மதராஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிட்., *சென்னை*
இண்டஸ்டிரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா, *புதுடில்லி*
லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா, *பம்பாய்*
இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட், *சென்னை*
மெஸர்ஸ் சித்ரா அண்டு கம்பெனி, *சென்னை*
மெஸர்ஸ் ஸோமயாஜுலு அண்டு கம்பெனி, *சென்னை*
மெஸர்ஸ் மெக்கஞக்கி அண்டு கம்பெனி, *சென்னை*
மெஸர்ஸ் பாட்டர்ஸன் அண்டு கம்பெனி, *சென்னை*
மெஸர்ஸ் பி. ஆர். சுப்பிரமணியம், *பம்பாய்*

வெளியீட்டுக்குப் புரோக்கர்கள்

சித்ரா அண்டு கம்பெனி, *சென்னை*
ஸோமயாஜுலு அண்டு கம்பெனி, *சென்னை*
மெக்கஞக்கி அண்டு கம்பெனி, *சென்னை*
பாட்டர்ஸன் அண்டு கம்பெனி, *சென்னை*
ஜே. ஆர். மோத்திவாலா அண்டு கம்பெனி, *பம்பாய்*
ஏ. பி. பண்டிட் அண்டு கம்பெனி, *பம்பாய்*
மெஸர்ஸ் பி. ஆர். சுப்பிரமணியம், *பம்பாய்*
மெஸர்ஸ் எம். நஞ்சப்பய்ய ஜாகீர்தார், *பெங்களூர்*
எம்.ஆர். தாவன் அண்டு கம்பெனி, *புதுடில்லி*

கம்பெனியின் தொழில் வளர்ச்சி

முக்கியமாக சிமெண்டும் அதற்குச் சம்பந்தப்பட்ட இதர பொருள்களையும் உற்பத்தி செய்வதற்காக இந்தக் கம்பெனி 1957, ஜூலை மாதம் 3-ல் ஆரம்பிக்கப்பட்டது. ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள துலுக்கப்பட்டி என்னுமிடத்தில் இதற்கென ஒரு தொழிற்சாலை நிறுவப்பட்டுள்ளது. நாளொன்றுக்கு 600 டன் சிமெண்ட் உற்பத்தி செய்யும் அனுமதியை சர்க்கார் இக் கம்பெனிக்கு அளித்திருக்கிறது. இதை இரண்டு கட்டங்களில் பூர்த்தி செய்யத் திட்டமிடப்பட்டுச் செயல்கள் நடைபெற்று வருகின்றன. முதல் கட்டத்தில் நாளொன்றுக்கு 200/250 டன் சிமெண்ட் உற்பத்தியாகும். இந்த முதல் கட்டம் இப்போது பூர்த்தியாகி விட்டது. இதற்கு 50 லட்சம் ரூபாய் மூலதனம் எழுப்பப்பட்டது. இதில் சென்னை அரசாங்கம் தங்களது நம்பிக்கையைக் காட்டும் பொருட்டு எடுத்துக் கொண்ட ரூ. 10 லட்சத்தைத் தவிர, மிகுதி ரூ. 40 லட்சத்தையும் பகிரங்க விளம்பரம் ஏதும் இல்லாமலே தங்களுடைய நண்பர்களிடமிருந்து மானேஜிங் ஏஜெண்டுகளின் முக்கிய பாகஸ்தரான திரு பி. ஏ. ஸி. ராமசாமி ராஜா அவர்கள் தம் செல்வாக்கினால் வசூல் செய்து விட்டார்கள். பற்றாக்குறைக்குப் புதுடில்லியிலுள்ள இண்டஸ்ட்ரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷனிடமிருந்து கடன் எழுப்பி முதல் கட்ட வேலை பூர்த்தி ஆகிவிட்டது. உற்பத்தியும் வெகு சீக்கிரத்திலேயே ஆரம்பிக்க இருக்கிறது. இதிலிருந்து உற்பத்தியாகும் சிமெண்டும் மார்க்கெட்டுக்கு விரைவில் விற்பனைக்கு வந்து விடும்.

இப்போது இரண்டாவது கட்ட வேலை தொடங்கப்பட்டுள்ளது. இதற்காக யந்திரங்களின் சப்ளையும் அதை ஸ்தலத்தில் நிறுவி அமைத்துக் கொடுக்கும் பணியும் பிரபல செக்கோஸ்லோவேகியா கம்பெனியான ஸ்கோடா ஸ்தாபனத்தாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கான ஏற்பாடுகள் திட்டப்படி நடைபெற்றுவருகின்றன. இவ்வாண்டு இறுதிக்குள் இந்த இரண்டாவது கட்ட வேலை பூர்த்தியாகி நாளொன்றுக்கு 600 டன் சிமெண்டு உற்பத்தியாகும் நிலையை இத் தொழிற்சாலை அடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த இரண்டாவது கட்ட வேலைக்குத் தேவைப்படும் மூலதனம் ரூ. 120 லட்சம். இந்தத் தொகையை, இப்போது வழங்கப்படும் பங்குகள் மூலம் வசூலாகும் ரூ. 70 லட்சத்தையும், இண்டஸ்ட்ரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷனிடமிருந்து நீண்டகாலக் கடனாகக் கிடைக்க

விருக்கும் ரூ. 50 லட்சத்தையும் கொண்டு பூர்த்தி செய்து கொள்ள உத்தேசித்திருக்கிறது. இதைத் தவிர நடைமுறைச் செலவுகளுக்காக சுமார் ரூ. 20 லட்சம் வேண்டியிருக்கும். இந்த ரூ. 20 லட்சத்தைப் பூர்த்தியாயுள்ள முதல் கட்ட உற்பத்தியிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்தும், பாங்கர்களிடமிருந்து கிடைக்கும் கடன்களிலிருந்தும் சமாளித்துக் கொள்ள உத்தேசித்துள்ளது.

### கமிஷன் விவரங்கள்

சந்தாத் தொகை வசூலுக்கு உத்தரவாதம் அளித்துள்ளவர்களுக்கு இரண்டரை சத வீதம் கமிஷன் கொடுக்கப்படும். புரோக்கர்களுக்கும் பாங்கர்களுக்கும் அவரவர்கள் அனுப்பி வைக்கும் விண்ணப்பங்களுக்காக வழங்கப்பட்ட பங்குகள் மீது ஒரு சதம் கமிஷன் தரப்படும்.

### மானேஜிங் ஏஜெண்டுகள்

**பி. ஏ. ஸி. ராமசாமி ராஜா அண்டு கம்பெனி** 30-1-1958 லிருந்து 15 ஆண்டுகளுக்கு இக் கம்பெனியின் மானேஜிங் ஏஜெண்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இதற்கு மத்திய அரசாங்கம் அவர்களுடைய 4-10-1957-ல் அனுப்பியுள்ள 41 (914) CMN/57 இலக்க முள்ள கடித மூலம் அனுமதி அளித்திருக்கிறது. இவர்களுக்கு ஊதியமாகக் கம்பெனியின் வருஷவாரி நிகர லாபத்தில் 10 சதம் அளிக்கப்படும்.

### தஸ்தாவேஜுகள் பரிசிலனை

இக் கம்பெனியின் அமைப்பு விதிகளும் நோக்க ஞாபிதாவும், கடந்த மூன்று ஆண்டு களுக்கான தணிக்கை செய்யப்பட்ட லாப நஷ்ட கணக்குகளும் சிட்டாவும், ஆடிட்டர்களின் ரிப்போர்ட்டுகளும், மூலதனக் கட்டுப்பாட்டு அதிகாரி வழங்கிய அனுமதியும், தொழிற்சாலை அமைப்பதற்கு இந்திய அரசாங்கம் அளித்துள்ள அனுமதியும், மற்றும் பிராஸ்பெக்டஸில் கண்டுள்ள இதர ஒப்பந்தங்கள் முதலிய தஸ்தாவேஜுகளும் கம்பெனியின் பதிவுக் காரியா லயத்தில் இந்த அறிக்கை வெளியான தேதியிலிருந்து பதினைந்து நாட்களுக்கு, அல்லது பங்குத் தொகை வசூல் முடிவு பெறும் வரையில் பொது மக்களின் பார்வைக்கும் பரிசீலனைக்கும் வைக்கப்பட்டிருக்கின்றன. தேவையுள்ளவர்கள் இவற்றை அங்கே பார்த்துக் கொள்ளலாம்.

### விண்ணப்பங்களும் பங்கு வழங்குதலும்

சாதாரண பங்குகளுக்கும் பிரிபரன்ஸ் பங்குகளுக்கும் செய்து கொள்ளப்படும் விண்ணப் பங்கள் ஒவ்வொன்றும் குறைந்தபட்சமாக 5 பங்குகளுக்காவது இருக்க வேண்டும். விண்ணப்பங்கள் பிராஸ்பெக்டஸுடன் இணைக்கப்பட்டுள்ள அச்சுத் தாள்களிலேயே இருக்க வேண்டும். இவற்றைக் கம்பெனியின் பதிவு காரியாலயத்திலிருந்தும், கம்பெனியின் பாங் கர்கள், புரோக்கர்கள், உத்திரவாதம் அளித்துள்ளவர்கள் ஆகியோரிடமிருந்தும் பெற்று கொள்ளலாம். பாங்கர்களைப் பொறுத்தமட்டில், மனுக்களையும் வசூல் தொகைகளையும் கீழ்கண்ட பாங்குகளில் ஏற்றுக் கொள்ள ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

(1) ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா—ராஜபாளையம், சென்னை, பம்பாய்

(2) இந்தியன் பாங்க் லிமிடெட்—சென்னை மற்றும் சென்னை மாநிலத்திலுள்ள எல்லாக் கிளைகளிலும், பம்பாய், கல்கத்தா, புது டில்லிக் கிளைகளிலும்;

(3) இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்—சென்னை, சென்னை மாநிலத்திலுள்ள எல்லாக் கிளைகளிலும் பம்பாய், கல்கத்தா, புது டில்லி கிளைகளிலும் ;

(4) சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா லிட்.,- ராஜபாளையம், சென்னை, பம்பாய் கிளைகள்.

(5) ராஜபாளையம் கமர்ஷியல் பாங்க் பிரைவேட் லிமிடெட், ராஜபாளையம்.

விண்ணப்பங்களும், மனு செய்துகொள்ளும் ஒவ்வொரு சாதாரண அல்லது பிரிபரன்ஸ் பங்குக்கும் ரூ. 50 வீதம் கூடிய தொகையும் கம்பெனியின் பதிவு காரியாலயத்திலோ, அல்லது பிராஸ்பெக்டஸில் கண்டுள்ள கம்பெனியின் பாங்கர்கள், புரோக்கர்கள் உத்தரவாதம் அளித்துள்ளவர்கள் — ஆகியோர்களின் காரியாலயங்களிலோ, வசூல் தேதி முடிவுக்குள்ளோ அதற்கு முன்னரோ சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

மேலே குறிப்பிட்டுள்ள ஊர்களைத் தவிர இதர ஊர்களிலுள்ள பாங்குகள்மீது கொடுக் கப்படும் செக்குகளோ, டிராப்டுகளோ சந்தாத் தொகையுடன் பாங்கு கமிஷனுக்காக ⅛ சதம் அல்லது குறைந்தபட்சமாக 75 நயே பைசே கூடுதலாக இருக்கவேண்டும். செக்குகளும், டிராப்டுகளும் "**மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்**" என்போருக்குக் கொடுக்கப்படும்படி எழுதப்பட்டு கிராஸ் செய்யப்பட்டிருக்க வேண்டும். ஒவ்வொரு விண்ணப்பத்திற்கும் தனித் தனி செக்கோ, டிராப்டோ அனுப்ப வேண்டும்.

நம்மாழ்வார் பாடிய

# பக்தி நெறி

ராஜாஜி

55

யானும் தானாய் ஒழிந்தானை—
  யாதும், எவர்க்கும் முன்னோனை—
தானும், சிவனும், பிரமனும்
  ஆகிப் பணைத்த தனிமுதலை—
தேனும், பாலும், கன்னலும்,
  அமுதும் ஆகித் தித்தித்து, என்
ஊனில், உயிரில், உணர்வினில்
  நின்ற ஒன்றை—உணர்ந்தேனே

யானும் தானாய் ஒழிந்தானை — ஆழ்வாரின் ஞானத்தின் பெருக்கால் அவரும் சர்வேசுவரனும் இரண்டற ஒன்றாகிப் போனார்கள். தான் பிரம்மமாகி விட்டதாகச் சொல்வதில் கொஞ்சம் குற்றமுண்டு — அகம்பாவமாகும் — ஆனபடியால் 'அவன் என்னைத் தன்னோடு இரண்டறச் சேர்த்துத் தன்மயமாக்கிக் கொண்டு விட்டான்' என்கிறார்

தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனி முதலை-சர்வேசுவரனை நாராயணன் மும்மூர்த்திகளாகப் பணைத்தான். பணைதல்—கிளை விட்டு வளர்தல். தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்தித்து — ஞானியினுடைய ஆனந்தத்தைச் சொல்லுகிறார். தம் சரீரத்திலும் உயிரிலும் அறிவிலும் பரந்து நிற்கும் பரம் பொருளை உணர்ந்தேன் என்கிறார்.

இங்கே அத்துவைதக் கொள்கையினின்று இது வேறு பட்டதாக வைஷ்ணவ வியாக்யாதாக்கள் கஷ்டப்பட்டு வியாக்கியானம் செய்வார்கள்.

* * *

இன்னும் மேலே சொல்லுகிறார்:

நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு
  அதன் நுண் நேர்மை—அதுஇது
                என்று—
ஒன்றும் ஒருவர்க்கு, உணரலாகாது:
  உணர்ந்தும், மேலும் காண்பு—அரிது:
சென்று சென்று, பரம்பரம் ஆய்,
  யாதும் இன்றித் தேய்ந்து அற்று,
நன்று, தீது என்று அறிவு—அரிதாய்,
  நன்றாய் ஞானம் கடந்ததே.

ஞானம் வளர்ந்து முற்றும் முறையைச் சொல்லுகிறார். ஞானம் முற்றி உச்ச நிலை அடைந்தால் அதுவே மோக்ஷம் என்கிறார்.

நன்றாய் ஞானம் கடந்துபோய்,
  நல்இந்திரியம் எல்லாம் ஈர்த்து,
ஒன்றாய்க் கிடந்த அரும் பெரும் பாழ்
  உலப்புஇல் - அதனை உணர்ந்து
                உணர்ந்து,
சென்று ஆங்கு, இன்பத் துன்பங்கள்
  செற்றுக் களைந்து, பசை அற்றால்,
அன்றே அப்போதே வீடு:
  அதுவே வீடு—வீடாமே.

ஞானம் கடந்து போய்—ஞானத்தினால் காணப்படும் விஷயங்களைத் தாண்டிச் சென்று; ஈர்த்து—கழித்து.

ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் உலப்பு இல் பாழ் அதனை உணர்ந்து என்று கூட்டிப் படிக்கவும்.

மூன்றாவது அடியில் வரும் 'சென்று' என்கிற வினையெச்சம் முதலடியிலுள்ள 'போய்' என்பதோடும் 'ஈர்த்து' என்பதோடும் சேரும்.

ஞானம் முற்றி இந்திரியங்களைத் திரட்டி அடக்கி விட்ட பின் 'நான்' என்பது முற்றும் அழிந்து உலகம் முழுதும் ஓர் அரும்பெரும் 'பாழ்' (வெளி) ஆகும். அது உலப்பு (இறுதி, முடிவு) இல்லாத பாழ்.

அப்போது இன்பத்துக்கும் துன்பத்துக்கும் வேற்றுமை அற்றுப் போகும். எல்லாப் பசையும் அற்றுப் போகும்.

அப்படி அற்றபோது வேறு ஒரு செயலும் இடம் மாற்றலும் காலம் தாண்டுவதும் இன்றி, "அன்றே அப்போதே அதுவே" வீடு (மோக்ஷம்).

"ஜீவன் முக்த" நிலையைப் பற்றிய விளக்கம் இந்தப் பாசுரங்களில் காண்கிறோம். பகவத் கீதை 5-ம் அத்தியாயத்தில் கீதாசாரியன் செய்யும் உபதேசம் இந்தப் பாசுரத்திலும் அடுத்து வரும் பாசுரங்களிலும் ஆழ்வார் திருவாயால் சொல்லப்படுகிறது. முக்கியமாக அந்த அத்தி

யாயம் 23-28 சுலோகங்களை, பாசுரங்களுடன் படித்து ஒப்பு நோக்கலாம்.

* * *

அதுவே வீடு வீடுபேற்று
இன்பம் தானும் அது : தேறி,
எதுவே தானும் பற்று இன்றி,
யாதும் இலிகள் ஆகிற்கில்,
அதுவே வீடு : வீடுபேற்று
இன்பம் தானும்அது : தேறுது,
எதுவே வீடு? ஏது இன்பம்? என்று
எய்த்தார்—எய்த்தார், எய்த்தாரே.

ஒருவன் தன் கர்மயோக அப்பியாசத்தாலும் பக்தியாலும் உறுதியாலும் சாந்தி நிலை அடைந்து விட்டால் அவனுக்கு எல்லாப் பேதங்களும் அற்றுப் போகும். அவன் கண்ணுக்கு மிக்க படிப்பும் பண்பாடும் அடைந்த பிராமணனும் தாழ் குலத்தில் பிறந்து படிப்பும் பண்பாடும் அடையாதவனும் சமம் ஆவார். ஊமைப் பிராணிகளையும், பேசி உலாவும் மக்களைப் போலவே கருதுவான். என்ன ஆகாரம் என்ன நியமம் என்று விசாரித்து யாரையும் வேறுபடுத்த மாட்டான். அவ்வளவு தூரம் அவனுடைய அபேத நிலையும் சாந்தமும் சென்று, இன்பமாயினும் துன்பமாயினும் சமமாகப் பொறுப்பவனாகி விட்டால் இம்மையிலேயே அவன் விடுதலை பெற்றவனாகி விடுவான். அவனுடைய நிலை ஆனந்த நிலை. அவனுடைய சுகத்துக்குக் குறைவும் அழிவும் இல்லை. ஜீவன் முக்த நிலை இதுவே. இது கீதை 5வது அத்தியாயத்து உபதேசமும் ஆழ்வார் உபதேசமும்.

இந்த நிலையில் உண்டான விடுதலையே மோக்ஷமும் இன்பமும் என்று தெளிந்து எந்தப் பொருளிலும் ஆசை இல்லாமல் அவற்றின் ருசி வாசனையும் அற்றவர்களானால் அதுவே மோக்ஷம். அதுவே உண்மை இன்பம். இப்படித் தெளியாது மோக்ஷம் என்பது யாது? மோக்ஷ இன்பம் என்பது யாது? என்று ஆராய்பவர்கள் தெளிவு பெறாமல் ஏமாற்றமடைந்து இளைப்பட்டே போவர்கள். பாசுரத்திலுள்ள சொற்களின் அழுத்தம் கவனிக்கத் தக்கது.

கீதை இரண்டாம் அத்தியாயம் கடைசி சுலோகத்தில் கண்ணன் அருச்சுனனுக்குச் சொன்னதாவது:

> அந்த அவல் இடிக்கும் பெண் ஒரே சமயத்தில் எத்தனை காரியங்களில் ஈடுபட்டிருக்கிறாள், பார்! ஒரு கையால் அவலைக் கிளறி விட்டுக் கொண்டே மறு கையால் அதைக் குத்துகிறாள்; குழந்தையை அணைத்துப் பாலூட்டுகிறாள்; அந்த அவலை விற்கப் பேரமும் செய்து கொண்டிருக்கிறாள். இத்தனை வேலை இருந்தாலும் உலக்கை கையில் விழுந்து புண்படுத்தாதிருக்க வேண்டுமென்பதிலேயே அவள் மனம் முழுதும் வெகு கவனமாக இருக்கிறது.
>
> உலக விவகாரங்கள் நாலுவற்றிலும் நீ ஈடுபடலாம். எனினும் துன்பமானது உன்னைப் புண்படுத்தாமல் இருப்பதற்காக, எவ்வேலையில் முனைந்திருந்தாலும், சதா பகவானை ஸ்மரித்தபடி இருப்பாய்.
>
> — ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

"பார்த்தனே! இது ஜீவன் முக்த நிலை. இந்த நிலையை அடைந்தவனுக்கு வாழ்க்கையில் மயக்கம் என்பது இல்லை. அந்திகாலத்திலாவது இந்த நிலையை அடைந்தவன் பிரும்ம நிர்வாணம் அடைவான்."

மரணத் தறுவாயில் இந்த நிலையை உண்மையில் அடைந்தாலும் போதும் என்பது கீதாசாரியன் வாக்குறுதி. இதையே ஆழ்வார் நமக்கு எடுத்துச் சொல்லுகிறார் :

எய்த்தார், எய்த்தார், எய்த்தார்
என்று, இல்லத்தாரும் புறத்தாரும்
மொய்த்து, ஆங்கு அலறி முயங்க, தாம்
போகும்போது, உன்மத்தர்போல்
பித்தே ஏறி, அநுராகம்
பொழியும்போது, எம் பெம்மா
னோடு
ஒத்தே சென்று, அங்கு உள்ளம்
கூடக் கூடிற்றாகில்—நல்லுறைப்பே.

உடலை விட்டுப் பிரிகிற காலத்தில் நம்மை ஏமாற்றி விட்டுப் போய் விட்டானே என்று வீட்டிலுள்ளவர்களும் சுற்றத்தார் எல்லாரும் ஒன்று கூடிக் கட்டிக் கொண்டு அழுது உன்மத்தர்களைப் போல் நெஞ்சு கலங்கி அநுராகம் பொழியும்போது, அந்தக் கலக்கத்தை வென்று தெளிவு அடைந்து எம்பெருமானிடத்தில் பக்தி உண்டாகி அவன்பால் மனம் கூடலும் நல்லதேயாகும்.

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 9. பூங்கா விநோதம்!

பி. பி. ஸி. நிலையத்தில் ஒருநாள் பிற்பகல் முக்கியமான ஓர் ஒலிப்பதிவு இருந்தது. ஒரு பெரிய அரசாங்க அதிகாரியின் மனைவி தமது பேச்சை ஒலிப்பதிவு செய்து கொள்வதற்காகப் பிற்பகல் மூன்றரை மணிக்குப் 'புஷ் ஹவுஸ்' என்ற நிலையத்துக்கு வர வேண்டும் என்று ஏற்பாடு!

இங்கிலாந்தில் எல்லா மக்களுமே நேரக் கணக்குப்படி தங்கள் கடமைகளைச் செய்வதில் மிகவும் கருத்தாக இருப்பார்கள். ஆனால் அன்று மூன்றரை மணியாகியும் அந்த அம்மாளைக் காணோம். நாங்கள் திகைப்போடு காத்துக் கொண்டிருந்தோம். மூன்றே முக்கால் மணிக்கு அவர் வந்து சேர்ந்தார். ''மன்னிக்க வேண்டும்! இன்று நான் வருகிற பாதையெல்லாம் ஒரே கூட்டம். வெளி நாட்டிலிருந்து ஒரு பெரிய தலைவர் லண்டனுக்கு வருவதால் வழியெல்லாம் ஜனங்கள்! நானே காரை ஓட்டிக் கொண்டு வருவதில் தாமதமாகிவிட்டது!'' என்று மிகுந்த வருத்தத்தோடு தமது காலதாமதத்தை விளக்கினார் அந்த அம்மையார்!

ஒலிப்பதிவு முடிந்ததும் அவரை வழியனுப்புவதற்காக நிலையத்துக்கு வெளியே வந்தோம். என்ன ஆச்சரியம்! அவருடைய காரைக் காணவில்லை! எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! இத்தனை பெரிய நகரத்தில் இந்தச் சத்தியபுரியிலே, இப்படியும் ஒரு திருட்டா என்று நான் யோசிப்பதற்குள், அந்த அம்மாள் மெதுவாகக் கேட்டார்: ''அடடா! இது கார்களை நிறுத்தக் கூடாத இடமோ?'' என்று! என்னோடு இருந்த பி. பி. ஸி. நண்பர், 'இதோ கோடு போட்டிருக்கிறதே! நீங்கள் இந்த எல்லையைத் தாண்டிக் கொண்டு வந்து காரை நிறுத்தி விட்டீர்களோ?'' என்று கேட்டார்.

''ஆமாம்! வந்து சேர்ந்த அவசரத்தில், நேரமாகிவிட்டதே என்ற குழப்பத்தில், நான் எல்லைக்கோடுகளைப் பார்க்க மறந்துவிட்டேன்! என்ன முட்டாள்தனம்!'' என்று மூன்று தடவை கை விரல்களை உதறிக் கொண்டார்.

லண்டன் நகரத்தின் சாலைகளில் எங்கெங்கு கார்களை நிறுத்தலாம், நிறுத்தக் கூடாது என்பதற்குக் கோடுகள் பெரிதாகப் போட்டிருப்பார்கள்.

''அப்படியானால் உங்கள் கார் என்ன ஆயிற்று?'' என்று கேட்டேன்.

''காரைப் பிடித்துக் கொண்டு போயிருப்பார்கள் போலீஸ்காரர்கள்!'' என்றார் அவர்.

''எங்கே?'' என்று கேட்டேன்.

''இந்தியாவில் மாடுகளை அடைப்பதற்குப் 'பவுண்ட்' உண்டல்லவா? அப்படி அத்து மீறிய கார்களை அடைப்பதற்கு என்று இங்கிருந்து பத்துமைல் தொலைவில் ஒரு 'பவுண்ட்' இருக்கிறது. அங்கே என் காரை ''டோ'' செய்து இழுத்துக் கொண்டு போயிருப்பார்கள்! எனக்கு வேணும் வேணும்! நன்றாக வேணும்!!'' என்றார் அந்த அம்மணி.

''உங்கள் காரைக் கூடவா?'' என்று கேட்டேன். ஏனென்றால், பெரிய அரசாங்கப் பதவிகளில் இருக்கும் பிரதானிகளின் கார்களில் நம்பரோடு சேர்த்து ஓர் அடையாளக் குறியும் இருக்கும், காரின் முக்கியத்துவத்தைக் காட்ட!



லண்டன் போலீஸ்

''என் காரைத்தான் நிச்சயம் கொண்டு போவார்கள். மற்றவர்களுக்கு முன் மாதிரியாக நடக்க வேண்டிய நானே இப்படிப் போக்குவரத்துவிதிகளை மீறினால் எப்படி?'' என்றார் அவர்.

வாடகைக் கார் ஒன்றிலே நாங்கள் ஏறிக் கொண்டு பத்து மைல்கள் கடந்து கார்களின் பவுண்டுக்குச் சென்றால், அந்த அம்மாளின் கார் பத்திரமாக அங்கே இருந்தது. எவ்விதமான தர்க்கமும் செய்யாமல் தம்முடைய தவறுதலுக்கு மன்னிப்புக் கேட்

டுக் கொண்டு, காரை அங்கிருந்து எடுத்து, எங்களையும் அதிலே ஏற்றிக் கொண்டு ''புஷ் ஹவுஸி''ல் கொண்டு வந்து விட்டு விட்டுத் தமது வீட்டைப் பார்க்கச் சென்றார், இங்கிலாந்தில் மிக முக்கியமான பதவியிலேயுள்ள ஒரு பிரதானியின் மனைவி!

இந்தச் சம்பவத்தை இத்தனை ஆதாரபூர்வமாக நானே நேருக்கு நேர் பார்த்திராவிட்டால், நம்பியே இருக்க மாட்டேன்!

லண்டன் நகரத்தின் போலீஸ் கண்காணிப்பிலே இத்தனை கண்டிப்பு உள்ளது. அதுமட்டுமில்லை; அந்த அம்மாள் உண்மையாகவே வருந்தி மன்னிப்புக் கேட்டதும், நிலைமையைப் புரிந்து கொண்டு காரைத் திரும்ப எடுத்துப் போக அனுமதித்தார்களே, அந்தப் பெருந்தன்மையும் அவ்வளவு உயர்வானது.

பெருந்தன்மை என்ற அந்த வார்த்தைக்கு உரையும் உரைகல்லுமாக விளங்குகிறார்கள் லண்டன் போலீஸ் படையினர்!

தெருக்களில் திசை தெரியாவிட்டாலோ, ஏதாவது ஓர் இடம் எங்கிருக்கிறது என்று மறந்து போய்விட்டாலோ, அல்லது முக்கியமான ஒரு சாமான் வாங்குவதற்கு எந்தக் கடைக்குப் போக வேண்டும் என்று புரியாவிட்டாலோ, தயங்கிக் கொண்டே நிற்க வேண்டியதில்லை. பக்கத்திலேயுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றோ, அல்லது தெருவிலே காண்கிற ஒரு போலீஸ் பிரமுகரிடம் அணுகியோ விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். மிகுந்த பரிவோடு அவர்கள் நமக்கு உதவி செய்கிறார்கள். எல்லாத் தகவல்களும் தெரிந்தும் வைத்திருக்கிறார்கள்.

தவறு செய்பவர்களிடம் கண்டிப்பும், விஷயம் தெரியாதவர்களிடம் அனுதாபமும் இரண்டும் இணைந்து செயல்புரிகிற ஒரு வர்க்கந்தான் லண்டன் போலீஸ் வர்க்கம்.

இத்தனை இருந்துங்கூட லண்டனில் சென்ற ஜூலை மாதம் 27ந் தேதி வெளியான ஒரு பத்திரிகைச் செய்தியில் சில விசித்திரமான தகவல்களைப் படித்தேன்.

நம்மூரில் நமது போலீஸ் கமிஷனர் 1960ம் ஆண்டில் குற்றங்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்திருக்கிறது என்றும், கடந்த ஆண்டு ஒரு வெற்றிகரமான ஆண்டு என்றும், பத்திரிகை நிருபர்களிடம் உவகையோடு சொன்ன செய்தியை இந்த மாதத்தின் ஆரம்பத்தில் படித்தோம் அல்லவா? ஆனால் இங்கிலாந்தில் இப்பொழுது பயங்கரக் குற்றங்களின் எண்ணிக்கை படிப்படியாக அதிகரித்து வருவதாகச் சென்ற ஜூலை மாதம் லண்டனிலே படித்து வியப்படைந்தேன். இதன் காரணம் போலீஸின் கவனக் குறைவா? இல்லை. தேவைகளும் நவீன வசதிகளும் அதிகரிக்கிற வேகத்தில், சில தவிர்க்க முடியாத தீய சக்திகள் ஆதிக்கம் செலுத்த முனைவதும் நாகரிக வளர்ச்சியில் ஒரு கட்டம். இந்தப் பெரும் சிக்கலைக் குறித்துப் பல ஆராய்ச்சிகள் செய்து வருகிறார்கள். மனிதன் ஏன் குற்றம் செய்கிறான் என்பதுபற்றி விதம் விதமான சர்ச்சைகள் நடந்து வருகின்றன. என்றாலும் பொதுவாக லண்டன் நகரத்தில் போலீஸ் ஜவான்களின் உடையும், அவர்கள் மக்களிடம் நடந்துகொள்ளுகிற முறையும் கவர்ச்சிகரமாகவே உள்ளன!



''சோப் பாக்ஸ்'' சொற்பொழிவாளர்கள்

நான் லண்டன் போய்ச் சேர்ந்தபோது இங்கிலாந்து நாட்டில் இளவேனிற் காலம். இந்தப் பருவத்திலும், இதன் பிறகு வந்த கோடையிலும், மாலை நேரங்களில் நல்ல வெயில் இருந்தது! இருட்டுவதற்குச் சில நாட்களில் இரவு பத்து மணி பதினொரு மணி வரை கூட ஆயிற்று. அதுவரை சுகமான ஒரு வெயில் அடித்தது! இரவு என்று நம்புவதற்கு இரண்டு கண்களையும் மூடிக்கொள்ள வேண்டும்! அப்பொழுதுதான் இருட்டும்! மற்றப்படி பட்டப்பகல்தான்!

இருட்டுவதற்கு அத்தனை நேரமான காரணத்தால், பூங்காக்களிலும் புல்வெளிகளிலும் மாலை நேரங்களில் ஏராளமான மக்கள் கூடியிருக்கக் கண்டேன். குளிர்காலம் வந்துவிட்டால் இந்த வெயில் வசதி இராது; நீக்குழியைப் பார்த்துப் போய்விடவேண்டியதுதான். எனவே 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்பதுபோல், ''வெயில் உள்ளபோதே வெளியிலே போய்க்கொள்'' என்று ஆங்கில மக்கள் பூங்காக்களை நன்றாக நூற்றுக்கு நூறு அனுபவிக்கிறார்கள், கோடைக்காலத்தில்!

நம்முடைய தமிழ் இலக்கியங்களில் ''அகம்'' என்றும் ''புறம்'' என்றும் இலக்கணங்கள் வகுத்து, நம் சங்கப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள் அல்லவா? இப்படிப்பட்ட இலக்கியக் காட்சிகளை, 'அகநானூறு', 'கலித்தொகை' போன்ற நூல்களிலே வருகிற வர்ணனைகளை, லண்டன் பூங்காக்களிலே ஒரு சில மாறுபாடுகளுடன் சாதாரணமாகக் காணலாம்.

ஒரு நாள் லண்டனின் புகழ் பெற்ற பூங்கா ஒன்றிலே நானும் மேனாட்டு இசை நிபுணர் ஒருவரும் நடந்து செல்லும்போது, நம்மூர் அக்காக் குருவி போன்று ஒரு குருவி கூப்பிடுவதைக் கேட்டுத் திகைத்து நின்றேன்! என் திகைப்பைப் புரிந்து கொண்ட அந்த இசைவாணர் அருகிலே இருந்த ஒரு பெரிய ஏரியின் கரைக்கு என்னை அழைத்துச் சென்று, இன்னொரு குருவியின் இசையைக் கேட்கும்படி செய்தார். அது ஸ்வர சுத்தமான குரலிலே 'கமப' 'கமப' என்று மூன்று ஸ்வரங்களை ஆரோகணமாகக் கூவியது! இந்த வகையான ஒலிகளிலிருந்துதான் 'பியானோ'வையும், 'ஹார்ப்' என்ற யாழையும் மனிதன் கண்டுபிடித்தான் என்று என் நண்பர் ஒரு ஆராய்ச்சிச் சொற்பொழிவே நிகழ்த்தினார்!

மறு பக்கம் திரும்பினேன். ''ஸர்ப்பன்டைன் ரிவர்'' என்ற ஆற்றிலே படகுகள் மிதந்தன. ஆறு என்று பெயர் இருந்தாலும், அது ஆறு இல்லை! பாம்பு நெளிவது போல் தோற்றம் தருகிற ஒரு செயற்கை ஏரிதான் அது. கோடைக்காலத்தில் தோணிகள் விடுவதற்கு ஏற்ற முறையில் பூங்காவுக்குள்ளே அதைத் தோண்டியிருக்கிறார்கள். இந்த ''ஸர்ப்பன்டைன் ரிவர்'' என்ற ஓடையையும் அதிலே தோணிகள் ஓட்டி விளையாடிய ''இளவட்டங்களை''யும் பார்த்தபோது, பாரதியாரின் ''சிந்து நதியின்மிசை நிலவினிலே'' என்ற பாட்டு எனக்கு ஞாபகம் வந்தது. ஆனால் ''நிலவினிலே'' என்பதற்குப் பதிலாக இங்கே ''வெயிலினிலே'' என்று பாட வேண்டும்! நமக்கு நிலவு எப்படியோ அப்படித்தான் ஆங்கிலேயர்களுக்கு வெயில்!

இரவு பத்து மணி வரை வெயில் என்ற நிலவு காய்கிற வேளையிலே, 'பார்க்' என்னும் புல்வெளியிலே, 'ரிவர்' என்கிற ஏரியிலே, படகுகளை ஓட்டி விளையாடுவது என்பது கோடைக் காலத்துக்கு என்றே ஆங்கிலேயர்கள் முன்கூட்டித் திட்டமிட்டு ஏற்பாடு செய்துகொள்கிற பொழுதுபோக்கு.

ஆமாம், பொழுதுபோக்குக்களையும் விடுமுறை நாட்களையும் ஒரு திட்டத்தின்படியே செலவிடுகிறார்கள் ஆங்கில மக்கள்.

இங்கிலாந்து நாட்டின் அலுவலகங்களிலே சனியும் ஞாயிறும் விடுமுறை நாட்கள்! மற்ற ஐந்து நாட்களிலும் வேலையிலேயே கவனமாக இருப்பார்கள். இந்த இரண்டு நாட்களிலுமோ என்றால், ஓய்விலேயே கருத்தாக இருப்பார்கள்! சனி ஞாயிறுகளில் ஆங்கிலேயர்களை அவர்கள் வீட்டிலே சென்று காணுவது என்பது மிகவும் அரிது. தங்களுக்கும் தங்கள் மனைவி மக்களுக்கும் என்று இந்த இரண்டு நாட்களையும் ஒதுக்கிக் கொள்ளுகிறார்கள். இந்த ஓய்வைத் தவிர வேறு பணிகளில் அவர்கள் சனி ஞாயிறுகளில் ஈடுபடுவதில்லை. அலுவலையும் கேளிக்கையையும் அத்தனை கணக்காக வகுத்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே, சனி ஞாயிறு நாட்களில், பூங்காக்களிலே திருவிழாக் கூட்டம் போன்று ''ஜே ஜே'' என்று இருக்கும்! குழந்தைகள் மொய்த்துக் கொண்டு கூத்தாடுவார்கள். சிறு சிறு பொம்மைப் படகுகளில் 'பெட்ரோல்' விட்டு ஓட்டுவதும், கரையில் இருந்து கொண்டே 'ரடார்' என்ற சாதனத்தின் மூலம் வண்ணப்படகுகளை இந்தக் குழந்தைகள் இயக்குவதும் ஒரு கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்! சிறு வயதில் இப்படி இயந்திரப் பொம்மைகளோடு பழகுகிற குழந்தைகள்தான் பெரியவர்கள் ஆனதும், பெரிய இயந்திரங்களையே கண்டுபிடித்துவிடுகிறார்கள்.

பூங்காக்களின் இந்தக் களியாட்டங்கள் தவிர 'ஹைட்பார்க்' என்ற பூங்காவின் ஒரு கோடியிலே விடுமுறை நாட்களின் மாலை நேரங்களிலே ''ஸோப் பாக்ஸ்'' சொற்பொழிவாளர்கள் (Soap box orators) என்ற பிரசங்கிகளைக் காணலாம். ''மார்பிள் ஆர்ச்''க்கு அருகிலே கிறிஸ்துவ சமயப் பிரசாரங்களை மிகுந்த கடமை யுணர்ச்சியோடு செய்யும் உபந்நியாசகர்கள் ஒரு பக்கம்! அகில உலகத்தையும் கலக்கக்கூடிய பெரும் பிரச்னைகளையெல்லாம் சாதிக்காய்ப் பெட்டிகளுக்கு மேல் ஏறி நின்றுகொண்டு ''விளாசுகிற'' சண்டப் பிரசண்டர்கள் ஒரு பக்கம்! அங்கங்கே ''ஸோப் பாக்ஸ்''ஸைச் சுற்றி நூற்றுக்கணக்கான மக்கள் சூழ்ந்து நின்று கேள்விமாரிகள் பொழிவதும், மின்வெட்டுப் பதில்கள் பாய்வதுமாக வாண வேடிக்கைகள் நடந்து கொண்டிருப்பதைப் பார்க்கலாம். இந்த 'ஸோப் பாக்ஸ்' சொற்பொழிவாளர்களில் பல ரகங்கள் உண்டு! கடல்மடை திறந்தாற்போல் அடுக்கு மொழிகளை வாரி இறைக்கும் சொற்கொண்டல்கள், பளிச்சுப் பளிச்சென்று கன்னத்திலே அறைவது போலப் பதில் கொடுக்கும் மின்னல் வீரர்கள், நிதானமாக ஆராய்ந்து வார்த்தைகளை ஒவ்வொன்றாய்ச் செதுக்குகிற சிந்தனைச் சிற்பிகள், கையையும் காலையும் ஆட்டி மல் யுத்தம் செய்யும் சண்டியர்கள் — இப்படிப் பல மாதிரிகளைப் பார்க்கலாம்! இந்தக் கூட்டங்களுக்கு மத்தியிலே இலை மறைவு காய் மறைவாக இரகசியக் காவலாளர்களும் சாதாரண உடையிலே நடமாடுவார்கள். என்றாலும் பேச்சுச் சுதந்திரம் தாராளமாக உண்டு. வானத்திலிருந்து பாதாளம் வரையில் எதைப்பற்றி வேண்டுமானாலும் எப்படியும் பேசலாம். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை: அரச குடும்பத்தையும், அரசியையும் பற்றி மட்டும் ஆட்சேபகரமாகப் பேசக்கூடாது. பேசினால் காவலாளர்கள் பிடித்துக்கொண்டு போய் விடுவார்கள். இதுதான் சட்டம்! இந்தச் சட்டம் ஒருபுறமிருக்க, ஆங்கில மக்களின் ராஜ விசுவாசம் அப்படி யாரையும் பேச விடுவதில்லை!

இத்தனை பேச்சுக்களையும் கேட்டுக் களைத்துப் போய்விட்டால், அங்கங்கே நடைபாதைகளில் இரும்புப் பசுக்கள் உண்டு! அதாவது இயந்திரங்கள்! அவற்றிலே காசைப் போட்டோமானால், கீழேயுள்ள ஒரு வட்டத்தில் சுத்தமான பசும்பால் ஓர் அட்டைத் தம்ளரில் குதித்துக் கொண்டு வந்து நிற்கும். அதை யெடுத்துக் குடித்து விட்டு, அட்டையைத் தொட்டியில் எறிந்துவிட்டுக் களைப்புத் தீர்ந்த உற்சாகத்தில் மேலே நடக்கலாம்.

'இயந்திரத்தில் பால் வருகிறதா?' என்று கேட்கத் தோன்றுகிறதோ? பால் என்ன, காப்பியே வருகிறது! ஆம்!! நான் முதன் முதலில் ஆக்ஸ்போர்டுக்குப் புறப்பட்டபோது காலை எட்டு மணி. அந்த நேரத்துக்கு இந்தியா க்ளப்பிலிருந்து பதினைந்து மைல் தாண்டி வந்து நான் பஸ் பிடிக்க வேண்டும் என்றால் எத்தனை மணிக்கு ஓட்டலிலிருந்து புறப்பட்டிருப்பேன், பார்த்துக் கொள்ளுங்கள். 'கோச்' என்று அழைக்கப்படும் பஸ் புறப்படுகிற மத்திய நிலையத்துக்கு வந்துதான், அங்குள்ள இயந்திரத்திலிருந்து காப்பியைக் 'கறந்து' சாப்பிட்டேன்! சாப்பிட்டுவிட்டு, அன்றிரவே லண்டனுக்குத் திரும்பிவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு ஆக்ஸ்போர்ட் நோக்கிச் சென்றேன். (தொடரும்)




சென்னை மயிலாப்பூரிலுள்ள ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜத்தின் இசை மண்டபத்தைச் சென்ற 4-1-61 அன்று ஸ்ரீ டி. டி. கிருஷ்ண மாச்சாரியார் திறந்து வைத்தார். இந்த மண்டபம் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் சென்னையில் பல சபாக்களில் செய்த கச்சேரிகளின் மூலம் வசூலான பதினையிரம் ரூபாயைக் கொண்டு கட்டப் பெற்றது. சமாஜத்தின் காரிய தரிசிகளான ஸ்ரீ மன்னார்குடி சாம்ப சிவமும், ஸ்ரீ பார்த்தசாரதியும் விழாவுக்கு வந்திருந்த சங்கீத வித்வான்களை வரவேற்றதுடன், மண்டபத்துக்கு நிதி உதவிய சதாசிவம் தம்பதிக்கும், சென்னை சங்கீத சபைகளுக்கும், லாப நோக்கம் இன்றி மண்டபத்தை நிர்மாணித்துக் கொடுத்த ஸ்ரீ சிட்னிஸுக்கும், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கும் நன்றி தெரிவித்தனர். இந்த வருஷம் ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் ஆராதனை புது இசை மண்டபத்தில் நடந்தது.

1. சங்கீத வித்வான்களும் பிரமுகர்களும் வருகை. 2. தியாகராஜ உத்சவத்தன்று வீதி பஜனை. 3. விழாவுக்கு வந்திருந்தவர்கள். 4. ஸ்ரீ டி. டி. கே. யின் விழா உரை. 5. ஸ்ரீ தியாகராஜரின் ஆராதனையைப் பஞ்சரத்தினக் கீர்த்தனைகள் பாடிக் கொண்டாடினர்.



# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## ஈரல் குலைக் கட்டிகளுக்கு

### வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும் சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரைக் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| கரூர் | 1 | 9 to 11 காலை | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| நாமக்கல் | 1 | 2 to 3 மாலை | டவுன் மெடிகல் ஹால், பரமாதி ரோடு |
| சேலம் | 2 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | சாந்திநிகேதன் லாட்ஜ் (கோயமுத்தூர் லாட்ஜ் பிராஞ்ச்) |
| பவானி | 3 | 9 to 10 காலை | எம்.எல்.செட்டியார் & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| ஈரோடு | 3 | 11 to 12 பகல் | நவபவனம் லாட்ஜிங் (கோஷா ஆஸ்பத்திரி எதிரில்) |
| திருப்பூர் | 3 | 3 to 5 மாலை | ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயம்புத்தூர் | 4 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ஈஸ்வர் & கோ., கெமிஸ்ட்ஸ்<br>நாடார் மான்ஷன், ரங்கை கவுடர் தெரு |
| பொள்ளாச்சி | 5 | 9 to 11 காலை | எல். எஸ். மணி & கோ., கெமிஸ்ட்ஸ் |
| உடுமலைப்பேட்டை | 5 | 4 to 5 மாலை | ராஜேந்திரா & கோ., மெடிகல் ஷாப் |
| பழனி | 6 | 9 to 11 காலை | ஷண்முகானந்தா பவன், ரயில்வே பீடர்ஸ் ரோடு |
| திண்டுக்கல் | 6 | 3 to 5 மாலை | சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மதுரை | 7 | 9 to 12 பகல்<br>4 to 6 மாலை | டி.என்.சி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ் கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| | 8 | 9 to 11 காலை | |
| | 21 | 9 to 12 பகல் | |
| விருதுநகர் | 9 | 8 to 9 காலை | சரவணமுத்து பிள்ளை சத்திரம் மதுரை ரோடு |
| கோயில்பட்டி | 9 | 10½ to 12 பகல் | தனலக்ஷ்மி மெடிகல் மார்ட், கெமிஸ்ட்ஸ் |
| தூத்துக்குடி | 9 | 3 to 5 மாலை | வி. எஸ். சங்கரலிங்கம் பிள்ளை தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி ஜங். | 10 | 8 to 12 பகல்<br>3 to 5 மாலை | சந்திர விலாஸ் ஹோட்டல் திருநெல்வேலி ஜங்ஷன் |
| திருச்செந்தூர் | 11 | 9 to 11 காலை | விநாயக சுப்ரமணியம், கர்ணம், மேல ரத வீதி |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | 3 to 5 மாலை | எஸ். கோமதிநாயகம் பிள்ளை மெடிகல் ஷாப் |
| அம்பாசமுத்திரம் | 12 | 9 to 11 காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| தென்காசி | 12 | 3 to 5 மாலை | எஸ். கிருஷ்ணா & கோ., மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ராஜபாளையம் | 13 | 9 to 11 காலை | வி. எஸ். திருப்பதிராஜா, ஜெனரல் மெர்ச்சண்ட் |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 13 | 12½ to 1½ மாலை | பி. கே. அஸ்ஸன் ராவுத்தர் சன்ஸ் கெமிஸ்ட்ஸ் |
| சிவகங்கை | 14 | 9 to 11 காலை | மீனாட்சி & கோ., கெமிஸ்ட்ஸ் |
| தேவகோட்டை | 14 | 3 to 5 மாலை | ஸ்ரீ மீனாட்சி ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| காரைக்குடி | 15 | 9 to 12 பகல்<br>3 to 5 மாலை | ஏ வி. [illegible] சன்ஸ் டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| புதுப்பட்டி | 16 | 9 to 11 காலை | கலைமகள் நூல் நிலையம், கெமிஸ்ட்ஸ் |
| புதுக்கோட்டை | 16 | 3 to 5 மாலை | வஸந்தா லாட்ஜ் |
| அரியலூர் | 17 | 11 to 12 பகல் | லட்சுமி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் பெரிய பஜார் தெரு |
| ராமநாதபுரம் | 22 | 9 to 11 காலை | ராஜன் மெடிகல் ஹால், கெமிஸ்ட்ஸ் |
| சித்தூர் | 30 | 9 to 11 காலை | ஓரியண்டல் லாட்ஜ், ஹை ரோடு |

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# குருதேவரின் குரல்

பேராசிரியர்: அ. சீநிவாசராகவன்

## தெய்வம் பிறந்த கதை

**தா**யைப் பார்த்துக் குழந்தை கேட்கிறது :

' அம்மா, நான் எங்கிருந்து வந்தேன் ?'

தாயின் உள்ளம் சிலிர்க்கிறது. அவள் சிரித்துக் கொண்டு பதில் அளிக்கிறாள் :

'உன்னை அப்பா போய், கடைத் தெருவிலே வாங்கிக் கொண்டு வந்தார்.'

'அப்படீன்னா, நானும் போய் ஒரு பாப்பா வாங்கிட்டு வரட்டுமா ? காசு கொடு, அம்மா ! கடைத்தெருவுக்குப் போய், நல்ல பாப்பாவாய்ப் பார்த்து வாங்கிட்டு வரேன்' என்கிறது குழந்தை.

'சரி, அப்புறம் போகலாம். இப்போ உன் பொம்மைப் பாப்பாவை வைத்து விளையாடு, என்ன?' என்று பொம்மையை எடுத்து நீட்டுகிறாள் தாய்.

'வாடீ கண்ணு' என்று பொம்மைக்கு வரவேற்புக் கூறி, அதை எடுத்துக் கொண்டு விளையாடப் போகிறது குழந்தை.

அதைப் பார்த்து நிற்கும் தாயின் நெஞ்சு விம்மி நிறைகிறது. அவள் நினைவு எங்கெங்கெல்லாமோ போகிறது.

'எங்கிருந்து வந்தேன் ?' என்று கேட்ட குழந்தைக்கு ஏதோ பதில் சொல்லி அனுப்பியாகிவிட்டது. ஆனால், உண்மையில், இந்தக் குழந்தை எங்கிருந்து வந்தது? எங்கிருந்து வரவில்லை? என்னுடைய உயிர், என்னுடைய உடல், என்னுடைய வாழ்நாள் இவற்றின் ஒவ்வொரு அணுவிலும் அல்லவா, பிறப்பதற்கு முன் என் குழந்தை இருந்து வந்தது? எந்த இடம் என்று எதைக் குறிப்பிட்டுச் சொல்வது? எப்படிச் சொல்வது? குழந்தைக்கு விளங்குமா? எனக்கே விளங்கவில்லையே !

இப்படியெல்லாம் எண்ணமிடும் தாய், தான் கன்னிப் பெண்ணாய், சிறுமியாய் விளையாடிய நாட்களை நினைத்துப் பார்க்கிறாள் : பொம்மைகளை வைத்துக் கொண்டு, மண் வீடு கட்டி, ஏதேதோ ஆடிக் களித்த அந்தக் காலத்தின் ஒவ்வொரு கணத்திலும், தன் குழந்தை கருவாக இருந்ததென்று அவளுக்குத் தோன்றுகிறது. களிமண்ணைப் பிசைந்து பலவிதமான வடிவங்களை அமைத்து, தெய்வங்களாகக் கொண்டாடி விளையாடியது அவளுக்கு நினைவு வருகிறது. அந்தச் சிலைகள் ஒவ்வொன்றிலும், தன் குழந்தை மறைந்து இருந்ததாக இப்போது காண்கிறாள்.

இந்த நிலையை, குருதேவர் தாகுர் ஓர் அழகிய பாடலில் சித்திரித்திருக்கிறார்:

தங்க மதலை தன்
　　தாயைப் பார்த்து 'அம்மா, நான்
எங்கிருந்து வந்தேன்,
　　எனை எங்கே கண்டெடுத்தாய்?
சொல் அம்மா' என்ன,
　　எடுத்தணைத்துத் தாய்சொல்வாள்:

இப்படியாகத்தொடங்குகிறது பாடல். குழந்தையைப் பார்த்து என்ன சொல்கிறாள் அந்தத் தாய் ?

செல்வமே, நீ எனது
　　சிந்தை நடுவில்
ஒளித்திருந்தாய் ஆசை
　　ஒளிக்கனவாய்; என்றே
களித்துநான் ஆடிய
　　கன்னி விளையாட்டுப்
பாவைகளில் நீ இருந்தாய்;
　　பச்சைக் களிமண்ணை
நீவி, எந்தன் நெஞ்சில்
　　நிறைந்த கடவுளை
வண்ணச் சிலையாய்
　　வடித்தேன். அழித்தழித்துப்
பண்ணும் வடிவிலெலாம்
　　பாவையே நீ இருந்தாய்.

பிறகு? அறியாப் பருவம் கழிகிறது. விளையாட்டாக அன்று. நிசமாகவே கடவுளை வழிபட வேண்டும் என்ற அறிவு அரும்புகிறது. அப்போது, தன் வீட்டுக் குலதெய்வத்தை வணங்கத் தலைப்படுகிறாள். அன்று நடந்த இந்நிகழ்ச்சியை இன்று தாயாக உள்ள நிலையில் நினைத்துப் பார்க்கிறாள். 'எங்கிருந்து வந்தேன்?' என்று தன்னைக் கேட்ட குழந்தை, தன் குல தெய்வத்தின் மடியிலே இருந்ததாக அவளுக்குத் தோன்றுகிறது :

எந்தம் குலதெய்வத்து
　　உள்ளிருந்தாய்; நாள்தோறும்
உன்றனையே தெய்வத்தோடு
　　ஒன்றாய் வழிபட்டேன்
நாட்டுக்கு ஒருதெய்வம்
　　தந்தா அருள் - தெய்வம்
தெய்வத்து அருள்மடியில்,
　　தெய்வதமே, எங்கள்குலம்
உய்ய வளர்ந்தாய்
　　ஒருகோடி நாளெல்லாம்.

'ஆமாம், அப்படித்தான், என் குல தெய்வத்தின் மடியிலிருந்துதான், இந்தக் குழந்தைச் செல்வம் எனக்குக் கிட்டியது. கல்பகோடி காலம், இச் செல்வத்தைத் தன் அருளால் வடிவாக்கி, தன் பிரசாதமாக இன்று தெய்வம் எனக்குத் தந்தது. எப்படித் தந்தது? என் இதயம் என்ற பொன் அரும்பு மலர்ந்தது, போதாகியது, பருவச் சோபை பெற்று நின்றேன், என் உள்ளத்தில் காதல் தோன்றியது, தாய்மைக் கனவு நிழலாடியது. இந்த அனுபவங்களின் உள்ளே, நான் அறியாமல், என் குழந்தை என்ற வரப்பிரசாதம் வடிவாகிக் கொண்டு வந்தது' என்று தாய் எண்ணுகிறாள் :

சின்னஞ் சிறுவயதில்
    செல்வமே, என்னிதயப்
பொன்பூ இதழ்அவிழ்ந்து
    போதாகும் போதினிலே
போதாகும் உன்னைப்
    புதுமணமாய் நீ இருந்தாய்.
ஏதோஎன் பெண்மை
    எழிலில் நிறைந்திருந்தாய்.
தாயாக எண்ணித்
    தழைத்த பொழுதங்கே
மேயபெருங் காதலிலே
    மேவி இருந்தாய்நீ.

கடவுள் அருளாய், பிறகு காதலின் கனிவாய், அதன்பின் தாய்மையை எண்ணித் தழைக்கும் பெண்மையின் கனவாய் இருந்த குழந்தை, இப்போது தாயின் உடலில், அதன் சோபையின் சாயலாக வடிவம் பெறுகிறது. என்ன வியப்பு! உலகம் எங்கும் ஓடிப் பெருகும் உயிராற்றல் - விடிவெள்ளியாக, காலைக் கதிராக, கோடி கோடிப் பொருளாகச் சமைந்து இயங்கும் அந்த மாயசக்தி - இப்போது ஒரு பெண் உடலில் குவிந்து, குழந்தையாக மலர்கிறது. வானத்தில், நட்சத்திரங்களில், அண்டகோளங்களில், இடையீடு இல்லாமல் பரந்து விரியும் விசுவவெளியில் உள்ள ஏதோ ஒன்றல்லவா, தன் எல்லையற்ற தன்மையைத் தானே குறுக்கிக் கொண்டு, குழந்தையாக இம்மண்ணில் இறங்கி விட்டது? காலை ஒளியும், பெண்ணொருத்தி பெற்றெடுக்கும் குழந்தையும், உண்மையில், இயற்கை அன்னையின் வயிற்றில் உதிக்கும் இரட்டை மகவு அல்லவா?

'எப்படியடி நீ, உலகெங்கும் பரந்து கிடந்த நீ, மெல்ல மெல்ல வைய வாழ்வில் மிதந்து வந்து, என்னுடைய இதயத்தில் ஒதுங்கினாய்?' என்று அதிசயப் படுகிறாள் தாய் :

காலை இளங்கதிர்கள்
    கண்சிமிட்டு முன்னே வான்
நீல நெடுந்திரையில்
    நிமிர்கின்ற வெள்ளியென
என்இளமை மேனி
    எழிற்சாயலாய் உன்றன்
மென்மை மலர்ந்ததடி!
    மின்னிவரும் காலையொளி
தன்னோடு இரட்டை
    மகவாக நீவந்தாய்
முன்னும் பெருவானின்
    முதல்மகவாய் நீ பிறந்தாய்.

'என் குழந்தைதான் நீ! ஆனாலும், எங்கும் விரிந்து கிடக்கும் அலகிலாத பேராற்றல் அல்லவா, என் வயிற்றில் வடிவெடுத்து, 'தாயைக் குடல் விளக்கம் செய்தது'?' என்று பெருமிதத்தில், வியப்பில், விம்முகிறாள் தாய்:

வையகத்து வாழ்வில்
    வளர்ந்து மிதந்துவந்து
பையவே என்இதயப்
    பாரில் ஒதுங்கிவிட்டாய்
உன்முகத்தை நோக்குவேன்
    உற்றதனை நோக்குங்கால்
என்னை வசமாக்கி
    மயக்கும் ஒருமாமாயம்
அனைத்துலகின் செல்வமே,
    ஆருயிரே, எப்படியோ
எனக்குரிமை ஆனாய்,
    இதுவென்ன விந்தையடி!

இதை எண்ணும்போது, தன்னைவிட்டு எங்கேயாவது தன் குழந்தை போய் விடுமோ என்ற பயம் தாய்க்கு வருகிறது. குழந்தையை எடுத்து மார்போடு அணைத்துக் கொள்ளுகிறாள். 'என்ன அதிசயம், என்ன அதிசயம், வையத்தின் செல்வம் எல்லாம் திரண்டு என் கைக்கு, ஒரு குழந்தையாக வந்தது! எந்த மந்திரம் இதைச் சாதித்தது' என்று கேட்கிறாள் தாய் :

உன்னை இழந்து
    விடுவேனோ என்றஅஞ்சி
என்மார்பில் புல்லி
    இறுக அணைத்திடுவேன்
அந்தமிலா வையத்தின்
    செல்வமாய் நின்றஉனை
என்றன் சிறுகையில்
    சர்ந்தது எந்தமந்திரமோ?

இறைவனை மகனாகப் பெற்று, உடனேயே அவனை இழந்தாள் தேவகி என்று பாகவதம் சொல்கிறது. அந்தத் தேவகியைப்போல் அல்லவா, குருதேவரின் பாடலில் வரும் இந்தத் தாய் பேசுகிறாள்? ஆமாம், அப்படித்தான். ஏன் தெரியுமா? குருதேவர் தாகுருக்கு, ஒவ்வொரு தாயும் ஒரு தேவகி; உலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் ஒரு தெய்வம்.

# டினோபால்
## பெண்ணுடன்
## நட்பு செய்து
## கொள்ளுங்கள்



<u>இந்த பெண்தான்</u>
டினோபால் பிவிஎன்
புதிய வர்ணமயமான
கார்ட்டன் மீது பளிச்சென்ற
தோற்றமளிப்பவள்.
டினோபால் பிவிஎன்
காட்டன் மற்றும்
ரேயான் வெள்ளைத்
துணிகளை வெள்ளை
வெளேரென்று ஆக்குகிறது.

---

<u>இந்த பெண்தான்</u>
உயர்தன்மைக்கு உத்திர
வாதம் அளிப்பவள்—
ஏனெனில் நீங்கள் போலிகளை
வாங்குவதை தடுக்க, கெய்கி
ட்ரேட் மார்க் ரெஜிஸ்டர்டு
செய்யப்பட்டது.

---

<u>இந்த பெண்தான்</u> 25 கிராம்
கள் நிறையுள்ள
டினோபாலை பில்பர்-ப்ரூப்
ஸீலுடன் கூடிய பளிங்கு
போன்ற பிளாஸ்டிக்
டப்பாவில் உங்களுக்கு
அளிக்கிறாள்.

# டினோபால் பிவிஎன்

வெள்ளைத்
துணிகளை
மிக வெண்மையாக்குகிறது







டினோபால் என்ற வார்த்தை ஜே. ஆர் கெய்கி எஸ். ஏ., பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

தயாரிப்பாளர்கள்: சுஹ்ரித் கெய்கி பிரைவேட் லிமிடெட், வடவாடி, பரோடா.
பூர்ண விக்ரேதாக்கள்: சுஹ்ரித் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிட்., த. பெ. 965, பம்பாய்-1

SISTA'S-SG-135

# மறக்க முடியாத 'மாட்ச்'

குண்டுமணி

முதல் நாள் வெள்ளிக்கிழமை காலை. சென்னை நகரசபை ஸ்டேடியத்தில் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் கிரிக்கெட் ஆட்டப் போட்டி நடந்து கொண்டிருந்தது. பாகிஸ்தான் விளையாட்டு மன்னர்களான ஹனீபும் இம்தியாஸும் பந்தை வேகமாகத் தாக்கி எண்ணிக்கையைக் குவிப்பதில் முனைந்து நின்றனர். திடீரென்று இம்தியாஸ் அடித்த பந்து உயரே பறந்தது. இந்திய விளையாட்டுக்காரர் ஒருவர் அந்தப் பந்தைப் பிடிக்க முயன்றார்; ஏமாந்தார். அடுத்தகணம் கிரிக்கெட் ரஸிகர்கள் அலுத்துக் கொள்ளத் தொடங்கி விட்டனர்.

"இந்தப் பந்தைப் பிடிக்கத் தெரியாத இந்த மனிதர் டெஸ்ட் பந்தயத்தில் வந்து ஆடுவானேன்?"

"பாகிஸ்தான்பாடு யோகம்தான். இந்தியா இப்படிப் பந்தைப் பிடிக்காமல் கோட்டை விட்டால் பாகிஸ்தான் நானூறென்ன, ஐந்நூறு ரன்கள் எடுக்கும்...!"

"இந்திய ஆட்டக்காரர் வீழ்க! வீழ்க!"

"இந்தியாவுக்கு இன்னிங்ஸ் தோல்வி நிச்சயம் கிடைக்கும்!"

நான்காம் நாள் செவ்வாய்க்கிழமை. இந்திய மட்டை வீரர்கள் பாகிஸ்தானின் பந்து வீச்சுக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் 'தடுக்கிணத்தோம்' போட்டுக் கொண்டிருந்தனர். திடீரென்று இடைவேளைக்குப் பிறகு இந்திய வீரருக்குச் சூடு பிறந்தது. பந்து நான்கு திசைகளிலும் பவுண்டரி எல்லைக்குப் பல தடவைகள் பறந்தது. கிரிக்கெட் ரஸிகர்கள் ஆரவாரம் செய்தனர்; அவர்களது கரகோஷம் வானைப் பிளந்தது. இந்திய விளையாட்டு வீரர் விடாப்பிடியாக நூறு ஓட்டங்களுக்குமேல் எடுத்தபொழுது அவருக்குப் பூமாலைகள் வந்து விழுந்தன; புகழ் மாலைகள் குவிந்தன; கரகோஷங்களும் நிறையக் கிடைத்தன.

முதல்நாள் கிரிக்கெட் ரஸிகர்களின் கோபத்துக்கு இலக்கான அதே நபரே செவ்வாய்க்கிழமையன்று புகழ்மாலைகளுக்கும் இலக்கானார். இந்திய கிரிக்கெட் உலகில் 'ஆல் ரௌண்டர்' என்று பெயர் பெற்ற உம்ரிகரே அவர். முதல் நாள் பந்தைக் கோட்டை விட்டு அவப்பெயர் தேடிக் கொண்ட அவர் நான்காம் நாள் இந்தியாவின் பெருமையை, இந்திய ஆட்டக்காரர்களின் விளையாட்டுத் திறமையை உயர்த்தி விட்டார். கருமமே கண்ணாக உடையவர்கள் பசி நோக்கார், கண் துஞ்சார், மெய் வருத்தம் பார்க்க மாட்டார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அதை உம்ரிகர் நேரிலேயே சாதித்துக் காட்டினார். 117 ரன்களைச் சளைக்காமல் அடித்து, தாக சாந்திக்கு வரும் தண்ணீரைக்கூட எட்டிப் பாராமல், பாகிஸ்தான் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குத் 'தண்ணீர்' காட்டி விட்டார் அவர்!

விருந்தினர்களை உபசரிப்பதில் இந்தியர்களுக்கு நிகர் இந்தியர்களே என்றுதான் சொல்ல வேண்டும். அவர்கள் தங்கள் பண்பைக் காட்ட முதலில் நானூறு என்ன, நானூற்று நாற்பத்தெட்டு ரன்களை வட்டி வட்டாகப் பாகிஸ்தான் கோஷ்டிக்குக் கொடுத்து உபசரித்தார்கள். போர்டே பந்து வீசும் பொழுது சதம் போட்டார். பந்து வீசும் நிபுணர்கள் சதம் போடுவதா? பந்தை அடிப்பவர்கள் அல்லவா சதம் ஓட்டங்கள் எடுப்பார்கள் என்று யோசிக்கிறீர்களா? போர்டே குப்தேயுடன் போட்டி போட்டுக் கொண்டு பாகிஸ்தான் வீரர்களுக்குச் சதம் எண்ணிக்கையை வழங்கினார். ஆனால் பிறகு போர்டே அவ்வளவுக்கும் வட்டி சேர்த்து 177 ரன்கள் எடுத்தது இந்த டெஸ்ட் வரிசையிலேயே இணையற்ற சாதனையாகும்.

நடந்த நான்கு டெஸ்ட் பந்தயங்களிலும் உயர்ந்த எண்ணிக்கை எடுத்து, பாகிஸ்தான் ஆட்டக்காரர் ஹனீப் பம்பாய் டெஸ்டில் எடுத்த 160 எண்ணிக்கைக்கும் மேலே எடுத்து, தலைசிறந்த ஆட்டக்காரர் என்ற பெருமையையும் புகழ் மாலையையும் சூட்டிக் கொண்டார். 'போர் டே, போர் டே' என்று கிரிக்கெட் ரஸிகர்கள் கேலி செய்த காலம் மலையேறி, போர்டேக்குப் பொன் எழுத்தில் பெயரைப் பொறித்த போர்டே

1. இந்திய காப்டன் கண்டிராக்டர். 2. உம்ரிகர். 3. போர்டே. 4. தேசாய். 5. மஞ்சரேகர். 6. மில்கா சிங்.





தயாரிக்கு முன் வந்துவிட்டனர் பலர்! எத்தனையோ பேர்களுடைய மனப் போர்டில் அழியா ஓவியமாய்ப் பதிந்துவிட்டார் அவர்.

இந்திய ஆட்டக்காரர்களில் வேறு சிலரும் மின்னல்போல் பளிச்சிட்டுத் தங்கள் திறமையைக் காட்டினர். விக்கெட் கீப்பர் குண்டர்ம் அற்புதமாகப் பந்தைப் பிடித்தும், ஸ்டம்புக் குச்சிகளைத் தாக்கியும் விக்கெட்டில் நெருப்பாக விளங்கினர். அவருடைய மிடுக்கும் 'ஷோக்'கும் இளைஞர்களை வெகுவாகக் கவரும் வகையில் அமைந்திருந்தன. சென்னை கிரிக்கெட் சிங்கம் மில்காசிங் பவுண்டரி எல்லையைப் பந்து அடையாமல் தேக்குவதில் பல தடவைகள் தம் கைவரிசையைக் காட்டினர். பம்பாயில் நடந்த முதல் பந்தயத்தில் கலந்து கொள்வதற்கிருந்தபோது தலைப்பாகைக்குத் துணியைச் சரியாக வெட்டப் போகக் கையை வெட்டிக் கொண்டார் அவர். முதல் இரண்டு டெஸ்ட் பந்தயங்களில் கலந்துகொள்ள முடியவில்லை. மூன்றாவது டெஸ்டின்போது அவருக்கு ஜூரமே வந்துவிட்டது! சென்னை ஆட்டக்காரரான அவர் சென்னை டெஸ்ட் பந்தயத்தில்தான் முதன் முதலில் சோபிக்க வேண்டும் என்றிருக்கையில் யார் என்ன செய்ய முடியும்? தேசாயின் பந்து வீச்சு பல சமயங்கள் வேகமாகப் பாய்ந்து பந்தடிப்பவர்களைத் திணறச் செய்தது. உம்ரிகர் தமது பந்து வீச்சிலும் பல 'மெயிடன் ஓவர்களை' வீசி 'சிக்கனமாகப் பந்து வீசும் நிபுணர்' என்ற பெயரைத் தட்டிக் கொண்டார். ஆனால் வெகு ஆவலுடன் எதிர்பார்த்த கெயிக்வாட் ஆட்டம்தான் புஸ்வாணமாகப் போய்விட்டது!

பாகிஸ்தான் கட்சியில் சத ஓட்டங்களுக்கு மேல் குவித்தவர்கள் இருவர்: ஒருவர் விக்கெட் கீப்பர் இம்டியாஸ்; மற்றொருவர் பந்தைப் பல கோணங்களில் அழகாகத் தாக்கும் ஸையத் அஹமத். பந்து வீச்சில் ஆறு இந்திய விக்கெட்டுகளை வீழ்த்திப் பெருமையைச் சம்பாதித்துக் கொண்டவர் ஹாஸிப் ஆஸன். பந்து அவர் கையிலே மந்திர ஜாலங்களை நிகழ்த்திப் பந்தடிப்பவர்களைக் கிறங்கச் செய்தது.

பாகிஸ்தான்-இந்தியா நான்காவது கிரிக்கெட் டெஸ்ட் பந்தயம் ஐந்து நாட்கள் நடந்தும் வெற்றி தோல்வியின்றி முடிந்தது. ஆனால் இந்த ஐந்து நாட்களிலும் ஒரு சில சமயங்களில் ஆட்டம் மந்தகதியில் சென்றாலும் மொத்தத்தில் கண்ணுக்கினிய ஓர் அரிய விருந்தாகவே அமைந்தது. ஆனால் இந்த விருந்துக்கும் ஓர் அழையா விருந்தாளி விஜயம் செய்து விட்டார். அவர் அக்னி பகவான். சொல்லாமல் கொள்ளாமல் புகுந்து அவர் விளையாடி விட்டார். அவர் விளையாட்டை யாரும் எதிர்பார்க்கவில்லை! அது விளையாகிவிடவும் இல்லை! விளையாட்டாகவே முடிந்தது குறித்து எல்லாருக்கும் சந்தோஷம்!

இதுவரை நடந்த நான்கு டெஸ்ட் பந்தயங்களிலும் கண்டிராக்டர் தலைமைக் குத்தகையில் லாப நஷ்டமோ இல்லை; வெற்றியோ, தோல்வியோ இல்லை. இனி ஐந்தாவது டெஸ்ட் பந்தயத்திலாவது இந்தியாவுக்கு வெற்றி கிட்டும் என்று எதிர்பார்க்கலாம். அதற்குச் சென்னையில் நடந்த விளையாட்டு வெற்றிப் பாதைக்கு வழிகாட்டியாக அமையும் என்று எதிர் நோக்குவோம்.

மறக்க முடியாத இந்த 'மாட்சை'ச் சிறப்புடன் நடத்தி வைத்த சென்னை கிரிக்கெட் சங்கம் பாராட்டுக்குரியது.

---

நமது சித்திரக்காரர் சாமா வரைந்துள்ள இந்திய - பாகிஸ்தான் ஆட்டக்காரர்களைப் படத்தில் காணலாம்.

1. பாகிஸ்தான் காப்டன் பஸல் முகம்மது. 2. ஹனீப் முகம்மது. 3. இம்டியாஸ் அஹமது. 4. முஷ்டாக் முகம்மது. 5. ஜாவட் பார்க்கி. 6. இஜாஸ்பட். 7. நஸிம் உல்கனி. 8. இன்குலாப் ஆலம். 9. வாலிஸ் மத்தியாஸ். 10. முகம்மது உசேன் 11. ஸையத் அஹமது. 12. ஹாஸிப் ஆஸன்.



# இப்பொழுது நடைபெறுகிறது!

"பல முறை புடம் போட்டால்
பத்தரைமாற்றுப் பொன்-
பல சோதனைகளில் ஜெயித்தால்
பதிவிரதைப் பெண்!"

ஜுபிடரின்

# அரசிளங்குமரி

கதை, வசனம்
கலைஞர் மு. கருணாநிதி, எம்.எல்.ஏ

டைரக்ஷன்
A.S.A.சாமி

ஸ்டுடியோ
நெப்ட்யூன்



RIGHTS CONTROLLED BY
JAYANTHI FILMS (MADURAI) PRIVATE LTD. MADRAS-17.

## ௫. பூதசதுக்கமும் ஒரு புதிர்!

எழிற்பூம்புகார் நகரத்தில் மீண்டும் காலம் அரும்பவிழ்த்துப் பூத்தது ஒரு நாள் மலர். திருவிழாக் கோலங் கொண்ட பேரூர்க்குச் செம்பொன் நிறை சுடர்க்குடம் எடுத்துச் சோதிக் கதிர் விரித்தாற்போல் கிழக்கு வானத்தில் பகல்செய்வோன் புறப்பட்டான். முதல்நாள் இரவில் சற்றே அடக்கமும், அமைதியும் பெற்று ஓய்ந்திருந்த இந்திர விழாவின் கலகலப்பும், ஆரவாரமும், அந்தப் பெருநகரின் ஒவ்வொரு பகுதியிலும் எழுந்தன. காலைப்போதுதானே இந்த ஆரவாரங்களை நகரின் எல்லா இடமும் அடைய முடியும்? மாலையானால்தான் எல்லா அழகுகளையும், எல்லாக் கலகலப்பையும் கடற்கரை கவர்ந்து கொண்டு விடுமே!

மாபெரும் இந்திரவிழாவின் இரண்டாவது நாட் காலை நேரம் இவ்வளவு அழகாக மலர்ந்து கொண்டிருந்தபோது தான் முல்லையின் பொலிவு மிக்க சிரிப்பும் இளங்குமரனின் பார்வையில் மலர்ந்தது. சிரிப்பினால் முகத்துக்கும், முகத்தினால் சிரிப்புக்கும் மாறி மாறி வனப்பு வளரும் முல்லையின் வளைக்கரங்கள்தாம் அன்று காலை இளங்குமரனை உறக்கத்திலிருந்து எழுப்பின. கண்ணிலும், பார்வையிலும், நகையிலும், நகைபிறக்குமிடத்திலுமாகக் கவர்ச்சிகள் பிறந்து எதிர் நின்று காண்பவர் மனத்துள் நிறையும் முல்லையின் முகத்தில் விழித்துக் கொண்டேதான் அவன் எழுந்தான். பெண்கள் பார்த்தாலும்,

நகைத்தாலும், தொட்டாலும், சில பூக்கள் மலர்ந்துவிடும் என்று கவிகள் பாடியிருப்பது நினைவு வந்தது இளங்குமரனுக்கு. 'மலர்ச்சி நிறைந்த பொருள்களினுள் மற்றவற்றிலும் மலர்ச்சி உண்டாகும்' என்ற விளக்கம் எவ்வளவு பொருத்தமானது. பெண்களின் பார்வைக்கும், புன்னகைக்கும், பூக்கள் மலர்வது மெய்யுரையோ, புனைந்துரையோ? ஆனால் ஆறறிவு பெற்ற மனித மனங்களே மலர்ந்து விடுகின்றனவே! எத்தனையோ குழப்பங்களுக்கிடையே இந்தப் பேதைப்பெண் முல்லை தன் நோக்கினாலும், நகைப்பினாலுமே, என் மனத்தை மலர வைக்கிறாளே! இந்த அற்புத வித்தை இவளுக்கு எப்படிப் பழக்கமாயிற்று?'' என்று தனக்குள் எண்ணி வியந்தவாறே காலைக் கடன்களைத் தொடங்கினான் இளங்குமரன்.

அருட்செல்வ முனிவர் கட்டிலில் அயர்ந்து படுத்திருந்தார். இளங்குமரனும், முல்லையும் அவரை எழுந்திருக்க விடவில்லை. எவ்வளவு தளர்ந்த நிலையிலும் தம்முடைய நாட் கடன்களையும், தவ வழிபாடுகளையும் நிறுத்தியறியாத அந்த முனிவர் பெருந்தகையாளர், ''என்னை எப்படியாவது எனது தவச்சாலையிலே கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள்'' என்று அன்றும் பிடிவாதமாக மன்றாடிப் பார்த்தார். இளங்குமரனும், முல்லையும்தான் அவரை வற்புறுத்தி ஓய்வு கொள்ளச் செய்திருந்தனர். உடல் தேறி நலம் பெறுகிறவரை முனிவர் அந்த வீட்டிலிருந்து வெளியேறலாகாது என்று கண்டிப்பாக உத்தரவிட்டதுபோல் சொல்லிவிட்டார் முல்லையின் தந்தையாகிய வீர சோழிய வளநாடுடையார். அநுபவமும் வயதும் நிறைந்து மூத்த அந்தப் பெருங்கிழவரின் குரலில் இன்னும் கம்பீரமும், மிடுக்கும் இருந்தன. சோழநாட்டின் பெரிய போர்களில் எல்லாம் கலந்து தீர அநுபவமும் வீரப் பதவிகளும் பெற்று நிறை வாழ்வு வாழ்ந்து ஓய்ந்த உடல் அல்லவா அது? இன்று நடுங்கித் தளர்ந்திருந்தாலும் வெளுத்து நரைத்த வளமான மீசையும் குழிந்திருந்தாலும் ஒளி மின்னும் கண்களும், நெடிதுயர்ந்த தோற்றமும், அவருடைய பழைய வீர வாழ்வை நினைவிற் கொண்டு வருவதற்குத் தவறுவதில்லை. ஒருகாலத்தில் வீரசோழிய வளநாடுடையார் என்ற அந்தப் பெயர் ஆயிரம் வீரர்களுக்கு நடுவில் ஒலித்தாலே ஆயிரம் தலைகளும் பெருமிதப்போடு வணங்கித் தாழ்ந்ததுண்டு. இன்று அவருடைய ஆசையெல்லாம் தாம் அடைந்த அத்தகைய பெருமைகளைத் தம் புதல்வன் கதக்கண்ணனும் அடைய வேண்டுமென்பதுதான்.

முல்லைக்கும், தன்னுடைய நண்பனுக்கும் தந்தை என்ற முறையினால் மட்டுமல்லாமல் வேறு சில காரணங்களாலும் இளங்குமரன் வீரசோழிய வளநாடுடையார்மேல் பெருமதிப்பு வைத்திருந்தான். ஆனால் அவருக்கு மட்டும் அவனைப் பற்றிய மனக்குறையொன்று உண்டு. வல்லமையும், தோற்றமும், கட்டழகும் வாய்ந்த இளங்குமரன் சோழப்பேரரசின் காவல் வீரர்களின் குழுவிலோ, படை மறவர் அணியிலோ சேர்ந்து முன்னுக்கு வர முயலாமல் இப்படி ஊர்சுற்றியாக அலைந்து கொண்டிருக்கிறானே என்ற மனக்குறைதான் அது. அதை அவனிடமே இரண்டொரு முறை வாய்விட்டுச் சொல்லிக் கடிந்து கொண்டிருக்கிறார் அவர்.

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி





"தம்பீ! உன்னுடைய வயதில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பூம்புகாரின் புறநகர்க்காவல் வீரர்களுக்குத் தலைவனாக இருந்தேன் நான். இந்த இரண்டு தோள்களின் வலிமையால் எத்தனை பெரிய காவற் பொறுப்புக்களைத் தாங்கி நல்ல பெயர் எடுத்திருக்கிறேன், தெரியுமா? நீ என்னடா வென்றால் அவிழ்த்து விடப்பட்ட இளங்காளை போல் இந்த வயதில் மருவூர்ப் பாக்கத்து விடலைகளோடு நாளங்காடிச் சதுக்கத்தில் வம்பும், வாயரட்டையுமாகத் திரிகிறாய்! முனிவர் உன்னைச் செல்லமாக வளர்த்து ஆளாக்கி விட்ட பாசத்தை மீற முடியாமல் கண்டிக்கத் தயங்குகிறார்."

இவ்வாறு அவர் கூறுகிறபோதெல்லாம் சிரிப்போடு தலைகுனிந்து கேட்டுக் கொண்டு மெல்ல அவருடைய முன்னிலையிலிருந்து நழுவி விடுவது இளங்குமரனின் வழக்கம். ஆனால் இன்றென்னவோ வழக்கமாக அவனிடம் கேட்கும் அந்தக் கேள்வியைக் கூட அவர் கேட்கவில்லை. காரணம் முதல் நாளிரவு சம்பாபதி வனத்தில் முனிவருக்கும் தனக்கும் ஏற்பட்ட துன்பங்களை முற்றிலும் கூறாவிடினும் ஓரளவு சுருக்கமாகக் காலையில் அவருக்குச் சொல்லி யிருந்தான் இளங்குமரன்.

"தம்பீ! நேற்றிரவு சம்பாபதி வனத்தில் கதக்கண்ணனும் அவன் தோழனும் காவலுக்காகச் சுற்றி வந்தபோது நீ சந்தித்ததாகக் கூறினாயே? விடிந்து இவ்வளவு நேரமாகியும் கதக்கண்ணன் வீடு வந்து சேரவில்லையே! அப்படி எங்கே சுற்றிக் கொண்டிருக்கிறான் அவன்?" என்று வீரசோழிய வளநாடுடையார் கேட்டபோது அவருக்கு என்ன மறுமொழி கூறுவதெனச் சிந்தித்தாற்போல் சில விநாடிகள் தயங்கினான் இளங்குமரன். ஏனென்றால் கதக்கண்ணன் தன்பொருட்டு வஞ்சினம் கூறித் தன்னுடைய எதிரிகளைத் துரத்திக் கொண்டு தான் போயிருக்கிறான் என்ற செய்தியை அவன் கிழவரிடம் கூறவில்லை. தன்னையும் முனிவரையும் சம்பாபதி வனத்தில் யாரோ சிலர் வழிமறித்துத் தாக்கியதாகவும், கதக்கண்ணனும், மற்றொரு காவல் வீரனும் அந்த வழியாக வந்தபோது தாக்கியவர்கள் ஓடி விட்டதாகவும் மட்டும் ஒருவிதமாக அவரிடம் சொல்லி வைத்திருந்தான் இளங்குமரன்.

"ஐயா! இந்திர விழாக் காலத்தில் நேரத்தோடு வெளியேறி நேரத்தோடு வீடு திரும்ப வேண்டுமென்று எதிர்பார்க்கலாமா? நீங்களும், முல்லையும் நேற்று மாலை விழாக் கோலாகலத்தை யெல்லாம் பார்த்து வந்து விட்டீர்கள். கதக்கண்ணனுக்கும் விழாக் காண ஆவல்

இருக்கும் அல்லவா? நேற்றிரவே நகருக்குள் போயிருப்பான். அங்கே படைமறவர் பாடிவீடுகள் ஏதாவதொன்றில் தங்கியிருந்து விடிந்ததும், ஊர் சுற்றிப் பார்த்து விட்டுக் காலைக வந்து சேர்வான்" என்று அவருக்கு மறுமொழி கூறினான் இளங்குமரன். கிழவர் அவனுடைய அந்த மறுமொழியால் சமாதானம் அடைந்தவராகத் தெரியவில்லை.

"அண்ணன் ஊருக்கெல்லாம் பயமில்லாமல் காவல் புரிகிறேன் என்று வேலேந்திய கையோடு இரவிலும் குதிரையில் சுற்றுகிறான். அப்பாவுக்கோ அவன் தன்னையே காத்துக்கொள்வானோ, மாட்டானோ என்று பயமாயிருக்கிறது!" என்று கூறிச் சிரித்தாள் முல்லை.

"பயம் ஒன்றுமில்லையம்மா எனக்கு. நீ இன்று காலை நாளங்காடிப் பூதசதுக்கத்துக்குப் போய்ப் படையல் இட்டு வழிபாடு செய்ய வேண்டுமென்றாயே! நான் இங்கே இந்த முனிவருக்குத் துணையாக இருந்து இவரைக் கவனித்துக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். கதக்கண்ணன் வந்திருந்தால் நீ அவனை உடன் அழைத்துக்கொண்டு புறப்பட வசதியாயிருக்குமே என்றுதான் பார்த்தேன்."

"அண்ணன் வராவிட்டால் என்ன, அப்பா? இதோ இவரை உடன் அழைத்துக் கொண்டு பூதசதுக்கத்துக்குப் புறப்படுகிறேனே. இவரைவிட நல்ல துணை வேறு யார் இருக்க முடியும்?" என்று இளங் குமரனைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள் முல்லை.

இளங்குமரன் தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்டான்.

"இவனையா சொல்கிறாய் அம்மா! இவன் உனக்குத் துணையாக வருகிறான் என்பதைவிட வீரசோழிய வளநாடுடையார் மகள் இவனுக்குத் துணையாகச் செல்கிறாள் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். ஊர்ச் சண்டையும், கெருவமும் இழுத்து எவனோடாவது அடித்துக் கொண்டு நிற்பான். நீ இவனைச் சமாதானப் படுத்தி அழைத்துக் கொண்டு போக நேரிடும்."

"அப்படியே இருக்கட்டுமே, அப்பா! இவருக்குத் துணையாக நான் போகிறேன் என்றே வைத்துக்கொள்ளுங்களேன்"



என்று விட்டுக் கொடுக்காமல் சொன்னாள் முல்லை.

"முல்லை! என்னைக் குறை கூறுவதென்றால் உன் தந்தைக்கு விருந்துச் சாப்பாடு சாப்பிடுகிற கொண்டாட்டம் வந்து விடும். அவருடைய ஏளனத்தை எல்லாம் வாழ்த்துக்களாக எடுத்துக் கொண்டு விடுவேன் நான்."

இளங்குமரன் புன்னகை புரிந்தவாறே வீர சோழிய வளநாடுடையாரையும், அவருடைய செல்வ மகளையும் மாறி மாறிப் பார்த்தான்.

"அருட்செல்வ முனிவரே! உங்களுடைய வளர்ப்புப் பிள்ளையாண்டானுக்கு அறிவும், பொறுப்பும் வளர்ந்திருக்கிறதோ இல்லையோ வாய்ப் பேச்சு நன்றாக வளர்ந்திருக்கிறது" என்று அதுவரை தாம் எதுவும் பேசாமல் அவர்களுடைய வம்பு உரைகளைக் கேட்டுக் கொண்டிருந்த முனிவரை நோக்கிக் கூறினார் வீரசோழிய வளநாடுடையார். இதைக் கேட்டு முனிவர் பதிலேதும் கூறவில்லை. அவருடைய சாந்தம் திகழும் முகத்தில் சிரிப்பு மலர்ந்து அடங்கியது. அந்தச் சிரிப்பின் குறிப்பிலிருந்து கிழவர் கூறியதை அவர் அப்படியே ஒப்புக் கொண்டதாகவும் தெரியவில்லை. அப்படியே மறுத்ததாகவும் தெரியவில்லை. ஒவ்வொருவருக்கும் ஒரு பொருளை உய்த்துணர இடமளித்தது அந்தச் சிரிப்பு.



இளங்குமரனுக்கு, 'குழந்தாய்! நீ கவலைப்படாமல் முல்லையோடு நாளங்காடிக்குப் புறப்பட்டுப் போய்விட்டு வா. நேற்றிரவு சம்பாபதி வனத்தில் நடந்தவற்றிலுள்ள இரகசியத்தையோ, அல்லது வேறு இரகசியங்களையோ இந்தக் கிழவரிடம் வரம்பு மீறிச் சொல்லிவிட மாட்டேன்' என்று அபயமளித்தது அந்தச் சிரிப்பு. முல்லைக்கோ, 'பெண்ணே! உன் இதயத்தில் இளங்குமரனைப் பற்றி வளரும் இனிய நினைவுகள் புரியாமல் உன் தந்தை அவனை இப்படி உன் முன்பே ஏளனம் செய்கிறாரே' என்ற குறிப்பைக் கூறியது அந்தச் சிரிப்பு.

"உங்கள் முதுமைக்கும், அநுபவங்களுக்கும் பொருத்தமானவற்றைத்தான் இளங்குமரனுக்கு நீங்கள் சொல்லுகிறீர்கள்' என்று கிழவரை ஆதரிப்பது போல் அந்தச் சிரிப்பு அவருக்குத் தோன்றியிருக்கும். எந்த மனவுணர்வோடு பிறருடைய சிரிப்பையும், பார்வையையும், அளவிட நேருகிறதோ, அந்த உணர்வுதானே அங்கும் தோன்றும்?

முல்லை தன்னை அலங்கரித்துக்கொண்டு புறப்படுவதற்குச் சித்தமானாள். கண்களிலும், முகத்திலும், உடலிலும் பிறக்கும்போதே உடன்பிறந்து அலங்கரிக்கும் அழகுகளைச் செயற்கையாகவும் அலங்கரித்த பின் வழிபாட்டுக்கும் படையலுக்கும் வேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள் முல்லை. படையலுக்காக நெய்யில் செய்து அவள் எடுத்துக் கொண்டிருந்த பணியாரங்களின் நறுமணத்தை இளங்குமரன் நுகர்ந்தான். முனிவரிடம் சொல்லி விடைபெற்றுக் கொண்டபின் கிழவரைப் பார்த்து, "ஐயா! நானும் முல்லையும் நண்பகலுக்குள் பூதசதுக்கத்திலிருந்து திரும்பி விடுவோம். அதற்குள் கதக்கண்ணன் வந்தால் இங்கேயே இருக்கச் சொல்லுங்கள். நான் அவனிடம் சில முக்கியமான செய்திகள் பேச வேண்டும்" என்று கூறினான் இளங்குமரன்.

"ஆகா! வேண்டிய மட்டும் பேசலாம், தம்பீ! கவனமாக அழைத்துக் கொண்டு போய்வா. முல்லையைப் பூதசதுக்கத்தில் விட்டு விட்டு நீ உன் போக்கில் மருவூர்ப்பாக்கத்து விடலைகளோடு சுற்றக் கிளம்பிவிடாதே. அவளை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தபின் நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம்" எனக் கிழவர் எச்சரிக்கை செய்தபோது முல்லையும் இளங்குமரனும் சிரித்துக் கொண்டே வெளியேறினார்கள்.

முதல் நாளிரவிலிருந்து தன்னுடைய மனத்தில் மிகுந்துவரும் துன்பங்களையும், தவிப்பையும் அந்தச் சமயத்தில் ஒருவழியாக மறந்துவிட முயன்ற இளங்குமரன் முல்லையோடு உற்சாகமாகச் சிரித்துப் பேசிக் கொண்டே சென்றான்.

"முல்லை! உன் தந்தையார் என்னைப் பற்றிப் பேசுகிற பேச்செல்லாம் ஒரு விதத்தில் பொருத்தமாகத்தான் இருக்கிறது. ஊராருக்கெல்லாம் இந்திர விழாவின் தொடக்க நாளில் உற்சாகம் தேடிக் கொண்டு வருகிறதென்றால் என்னைத் தேடிக்கொண்டு அடிபிடி-போர் இப்படி ஏதாவது வம்புகள்தாம் வந்து




# இது புதியது-நியாயமான விலை!

# மெரிட்

## தையல் மெஷின்

பல வருஷங்களுக்கு உங்களுக்கு தையலில் மகிழ்ச்சியளிக்கக் கூடியது—தவிர, பிரசித்தமான ஸிங்கர் கம்பெனியாரின் பராமரிப்பின் வசதியும் உண்டு.

**ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி,**

**மற்றும் அவர்களால் நியமிக்கப்பட்ட டீலர்களால் விற்கப்படுகிறது.**

சேருகின்றன. நேற்று மாலை கடற்கரையில் ஒரு யவன மல்லனோடு வலுச் சண்டைக்குப் போய் வெற்றி பெற்றேன். நேற்று இரவு சம்பாபதி வனத்தில் என்னிடம் யாரோ வலுச் சண்டைக்கு வந்தார்கள். வாங்கிக் கட்டிக் கொண்டேன். இந்திர விழாவின் இருபத்தெட்டு நாட்களும் என் பங்குக்கு நேரடியாகவோ, நண்பர்கள் மூலமாகவோ இப்படி வம்புகள்தாம் எவையேனும் தேடிவரும் போலும்."

"ஒருவேளை நீங்களாகவே வம்புகளைத் தேடிக் கொண்டு போகிறீர்களோ, என்னவோ?"

"பார்த்தாயா? நீயே என்னிடம் வம்புக்கு வருகிறாயே முல்லை; வீர சோழிய வளநாடுடையார்தான் குறும்பாகவும், குத்தலாகவும் பேசுகிறாரென்று பார்த்தால் அவருடைய பெண் அவரையும் மீறிக் கொண்டு குறும்புப் பேச்சில் வளர்கிறாளே? உன்னைச் சொல்லக் குற்றமில்லை பெண்ணே, என் தலையெழுத்தே அப்படி. சில பேர்கள் நல் வாய்ப்புக்களையே தேடிக்கொண்டு போகிறார்கள். இன்னும் சில பேர்களை நல் வாய்ப்புக்களே எங்கே எங்கே யென்றுதேடிக்கொண்டு வருகின்றன. என்னைப் பொறுத்தமட்டில் நானாகத் தேடிக் கொண்டு போனாலும் வம்புதான் வருகிறது. தானாக என்னைத் தேடிக் கொண்டு வந்தாலும் வம்புதான் வருகிறது."



"வம்பில் பியாகக்காரராக இருக்கிறீர்கள் நீங்கள்! இல்லையா?"

"அதில் சந்தேகமென்ன, பெண்ணே? இன்றைக்கு வாய்த்த முதல் வம்பு நீதான்......."

"இரண்டாவது வம்பு?......"

"இனிமேல்தான் எங்கிருந்தாவது புறப்பட்டு வரும்!......"

இதைக் கேட்டு முல்லை கலீரெனச் சிரித்தாள். இப்படி விளையாட்டாகப் பேசிக் கொண்டே நாளங்காடியை நோக்கி விரைந்தார்கள் அவர்கள்.

பூம்புகாரின் செல்வ வளம் மிக்க பட்டினப் பாக்கத்துக்கும், பலவகை மக்கள் வாழும் மருவூர்ப் பாக்கத்துக்கும் இடையிலுள்ள பெருநிலப் பகுதியாகிய நாளங்காடியில் மக்கள் வெள்ளம் போல் கூடியிருந்தனர். அங்கே கோயில் கொண்டிருந்த சதுக்கப்பூதம், அங்காடிப் பூதம் என்னும் இரண்டு வானளாவிய தெய்வச் சிலைகள் வெகு தொலைவிலிருந்து பார்ப்போர்க்கும் பயங்கரமாகக் காட்சியளித்தன. பூதங்களுக்கு முன்னாலிருந்த பெரிய பெரிய பலிப் பீடிகைகளில் பூக்களும், பணியாரங்களும் குவித்து வழிபடுவோர் நெருக்கமாகக் குழுமியிருந்தனர். மடித்த வாயும் தொங்கும் நாவும் கடைவாய்ப் பற்களுமாக ஒரு கையில் வச்சிராயுதமும், மற்றொரு கையில் பாசக் கயிறும் ஏந்திய மிகப் பெரும் பூதச் சிலைகள் செவ்வரளி மாலை அணிந்து எடுப்பாகத் தோன்றின. 'பசியும் பிணியும் நீங்கி நாட்டில் வளமும் வாழ்வும் பெருகவேண்டுமென்று' பூதங்களின் முன் வணங்கி வாழ்த்துரைப்போர் குரல் நாளங்காடியைச் சூழ்ந்திருந்த அடர்ந்த மரச் சோலையெங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. துணங்கைக் கூத்து ஆடுகிறவர்களின் கொட்டோசை ஒருபுறம் முழங்கியது.

நாளங்காடிப் பூத சதுக்கத்துக்கு முன்னால் நான்கு பெரிய வீதிகள் ஒன்றுகூடும் சந்தியில் வந்ததும், "முல்லை! நீ உள்ளே போய் வழிபாட்டைத் தொடங்கிப் படையலிடு. நான் இந்தப் பக்கத்தில் என் நண்பர்கள் யாராவது சுற்றிக் கொண்டிருக்கிறார்களா என்று பார்த்து விட்டு உள்ளே வருகிறேன்" என்று இளங்குமரன் அவளை உள்ளே அனுப்பி விட்டுத் தான் மட்டும் அங்கேயே நின்று கொண்டான்.

"விரைவில் வந்து விடுங்கள். ஏதாவது வம்பு தேடிக் கொண்டு வந்துவிடப் போகிறது." சிரித்துக் கொண்டே அவன் பக்கம் திரும்பிப் பார்த்துச் சொல்லி விட்டுப் பலிப் பீடிகையை நோக்கி நடந்தாள் முல்லை.

"படையல் முடிந்ததும் நீ தரப் போகிற நெய்யில் பொரித்த *என் னுருண்டையை நினைத்தால் வராமலிருக்க முடியுமா, முல்லை?" என்று நடந்துபோகத் தொடங்கிவிட்ட அவள்

செவிகளுக்கு எட்டும்படி இரைந்து சொன்னான் இளங்குமரன். பின்பு தனக்குப் பழக்கமானவர்கள், நண்பர்கள் எவரேனும் அந்தப் பெருங் கூட்டத்தில் தென்படுகிறார்களா என்று தேடிச் சுழன்றன அவன் கண்கள்.

ஆனால் அவன் தேடாமலே அவனுக்குப் பழக்கமில்லாத புது மனிதன் ஒருவன் தயங்கித் தயங்கி நடந்து வந்து அருகில் நின்றான். 'ஐயா!' என்று இளங்குமரனை மெல்ல அழைத்தான். "ஏன்? உனக்கு என்ன வேண்டும்?" என்று அவன் புறமாகத் திரும்பிக் கேட்டான் இளங்குமரன்.

"உங்களைப் போல் ஓவியம் ஒன்று எழுதிக் கொள்ள வேண்டும். தயவு கூர்ந்து அப்படி அந்த மரத்தடிக்கு வருகிறீர்களா?" என்று அந்தப் புது மனிதனிடமிருந்து பதில் வந்தபோது இளங்குமரனுக்கு வியப்பாயிருந்தது. 'இது என்ன புதுப் புதிர்?' என்று திகைத்தான் அவன்.

---

★ இந்த என்னுருவுடைக்கு அக்காலத்தில் 'நேசகம்' என்று பெயர்.

# 6 - வம்பு வந்தது!

தன் அருகே வந்து நின்றவனை நன்றாக உற்றுப் பார்த்தான் இளங்குமரன். ஓவியம் எழுதுவதற்குரிய திரைச் சீலை தூரிகைகளும், வண்ணங்களடங்கிய சிறு மரப் பேழையும் அவனிடம் இருந்தன. அவன் இளவயதினன்தான். கலை அறிவுள்ளவர்களின் முகத்துக்கு அந்தப் பயிற்சியால் வரும் அழகுச் சாயல் தவிர இயல்பாகவேயும் அழகனாக இருந்தான் அவன். ஓவியம் எழுதுவதற்கு வந்ததாகத் தன்னை அறிமுகம் செய்து கொண்ட அந்த இளைஞனே ஓவியம் போல் கவர்ச்சியாக இருப்பதை எண்ணி வியந்தவனாக அவனை நோக்கிக் கேள்விகளைத் தொடுக்கலானான் இளங்குமரன்:

"உன் பெயர் என்னவென்று நான் அறியலாமா, தம்பீ?"

"ஐயா! இந்த ஏழை ஓவியனை மணிமார்பன் என்று அழைப்பார்கள்."

"உன் மார்பில் அப்படி ஒன்றும் மணிகளைக் காணவில்லையே அப்பனே?" இளங்குமரன் குறும்பு நகையுடன் இப்படிக் கேட்ட போது அந்த இளம் ஓவியன் சிறிது நாணமடைந்தது போல் தலை குனிந்தான். பின்பு மெல்லச் சொல்லலானான்:

"ஐயா! நீங்கள் மனம் வைத்தால் இந்த ஏழையினுடைய மார்பிலும் மணிகள் ஒளிரச் செய்ய முடியும்." இதைக் கேட்டு இளங்குமரன் அலட்சியமாகச் சிரித்தான்.

"என்னைப் பற்றித் தப்புக் கணக்குப் போடுகிறாய், தம்பீ! பட்டினப்பாக்கத்தில் எவரோ பெருஞ் செல்வரின் மகன் என்றோ, வேறு விதமான பெரிய இடத்துப் பிள்ளை என்றோ என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால் இந்தக் கணமே அந்த நினைவை விட்டு விடு, மணிமார்பா. என் சித்திரத்தை நன்றாக எழுதிக் காண்பித்தால் அதை வாய் நிறையப் புகழ்வதைத் தவிர வேறு எந்தப் பரிசும் தரமுடியாதவன் நான்."

"நீங்கள் பரிசு ஒன்றும் எனக்குத் தர வேண்டியதில்லை, ஐயா! உங்கள் படத்தை நான் வரைந்து போய்க் கொடுத்தாலே எனக்கு உடனே கனகாபிஷேகம் செய்துவிடக் காத்திருக்கிறவர்கள் இந்தக் கூட்டத்தில் இருக்கிறார்களே!"

இப்படிக் கூறிவிட்டு நளினமானதொரு மென்னகை இதழ்களில் இழையோட இளங்குமரனது முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் மணிமார்பன். இதைக் கேள்வியுற்ற இளங்குமரனுக்குத் திகைப்பும், வியப்பும் ஒருங்கு உண்டாயின.

"மணிமார்பா! இந்தப் பூம்புகார் நகரம் இடைரென்று என்னை அவ்வளவு பெரிய மனிதனாக மதிப்பிடத் தொடங்கி விட்டதா, என்ன? சரிதான் போ! எனக்கு ஏதோ போதாத காலம் ஆரம்பமாகிறது போலிருக்கிறது. அப்பனே! இந்த மாபெரும் கோநகரத்தில் எனக்கு எதிரிகளும், வேண்டாதவர்களும் நிறைய இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கெல்லாம் நேருக்கு நேர் என்னிடம் வந்து சண்டையிடப் பயம். என்னுடைய சித்திரத்தை எழுதி வாங்கிக் கொண்டு போயாவது விருப்பம் போல் என்னைத் தாக்கி மகிழலாமென்று அந்த அப்பாவிகளில் யாராவது ஆசைப்பட்டிருக்கலாம். நான் முரடனாக இருக்கிறேனும். அதனால் என்னிடம் நேரே போருக்கு வர அஞ்சுகிற ஆட்கள் நிறைய இருக்கிறார்கள்."

"ஐயா! இப்போது உங்களை ஓவியமாக்கிக் கொண்டு வரச் சொல்லி என்னை அனுப்பியவர் உங்களுக்கு எதிரியில்லை.

தூக்கி மகிழ்வதற்காக உங்கள் ஓவியத்தை அவர் கேட்கவில்லை. நோக்கி மகிழ்வதற்குக் கேட்பதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது."

"அடடா! வேடிக்கையாக அல்லவா இருக்கிறது நீ சொல்லுகிற செய்தி. இந்திர விழாவின் இரண்டாவது நாளாகிய இன்று போனால் போகிறதென்று கொஞ்சம் நல்ல வாய்ப்புக்களும் என்னைத் தேடிக் கொண்டு வருகிறாற்போல் இருக்கிறது! என்னை இத்தனை பெரிய பாக்கியசாலியாக்குவதற்குத் துணிந்திருக்கும் அந்தப் புண்ணியவான் யார் அப்பனே?"

மணிமார்பன் பதில் கூறாமல் கண்களை மூடித் திறந்து குறும்பாகவும் எதையோ ஒளிக்கும் குறிப்புடனும் இளங்குமரனைப் பார்த்துச் சிரித்தான்.

"அப்பனே! நீ நன்றாகத்தான் சிரிக்கிறாய். சிரிப்பிலேயே சித்திர விசித்திர நுணுக்கங்களெல்லாம்காட்டிச்சொல்ல வந்ததை மறைக்காதே. யார் அந்தப் புண்ணியவான் என்பதை மட்டும் முதலில் சொல்!"



"புண்ணியவான் இல்லை ஐயா; புண்ணியவதி!" என்று கூறிக் கொண்டே கிழக்குப் பக்கமாகத் திரும்பி, "அதோ அந்தப் பல்லக்கிலிருந்து இறங்குகிறாரே எட்டி குமரன் வீட்டுப் புதல்வியார்-அவருக்கு உங்கள் சித்திரம் வேண்டுமாம்" என்று சுட்டிக் காட்டினான் ஓவியன். இளங்குமரன் அவன் காட்டிய திசையில் பார்த்தான். அவனுடைய முகத்திலிருந்து சிரிப்பும், மலர்ச்சியும் விடைபெற்றன. முதல் நாள் மாலை கடற்கரையில் மற்போர் வெற்றிக்காகத் தனக்கு மணிமாலை பரிசளிக்க முன் வந்த அதே அழகி பல்லக்கிலிருந்து இறங்கி ஒளி சிதறிக் கொண்டு நடைபயில்வது போல் தனது அணிமணிகள் சுடரிடத் தோழியோடு பூதசதுக்கத்து வாயிலுக்கு வருவதை அவன் கண்டான்.

"ஐயா! உங்கள் ஓவியத்தை எழுதி முடித்து அவர்கள் இங்கிருந்து திரும்புவதற்குள் கொண்டு வந்து கொடுத்தால் நூறு கழஞ்சு பொன் எனக்குப் பரிசு தருவதாகச் சொல்லி உங்களையும் அடையாளம் காட்டி அனுப்பினார்கள். நீங்கள் என் மேல் கருணை கொண்டு..."

"உன் மேல் கருணை கொள்வதற்கு நான் மறுக்கவில்லை, தம்பி! ஆனால் உனக்கு உலகம் தெரியாது. நீ சிறு பிள்ளை. உன்னுடைய சித்திரங்களின் புனைவிலும், பூச்சிலும் விதம் விதமான வண்ணங்களைக் கண்டு மகிழ்வது போல் பேரின்ப நகரமான இந்தப் பூம்புகாரின் வாழ்விலும் ஒளி தரும் வண்ணங்களே நிறைந்திருப்பதாக நீ நினைக்கிறாய். சூதும், வாதும், சூழ்ச்சியும் நிறைந்த பூம்புகாரின் வாழ்க்கைச் சித்திரம் உனக்குத் தெரிந்திராது. அங்கே வண்ணங்கள் வனப்புக் காட்டவில்லை. அழுது வடிகின்றன. வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பிவிடக் கூடாது. செல்வத் திமிர் பிடித்த பட்டினப் பாக்கத்தார் தாம் பூம்புகார் எனும் வாழ்க்கை ஓவியத்தின் மறுபுறம் மங்கி யிருப்பதற்குக் காரணமானவர்கள். இவர்களைக் கண்டாலே எனக்கு அந்த நினைவு வந்து விடுகிறது. வெறுப்பும் வந்து விடுகிறது. சிலசமயங்களில் இவர்கள் அழகையும், செழுமையையும் கண்டு கவர்ச்சி பெற்றாலும் ஆழ்ந்து சிந்திக்கும் போது என் மனம் கொதிக்கிறதுதம்பி!"

அதைக் கேட்டபின் ஓவியனுடைய மனத்தில் அவநம்பிக்கை இருள்தான் கவிந்தது. நம்பிக்கை ஒளி சிறிதும் படரவில்லை.

"ஐயா, நீங்கள் கூறுகிற கருத்துக்கள் எல்லாம் மிகவும் நன்றாயிருக்கின்றன. ஆனால் என்போன்ற ஏழைக் கலைஞனுக்கு அவற்றால் ஒரு பயனும் இல்லை. அருள் கூர்ந்து உங்களைச் சித்திரமாக்கி அந்தப் பெண்மணியிடம் அளிக்க அனுமதி தந்தீர்களானால் ஏதோ எனக்கும் அதனால் நூறு கழஞ்சு பொன் பெறுகிற வாய்ப்புக் கிடைக்கும். வெறும் உபதேசத்தினால் என்ன பயன் விளையப்போகிறது?" என்று நைந்து நம்பிக்கை யிழந்த குரலில் மணிமார்பன் கூறியபோது இளங்குமரனுக்கு அவன்மேல் சிறிது ஆத்திரம் மூண்டது. 'என் முன்னால் நின்றுகொண்டே என்னை நோக்கி, 'வெறும் உபதேசத்தால் என்ன பயன் விளையப் போகிறது' என்று கேட்கிறானே இந்த இளைஞன். 'கையாலாகாத ஆளுக்கு உபதேசம் எதற்கு?' என்று என்னையே இடித்துக்காட்டுகிறானா இவன்?'

இளங்குமரன் தன் மனத்தின் ஆத்திரத்தை முகத்தில் காட்டாமல் அவனை

உற்றுப் பார்த்தான். 'பாவம்! ஏழை ஓவியன். நாம் ஒப்புக் கொள்வதனால் நமக்கு இழப்பு ஒன்றுமில்லை. ஒப்புக் கொள்ளாவிட்டால் இவனுக்கு நூறு பொற்கழஞ்சு கிடைக்காமல் போகும். பிழைத்துப் போகிறான். செருக்கு மிகுந்த அந்தச் செல்வக் குமாரிக்காக இல்லாவிட்டாலும் இவனுக்கு ஊதியம் கிடைக்கும் என்பதற்காக இதை நாம் ஏற்றுக் கொள்ளலாம்' என்று ஆத்திரம் மாறி இரக்கம் உண்டாயிற்று, இளங்குமரன் மனத்தில். அடுத்த கணம் அவன் முகம் மலர்ந்தது. பாசத்தோடு அருகில் சென்று அந்த ஓவியன் முதுகில் தட்டிக் கொடுத்தான். "மணிமார்பா! தளராதே அப்பனே. எங்கே நான் கண்டிப்பா மறுத்து விடுகிறேனோ என்ற பயத்தில் உன் அழகிய முகம் மங்கிய வண்ணம் போல் வாடிவிட்டதே, தம்பீ! வா, என்னை வரைந்து கொள். உனக்கு நான் பயன்படுகிறேன் என்பதுதான் என் இணக்கத்துக்குக் காரணம்."

"ஐயா! 'தனக்காகவே நான் உங்களை வரைகிறேன்' என்பதை உங்களிடம் சொல்லாமல் வரைந்து வருமாறுதான் அந்தப் பெண்மணி கூறியிருந்தார். நான்தான் உங்களிடம் மெய்யை மறைக்க முடியாமல் கூறிவிட்டேன்."

"பார்த்தாயா? 'அவளுக்காக என்பதை நீ என்னிடம் கூறினால் நான் இணங்க மாட்டேன்' என்று அந்த அழகரசிக்கே நன்றாகத் தெரியும் தம்பீ!"

"ஏன் ஐயா? உங்களுக்குள் ஏதாவது கோபமா?"

"தம்பீ! இந்தக் கேள்வியெல்லாம் கேட்டு நேரத்தை வீணாக்காதே. நீ வரையத் தொடங்கு!"

இளங்குமரன் மீண்டும் குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு கண்டித்த பின்புதான் ஓவியன் மணிமார்பன் பேச்சைக் குறைத்து வேலையில் இறங்கினான். மரத்தைத் தழுவினாற் போல் படர்ந்திருந்த ஒரு முல்லைக்கொடியைப் பிடித்தவாறு மலர்ந்த முகத்தோடு சித்திரத்துக்கு வாய்ப்பான கோலத்தில் நின்றான் இளங்குமரன். திரைச்சீலையை விரித்து வண்ணப் பேழையைத் திறந்து வரையலானான் மணிமார்பன். நாளங்காடிச் சதுக்கப் பூதத்தின் பலிப் பீடிகையிலிருந்து முல்லை வழிபாட்டை முடித்துக் கொண்டு திரும்புமுன் மணிமார்பனுடைய வரைவு வேலை முடிந்துவிட வேண்டுமென்று துரிதப் படுத்தினான் இளங்குமரன். முல்லை கொண்டுவரப் போகும் நெய் எள்ளுருண்டையை நினைக்கும்போது அவன் நாவில் சுவைநீர் சுரந்தது.

"ஐயா! உண்மையிலேயே நீங்கள் மிகவும் அழகாகத்தான் இருக்கிறீர்கள்!"

"தம்பீ! அப்படியானால் என்னுடைய அழகைப் பற்றி இதுவரையில் உனக்குச் சந்தேகம் இருந்ததா? நான் அழகாயிருப்பது எவ்வளவு பெரிய தவறு என்பது இன்று இந்த நாளங்காடி நாற்சந்தியில் நீ என்னைத் தேடி வந்ததிலிருந்தே தெரிந்து விட்டது. அழகாயிருப்பதைப் பற்றி நீயும் நானும் நினைத்துப் பார்க்க நேரமேது? பொன்னிலும், யானைத் தந்தத்திலும் யவனப்பாடியிலுள்ள சிற்பிகள் எவ்வளவோ அழகான சிலைகள் செய்கிறார்களே, அவற்றையெல்லாம் விலைக்கு வாங்கிச் செல்கிறவர்கள் பட்டினப்பாக்கத்துச் செல்வர்கள்தாம். அதேபோல் அழகாயிருக்கிற ஆட்களையும் அன்பு என்கிற விலைக்கு வாங்கிவிடத் துடிக்கிறார்கள் அவர்கள்."

"நீங்கள் அதைவிடப் பெரிய விலை ஏதேனும் எதிர்பார்க்கிறீர்களோ?"

"என் தன்மானமும் தன்னம்பிக்கையும் பட்டினப்பாக்கத்து ஏழு அடுக்கு மாடங்களைவிட உயரமானவை தம்பீ!"

"என்ன காரணத்தாலோ பட்டினப்பாக்கத்து ஆடம்பர வாழ்வின்மேலும், செல்வச் சுகபோகங்கள்மேலும் உங்களுக்கு வெறுப்பு ஏற்பட்டிருப்பது தெரிகிறது, ஐயா!"

இதற்கு இளங்குமரன் பதில் சொல்லவில்லை. மணிமார்பனும் குறிப்பறிந்து பேசுவதை நிறுத்திக் கொண்டான். கரும்பு வில்லில் மலர்க்கணை தொடுத்த கோலத்தில் மன்மதன் நிற்பதுபோல் முல்லைக்கொடியைப் பிடித்தாற் போல் நிற்கும் 'இளங்குமரன்' திரைச் சீலையில் உருவாகிக் கொண்டிருந்தான்.

அப்போது சிலம்பொலி கிளரச் சிறடி பெயர்த்து நடந்து வந்தாள் முல்லை.

"உங்களை எங்கே எல்லாம் தேடுவது?" என்று கூறிக் கொண்டே நெய்மணம் கமழும் எள்ளுருண்டைப் பணியாரத்தை முன் நீண்ட அவன் கையில் வைத்துவிட்டு ஓவியனுக்கும் தருவதற்காக எதிர்ப்பக்கம் நடந்தாள் முல்லை.

பணியாரத்தை வாயிலிடுவதற்காக மேலெழுந்த இளங்குமரனின் வலக்கரம் பின்னாலிருந்து வேறொரு முரட்டுக் கரத்தால் தட்டி விடப்பட்டது. எள்ளுருண்டைகள் அந்தரத்தில் பறந்தன. அடக்க முடியாத சினத்தோடு அழற்சி பொங்கும் விழிகளைப் பின்புறமாகத் திருப்பினான் இளங்குமரன். அங்கே அன்றைக் கணக்குக்கு அவனைத் தேடி வரவேண்டிய வம்பு வந்திருந்தது. தனியாக வரவில்லை! பயங்கரமாகக் கட்சி கட்டிக்கொண்டு வந்திருந்தது! அவனது புயங்களின் தசை திரண்டது.

(தொடரும்)

# உங்கள் வாழ்க்கையில் காட்பரீஸ்



நான் வேலையின் நிமித்தம் நாடு முழுவதும் சுற்றுபவன். ரயில், பஸ் ஏன்? மாட்டு வண்டியிலும் கூடத்தான் தூரதொலைவுகளுக்குச் சென்று பசி வேளைகளில் சுத்தமானதும், சத்துள்ளதுமான உணவுப் பொருள்கள் கிடைப்பதில் பல சிரமங்கள் இருந்தன. பிறகு ஒவ்வொரு பிரயாணத்தின்போதும் காட்பரீஸ் சாக்லேட்டுகளை எடுத்துச் செல்ல ஆரம்பித்தேன். அவை சுலபமாக எடுத்துச் செல்லக் கூடியவை. சத்துள்ளவை-மிக ருசியுள்ளவையும்கூட. இடைவேளை களில் பசியைத் தணிக்க உதவு கின்றன. அதிக சக்தியையும் அவை தருகின்றன.

காட்பரீஸ் சாக்லேட்...மிட்டாய் மட்டுமல்ல—
ஒரு உணவும்கூட









## காட்பரி என்றாலே தரத்தில் உயர்ந்தது

# தேடி வந்த

இலங்கையிலேயே மிக அகலமான வீதிகளில் காலி வீதி இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறதாம். வாகனப் போக்குவரத்துள்ள நேரத்தில் அந்தத் தெருவின் ஒரு கரையில் இருந்து மறு கரைக்குப் போவது ஓர் உலகத்திலிருந்து இன்னொரு உலகத்துக்குப் போவது போலவாம். அப்படியான தெருவை நான் இத்தனை காலமாகச் சுற்றி வலம் வருவது அதிசயத்திலும் அதிசயமே!

கையிலிருந்த தடியை நீட்டி நிமிர்த்திப் பாதையைத் தட்டித் தடவிக் கொண்டு நடந்தேன். ஓ! இதுதான் அந்தத் தந்தி மரம். இன்னும் ஒரு பத்தடி தூரத்தில் தான் பஸ் நிலையம் இருக்க வேண்டும்.



"சோமசுந்தரம்! இன்றைக்கு நாடு நாடாக இல்லை. தெருப் பக்கம் போகாதே" என்று நான் அலுவலகத்தில் இருந்து புறப்படும் பொழுதே என்னில் பிரியமாக இருந்த இரண்டொருவர் கூறினார்கள்; என்னைத் தடுத்தார்கள்.

தெருவில் இறங்கிய அத்தனை தமிழருக்கும் அடியாம், உதையாம், குத்தாம், வெட்டாம்!

**ஈழத்துச் சிறுகதைப் போட்டி**

**இரண்டாம் பரிசுக் கதை 2**

# கண்கள்

உதயணன்

திருநீறு அணிந்த ஒருவனோ, வேட்டி கட்டிய ஒருவனோ, காதில் துவாரம் உள்ள ஒருவனோ எதிர்ப்பட்டால் - அவன் துப்பாக்கிக் குண்டையோ கத்தி முனையையோ தழுவி விட்டிருப்பானாம். அங்கமெல்லாம் துடித்துப் பதற அணுவணுவாக எரிந்து, பெட்ரோலுக்கும் நெருப்புக்கும் தத்தம் ஆத்மாக்களையும் அர்ப்பணித்த ஆண்கள், பெண்கள், ஏதும் அறியாச் சிசுக்கள் ஏராளமாம். அரசாங்கம் அரைத் தூக்கம் போட்ட அரை நாழிகைக்குள் - போலீஸ் ராணுவப் படையினர் போய்த் தூக்கம் போட்ட பாதி நாழிகைக்குள் - பிடி சாம்பராகி விட்ட தமிழ் மக்களின் கடைகள், வீடுகள், சடலங்கள் அதைவிட ஏராளமாம்.

இந்நிலையில் நான் ஓர் அசாதாரணத் துணிச்சலுடன் பஸ் வண்டியில் ஏறினேன். என்னை யாரும் அடித்து நொறுக்கினாலும் உயிரின் கடைசித் துடிப்பு உள்ள வரையில் நான் போகவே செய்வேன். ஏனென்றால் வீட்டில் எண்ணி யெண்ணி ஏங்கி இடிந்து போய் உட்கார்ந்திருப்பாள் — பிரேமா !

ஊரில், உலகத்தில் எல்லாரையும் போல் எனக்கும் ஒரு தாயும் தந்தையும் இருந்திருக்கத்தான் வேண்டும்; அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஒரு வருடம் ஆடிவேல் விழாவின் போது தனியாக அழுது கொண்டு நின்ற என்னைக் கடலை விற்ற கிழவன் ஒருவன் கண்டு அழைத்துப் போய் வளர்த்தானாம். வளர்த்து ஆறுவது வயதில் இரத்மலானை குருடர், செவிடர் பாடசாலையில் சேர்த்து விட்டானாம். எனது பூர்வீகத்தின் கதை அவ்வளவுதான்.

செவிடர், குருடர் பாடசாலையில் ஒவ்வொருவருக்கும் அவ்வவரின் ஆற்றலையும் விருப்பத்தையும் அறிந்து அந்தத் துறையில் பயிற்சி தந்தார்கள். அதன்படி நான் கருக்கெழுத்துத் தட்டெழுத்தில் பயிற்சி பெற்று இறுதிப் பரீட்சையிலும் தேறி விட்டேன்.

இனி ?...

சுவரில் முட்டையைப் போட்டு விட்டுப் பல்லி தன் பாட்டுக்குப் போய் விட்டால் அந்த முட்டை பொரிவதில்லையா? அதிலிருந்து வெளிவந்த சின்னஞ் சிறு பல்லி முதல்நாள் இரையைத் தேடி, இரண்டாம் நாள் வழியைத் தேடி, மூன்றும் நாள் உறையுள் தேடி வாழவில்லையா ?

சுழி நிறைந்த தண்ணீரில் முட்டையை மிதக்கவிட்டுத் தவளை போய் விட்டால், அதிலிருந்து ஒரு புதிய சீவன் தோன்றவில்லையா ? அந்த ஆன்மா நீந்தத் தெரிந்து, துள்ளத் தெரிந்து, தாவத் தெரிந்து சீவிக்கவில்லையா ? இத்தனைக்கும் அருள் பாலித்த இயற்கை மாதா எனக்கு ஒரு பாதையை அடைத்திருந்த போதிலும் ஒரு பாதையைத் திறந்து வைத்திருந்தாள்.

படித்துப் பட்டம் பெற்ற எத்தனையோ வாலிபர்கள் வேலை இடையாமல் வாடி வதங்கும் இந்த ஈழ மணித்திருநாட்டில், ஒரு சமூக சேவை நிலையம் எனக்கே—ஒரு குருடனுக்கே ஒரு தொழில் தந்து உதவியது என்றால், கருணை மனம் படைத்தவர்களும் இங்கு வாழ்கிறார்கள் என்றுதான் பொருள்.

நான உழைத்துச் சம்பாதித்துக் காணி வாங்கி வீடு கட்டி வாழ வேண்டும் என்ற அவசியம் இல்லை; இவை யாருக்காக? உயிரோடு உள்ள நாட்கள் நகர வேண்டும். அவ்வளவுதான். எங்கேயாவது படுத்தெழும்பி



எப்படி வாழ்ந்தாலும் போதும் என்றும், வெள்ளவத்தையில் அந்த வீட்டில் ஒரு தனி யறை எனக்குக் கிடைத்தது. அறையாக இருந்தாலென்ன, அம்பலமாக இருந்தா லென்ன? என்னைப் பொறுத்த வரையில் செக்கும் சிவலிங்கமும் ஒன்றுதான்!

கொழும்புக்கு வருகிறவர்கள் விகாரமா தேவி பூங்காவையும் காலிபேஸ் மைதானத் தையும் கட்டாயம் பார்க்க வேண்டும் என் கிறார்கள். என்றும் அவற்றைப் பார்க்க முடியாது. இயற்கையன்னையின் எழில் மிக்க படைப்புகள் மலைகளாய், மடுக்களாய், மனத்தை யள்ளும் மரங்களாய், செடிகளாய்க் கொழித்துக் கிடப்பதையும் அவை நடுவே சின்னஞ்சிறு சிங்கார நதிகள் வளைந்து நெளிந்து ஒய்யாரமாகக் குதித்தோடும் காட்சி யையும் மலை நாட்டில் காணலாம் என்கி றார்கள். என்றும் அவற்றைக் காண முடி யாது. எம்மதத்தாரும் சம்மதத்தோடு வழி படும் சிவனொளிபாத மலையும், லட்சோப லட்சம் மக்கள் மனத்தில் இடம் பெற்ற கதிர்காமமும் ஈழத்தில்தான் இருக்கின்றன என்கிறார்கள். என்றும் அவற்றைத் தரிசிக்க முடியாது. ஏனென்றால்—

நான் ஒரு குருடன்!

ஆண்டவன் எனக்கு எத்தனை வஞ்சகத்தைச் செய்தாலும் நான் சகித்துக் கொள்ளச் சித்த மாக இருக்கிறேன். ஏனென்றால் அதே ஆண் டவன் என்னில் அன்பு செலுத்தவும் ஓர் ஆத்மாவைப் படைத்திருந்தார்.

அவள்தான் பிரேமா!

ஆமாம், இந்தப் பிரேமா இருக்கிறாளே, இவள் யாரோ ஒரு சிங்களப் பெண். வெள்ள வத்தையில் ஓர் ஆசிரியையாக இருக்கிறாள். தொழில் நிமித்தம் என்னைப் போலவே நான் இருந்த வீட்டில் தஞ்சம் புகுந்தவள்.

நான் வாசற்படியில் இறங்கித் தடுமாறும் பொழுது, சுவரோடு மோதிக்கொண்டு நிலை தவறும்பொழுது, பாதை என்று எண்ணிப் படுகுழியில் இறங்கிவிடும்பொழுது, பிரேமா ஓடிவந்து கை கொடுப்பாள். எனது கரத்தை அன்போடு பற்றி அழைத்துச் செல்லுவாள். சாப்பிட, சட்டை மாற்ற, சகலமும் செய்ய உதவிபுரிவாள். இருபத்தைந்து லட்சம் தமிழ் பேசும் மக்கள் மத்தியில் ஒரு தமிழனாகப் பிறந்த எனது வாழ்க்கை நகர அந்தச் சிங்களப் பெண் பிரேமா மூலாதாரம் என்றால் எங்கள் இருவரையும் இணைத்து வைத்த சக்திக்குத் தான் பெயர்—

மனிதத் தன்மை!

நாளாவட்டத்தில் என்றும் முடிந்த ஒரு வேலையைச் செய்வதற்கும் பிரேமா தேவைப் பட்டாள். ஏன்? ஏனென்றால் எனது கண்கள் தாம் குருடு. எனது உள்ளம் குருடல்ல. எனது உணர்வு குருடல்ல. எனது அங்கத் துடிப்புகள் குருடல்ல.

''சோமு! உங்களுடைய எதிர்காலத்தைப் பற்றி என்ன எண்ணியிருக்கிறீர்கள்?'' என்று பிரேமா ஒரு நாள் என்னைக் கேட்டாள். அவளுக்குத் தமிழ் தெரியாது. அந்தக் குறை யும் சேர்ந்து எனக்குச் சிங்களம் நன்றாகத் தெரிந்திருந்தது.

''என்னவா? இப்படியேதான் தடவித் தடவிப் போகும்'' என்றேன்.

''நீங்கள் கல்யாணம் செய்து கொள்ள மாட்டீர்களா?''—பிரேமா கேட்டாள்.

''பட்டுக் குஞ்சமா?'' நான் கேட்டேன். ''துடைப்பத்துக்கா? இந்தக் குருடனைக் கட்டிக் கொள்ள எந்தப் பெண்ணுக்குக் கண் கெட்டு விட்டது? அதெல்லாம் இல்லை.''

''சோமு!''

''ம்!''

''உங்களை நானே கல்யாணம் செய்து கொள்ளுகிறேன். ஆட்சேபனை இல்லையே?''

''பிரேமா! நீ? நீயா?'' எனது உள்ளம் உருண்டு புரண்டு தடுமாறித் துடித்தது. ஏதோ ஒன்று என் கண்டத்தை வந்து அடைத்து நின்றது.

''ஆமாம், சோமு!''

''பிரேமா! உனக்கு என்னில் இரக்கம், அன்பு, அனுதாபம் இருந்தால், அவற்றை எனக்கு உதவி செய்வதோடு நிறுத்திக் கொள். இந்தக் கபோதியை நம்பியா உனது வாழ்க்கையை ஆரம்பிக்க எண்ணுகிறாய்? வேண்டாம் பிரேமா, வேண்டாம்.''

''இல்லை, சோமு!''

அவளுடைய குரல் கரகரத்தது. ''நான் உங்களைக் காதலிக்கிறேன்'' என்று பிரேமா நிதானமாகக் கூறி முடித்தாள்.

என்ன? கா...காதலா?

ஐயோ! இத்தனை லட்சம் மக்களில் இவ ளுடைய காதல் இந்தக் குருடன் மேலா பிறக்க வேண்டும்? இவள் ஏன் என்னைக் காத லிக்கிறாள்? எனக்கோ மூடிய கண்களுக்கும் விழித்த கண்களுக்கும் உலகம் இருளாகத் தோன்றுகிறது. அவளையோ அழகியென் கிறார்கள். அவளுக்கு அருமையாக ஒரு சேலை வாங்கித் தந்து அதைக் கட்டச் சொல்லி, அவளுடைய கூந்தலில் ஆசையாக ஒரு மலரைச் செருகி அவளை, அவளுடைய சுந்தர வடிவைப் பார்க்க, பருக, போற்ற, புகழ, பெருமைப்பட என்றும் முடியுமா? முடியாது. அவளுடைய உடலுக்கு—உள்ளத் துக்கு ஒன்று வந்துவிட்டால் ஓடியாடி உதவத் தான் என்றும் இயலுமா? இயலாது.

''பிரேமா! உனது உயர்ந்த புனிதமான அன்பை உயிர் உள்ளவரையில் மறவேன். வேறொருவனை மணந்து கொள். உனக்கு ஏற்றவன் நானல்லன்'' என்று நாத் தழு தழுக்கக் கூறினேன்.

அவள் பதில் பேசவில்லை. சேலைத் தலைப் பால்—அப்படித்தான் இருக்க வேண்டும்— எனது பாழ் விழிகள் கொட்டிய நீரைத் துடைத்து விட்டு என்னை அணைத்துக் கொண் டாள். அவளுடைய கண்களும் பனித்திருந் ததை எனது விரல்கள் உணர்ந்து பதறின.

''எனக்கு யாரும் இல்லை. ஓர் அனாதை. உங்களுக்கும் யாரும் இல்லையென்றீர்கள். நாம் இரண்டு பேரும் சந்தோஷமாக வாழ் வோம். மறுக்காதீர்கள், சோமு!'' என்று பிரேமா கெஞ்சினாள், விம்மினாள், அழுதாள்!

அவளுடைய அன்புக்கு நான் அடிபணிந் தேன். தூய காதலுக்குத் தலைவணங்கினேன். அவளுடைய கையை மனைவி என்ற உரிமை

யோடு பற்றிக் கொண்டு வாழ்க்கைப் பாதையில் ஒரு புதிய கோணத்தில் திருப்பினேன்.

''பிரேமா! ஏதோ கொடுமையால் நான் குருடனாய்ப் பிறந்துவிட்டேன். இந்தப் பிறப்பில் உனக்குக் கணவனாக இருந்து உன்னை இதயபூர்வமாகப் பூசித்து வந்தாலே எனக்கு விமோசனம் கிடைத்துவிடும். பிரேமா! அன்புக்கு நிரந்தர உறைவிடம் உனது உள்ளம் தான். பிரேமா! கருணைக்கும், பரிவுக்கும் பவித்திரமான பிறப்பிடம் உனது வார்த்தைகள்தாம். பிரேமா! இன்பம், நிம்மதி, திருப்தி யாவுக்குமே ஜனனம் உனது அணைப்பில்தான். நீ ஒரு சாதாரணப் பெண்ணல்ல!...''

ஒரு நாள்...

சிந்தனையில் என்னையே மறந்து விட்டதையும் கடந்து நடந்துகொண்டிருந்த என்னைப் பிரேமா ஓடி வந்து தடுத்து நிறுத்தி வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். என்னை ஒரு நாற்காலியில் அமர வைத்துச் சட்டைப் போத்தான்களைக் கழற்றிக் கொண்டே—,

''அத்தான்!'' என்றாள். அவளுடைய குரலில் வேதனை இழையோடுவதை என்னால் உணர முடிந்தது.

''என்ன பிரேமா?''

''அத்தான்......!'' என்றாள் மீண்டும். அவளுடைய குரல் நடுங்கியது. இரண்டு சொட்டுக் கண்ணீர் எனது கையில் விழுந்து தெறித்தது.

''சொல்லு, பிரேமா!'' நான் துடித்துப் போனேன்.

''அவன்—பியதாசாவைப் பற்றிச் சொன்னேனே...''

ஆமாம், சொன்னாள்.

பியதாசா என்பவனும் சிங்களச் சமூகத்தைச் சேர்ந்த ஒருவன்தான். பிரேமா கன்னிப்பெண்ணாக இருந்த காலத்தில், பாடசாலைக்குச் செல்லும்போதும் வரும்போதும் பியதாசா அவளைப் பின்தொடர்ந்து திரிவானாம். அவள் என்னை—ஒரு தமிழனை—கல்யாணம் செய்துகொண்ட பின்னர் அவன் நேரடியாகப் பேச்சுக் கொடுப்பதும் கேலி செய்வதுமாக இருந்தானாம். கடந்த வாரம் கூட, ''உனக்கு அந்தக் குருட்டுப் பயல்தான் சரி'' என்றானாம். இவள் காறித் துப்பிவிட்டு வந்திருக்கிறாள்.

''அந்தப் பியதாசா...!''

''ம்! சொல்லம்மா!''

''இன்றைக்கு என்னை வழிமறித்து...!''

''என்ன செய்தான்...?''

பிரேமா தொடர்ந்து சொல்லவில்லை. எனது மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள். அவளுடைய இதயக் கடல் குமுறி எழுந்து கண்களின் மடை திறந்து கன்னத்தில் வழி பறித்துப் பாய்ந்தது.

நான் அவளுடைய கண்ணீரைத் துடைத்து விட்டேன். கன்னத்தைத் தடவி விட்டேன். கூந்தலை வருடி விட்டேன். இவை தவிர என்னால் வேறு என்ன செய்ய முடியும்? இவற்றுக்கு மேலாக ஒரு கண் கெட்ட கபோதியிடம் எதை எதிர்பார்க்க முடியும்?

படித்துப் படித்துச் சொன்னேனே இந்தப் பேதைப் பெண்ணிடம், கேட்டாளா? அன்று இவள் தனது உள்ளக் கருத்தைச் சொல்லு முன்பிருந்தே நான் இவளை உயிருக்கு மேலாக நேசித்து வந்தேன். எனினும் இவளுக்கு நான் ஏற்றவனில்லை என்றல்லவா அவ்வளவு தூரம் மறுத்துப் பேசினேன். இந்தப் பிரேமாவின் கணவனும் கண் படைத்தவனாக, பலமுள்ளவனாக, உலகம் தெரிந்தவனாக இருந்தால் அந்தப் பியதாசா இவ்வளவு தூரம் வந்திருப்பானா? அப்படி ஓர் ஆண் மகன் இவளுக்குக் கணவனாக இருந்தால் அவன் தனது உயிருக்கு உயிரான மனைவியைக் கவசம் போல் காத்து நிற்க மாட்டானா? குருடனாய், பேடியாய், வலிவிழந்தவனாய் — ஆனால் பிரேமாவுக்குக் கணவனாய்ப் பிறந்துவிட்ட நான் இப்பொழுது என்ன செய்ய? தெய்வமே! இந்த உலகம் அழிந்து ஒரு புதிய உலகைப் படைக்க நேர்ந்தால் எல்லோரையும் குருடர்களாகப் படைத்து விடு. அப்படியிருந்தால் மனிதர்கள்



''பையன் யார் சார்? புதுசா இருக்கே!''

''என் 'ஸிஸ்டர் ஸன்' சார்... இப்ப சத்தியா என் நிழல்லேதான் இருந்திண்டிருக்கான்!''

ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு புரள மாட்டார்கள், முட்டி மோதிக் கொள்ள மாட்டார்கள்.

நான் பிரேமாவுக்கு நாலு வார்த்தைகள் ஆறுதலாகச் சொல்லி வைத்ததோடு அவள் ஆறுதல் கண்டாளோ இல்லையோ, என்னால் ஆறுதல் காண முடியவில்லை. விரைவில் வேறொரு வீடு பார்த்துப் பிரேமாவை அங்கிருந்து அழைத்துப் போய் விடவேண்டும் என்று எண்ணியிருந்தேன்.

ஆனால் இன்று?.

வெள்ளவத்தையில் இறங்கி நடந்தேன். யாரோ ஒருவன் வந்து என்னோடு மோதிக் கொண்டு 'ஸாரி!' என்று பாய்ந்து ஓடினான். பாவம், அவன் ஒரு தமிழனாயிருப்பான், அடிக்குப் பயந்து அப்படி ஓடிக் கொண்டிருப்பான் என்று எண்ணினேன்.

அந்தத் தபால் பெட்டி எனது கைத்தடி முனையில் முட்டிக் கொண்டு நின்றது. நடுச் சந்தியில் ஒரு போலீஸ்காரன் நின்று 'இந்தப் பக்கம் போ, அந்தப் பக்கம் போ' என்பானும்-சொல்லுகிறார்கள். இந்தத் தபால் பெட்டி தான் இத்தனை காலமாக எனக்கு அந்தச் சேவையைச் செய்து வருகிறது. வலது புறமாகத் திரும்பி நடந்தேன். இன்னும் கொஞ்ச தூரம் போனால் வீடுதான்—என் வீடு. அங்கு எனக்காகக் காத்திருப்பாள்—பிரேமா!

''டேய், இவன்தான்டா அந்தத் தெமல பண்டி......'' என்ற பேச்சு என் காதில் தெளிவாக விழுந்தது. நிச்சயமாக அவன் பியதாசாவாகத்தான் இருக்கும். அடுத்த நிமிஷம்....

எனது தலையில் 'படார்' என்று ஓர் அடி விழுந்து அதிர்ந்தது. எனது கைத்தடி எங்கோ காற்றில் பறந்தது. மண்டையில் இருந்து ரத்தம் குபு குபு வென்று பெருகியது. சுற்றிச் சுழன்று தரையில் விழுந்து துடித்தேன். தூங்குகிறவனைத் தொட்டு எழுப்புதல் அதர்மம் என்றெல்லாம் சொல்லி வைத்தவன் குருடனைப் பின்னின்று தாக்குவதைப் பற்றி ஏதும் சொல்லவில்லையா?

புத்தனைப் பணிந்து வணங்கப் பொற்கோவில் கட்டும் பக்தர் சமூகத்தில், பிரேமாக்களைப் போன்ற உத்தம சீலர்களும் நிறைந்த சிங்களச் சமூகத்தில் பியதாசாக்கள் போன்ற புல்லுருவிகளை ஏன் படைத்தாய் இறைவா? இந்த உலகத்தில் உள்ள மக்கள் எல்லோருமே நல்லவர்களல்ல; அதேல் தீயவர்களுமல்ல.

குருதி வடிந்த தலையோடு, கைக்கோலில்லாத அநாதரவான நிலையில் காடையர் ஆட்சிக் குட்பட்டிருந்த அந்தத் தெருவில் தள்ளாடித் தள்ளாடி நடந்தேன். இன்னொருவன் வந்து மண்டையை அடியோடு அடித்து உடைக்கட்டும், வேறொருவன் வந்து எனது குரல் வளையை நெரித்துக் கொல்லட்டும், மற்றொருவன் வந்து எனது உடலை அங்கம் அங்கமாக ஒடித்துப் போடட்டும். நான் நடந்து கொண்டுதான் இருப்பேன். எனது அன்புக்குரியவளிடம் போய்விட்டால் எனக்கு எந்தத் துன்பமும் இருக்காது! எந்தப் பெருந் துன்பமும் வாட்டாது.

எப்படியோ தவழ்ந்து புரண்டு வீட்டை அடைந்து விட்டேன். நான் வாயிற்படிகளில் தடுமாறி ஏறும்பொழுது எனது கால்களில் தடுக்கிய உடல்—

யாரது? பிரேமாவா......?

எனது இதயம் வெடித்து, மண்டை நொறுங்கி உடல் எல்லாம் அனல் பற்றி எரிந்தது.

''ஐயோ பிரேமா!'' நான் அவளை வாரி அணைத்து வாய்விட்டுக் கத்தினேன்.

''அத்தான்......!'' அவள் ஈனகரத்தில் முனகினாள்.

''என்ன நடந்தது, பிரேமா?''

''அவன்தான் பியதாசா......''

''கண் இழந்த என்னைத் தேடி வந்து கண்ணுக்குக் கண்ணாக, கண்ணிலும் மேலாக இருந்து எனக்கு வாழ்வளித்த உனக்கு இந்த அவலநிலையில் என்ன செய்வேன், பிரேமா? ஏது செய்வேன், பிரேமா?'' உணர்ச்சிப் பொருமலில் உரக்கக் கூவினேன்.

''அத்தான்......! மானத்துக்குப் போராடினேன். உயிருக்கு மன்றாடினேன். கடைசியில் ஒன்றுதான் மிஞ்சியது.''

''பிரேமா, என் கண்ணே! என்னை மீண்டும் குருடனாக்கிவிடாதே. இங்கு வாழ முடியாவிட்டால் நாம் இருவரும் மனித சஞ்சாரம் இல்லாத இடத்துக்கு ஓடிப் போவோம்'' என்று அவளுடைய பட்டுடல்மேல் விழுந்து கதறி அழுதேன். நான் கூறியதை அவள் எப்படி விளங்கிக் கொண்டாளோ? அதன் மேல் அவள் என்னுடன் பேசவில்லை, பேசவில்லை—பேசவேயில்லை!

---

# மரகதச்சிலை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: வினு



















பூதமே! தூங்கும் நிர்மலாவைத் தூக்கிப் போய் வேறோர் இடத்தில் போடு....


மதனே, நாக நந்தினி! நீ ஆதித்தனைத் தொடர்ந்து சென்று உன் வயப்படுத்திக் கொள்


இதுவன் தான் மந்திரவாதி என்பதையோ, இரவில் நிகழ்ந்த ஆள் மாறாட்டங்களையோ உணராத ஆதித்தன் காலையில்
பெரியவரே சென்று வருகிறோம், விடை கொடுங்கள்.


[குள்ளனின் குழப்பம்]
அரசகுமாரி நிர்மலாவின் உருவமும் பார்வையும் பேச்சும் என் மனத்தில் ஏதோ காரணமற்ற கலக்கத்தை உண்டாக்குகின்றன. ஒரு வேளை சீ சீ..! இப்படியெல்லாம் என் உள்ளம் நினைப்பானேன்?.....


போலி நிர்மலா தன் கைவரிசையைக் காட்டுகிறாள்
உங்களை நினைத்துக் கொண்டேன் சிரிப்புத் தாங்கவில்லை
ஏன் இப்படிச் சிரிக்கிறாய் நிர்மலா?


அந்த மிருகம் துரத்தும் போது நீங்கள் எப்படி நடுங்கிப் போய் ஓடி வந்தீர்கள்....!


என் தந்தையின் நண்பர் உன் தந்தை என்பதற்காக உன் ஏளனப் பேச்சை நான் பொறுத்துக் கொள்ளுகிறேன். இல்லாவிட்டால்...


மாய நிர்மலா மேலும் மேலும் ஆதித்தனைக் கோழை என்று ஏசுகிறாள். அன்றுதான் அமுதும் அவையில் கூறியதும் எல்லாம் வெறும் கட்டுக் கதை என்று கலகல வென்று நகைக்கிறாள். இதற்கு மேல் தாங்கமுடியாத ஆதித்தன் அவளை விட்டு விட்டுக் கோபமுடன் முன்னேறுகிறான். போலி நிர்மலாவின் சிரிப்பொலி அவன் காதுகளில் வெகுதூரம் வரை கேட்டுக் கொண்டிருக்கிறது..


இளவரசே, நேற்றிரவு நான் ஒரு
கனவு கண்டேன். மேகலையைச் சுற்
றிப் புதர்கள் அடர்ந்திருந்தன. ஒருவன்
நீலகேசியாக மாறி நிர்மலாவைத்
தூக்கிக் கொண்டு போகிறான். அப்புறம்
ஏதேதோ பயங்கரமாக. நம்மோடு
காவலில் இருப்பது நிர்மலா
தானா என்பது சந்தேகமாக......
உன் கனவைச் சொல்லி என்
நிலைமையைக் குழப்பாதே.
அவளைப் பற்றி என்னிடம்
பேசாதே


அன்று நெடு நேரப் பிரயாணத்துக்குப்பின் வழியில்
முரடன் ஒருவன் ஒரு பெண்ணைத் துன்
புறுத்துவதைக் காண்கிறான்
ஐயோ, என்னைக்
காப்பாற்றுவார் யாரு
மில்லையா?


அபலைகளிடம் அடாத
முறையில் நடந்து
கொள்பவனின்
கதி இது தான்


பெண்ணே உன்னைப் பார்த்தால் உயர் குலத்தில்
பிறந்தவளாகத் தெரிகிறது, நீ யார்? இந்த
முரடனிடம் எப்படிச் சிக்கினாய்?
ஐயா நான் ஒரு துர்ப்பாக
கியவதி. என் கதை சோக மய
மானது. என் பெயர்
சுமதி.....


நான் விரும்பிய ஒரு
அரசகுமாரனுக்கு
என்னை மணம்
முடிக்கத் திட்ட
மிட்டார் என்
தந்தை.
ஆனால்
புலிக்கண்ணன்
என்ற இவனும் சிங்க
முகன், வேங்கை மார்பன் என்ற
இவன் சகோதரர்களும் என்னைத்
தங்களுக்கு மணம் செய்து
கொடுக்கும்படி கேட்டனர். என்
தந்தை மறுத்து விட்டார். ஆகவே
மணப் பந்தலில் புகுந்து என் மணா
ளனைக் கொன்று என்னையும்
சிறைப்பிடித்துக் கொண்டு வந்து
விட்டான் இந்தப் பாவி.....


கண்ணீர் சிந்தாதே பெண்ணே உன்னை உன்
பெற்றோரிடம் சேர்ப்பித்து விடுகிறேன்.
காளி! அந்த
வாளையும்
வீரனின்
கேடயத்தை
யும் எடுத்
துக் கொள்


அவள் மந்திரவாதி நீலகேசியின் பெண்,
மாயக்காரி நாககந்தினி என்பதை அறி
யாத ஆதித்தன் அவளுக்கு அடைக்கலம்
அளித்து அழைத்துச் செல்லலானான்.


தொடரும்

# கந்தனை அனைய கடம்பந்துறையார்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஓர் அரசவை. அங்கே புலவர் பலர் குழுமி யிருக்கின்றனர். புலவர்கள் கூடியதால் பாடல், எதிர்ப்பாடல் இடையிடையே 'சமுத்தி' என்றெல்லாம் நடக்கிறது. சமுத்தி என்றால்தான் தெரியுமே ஒருவர் கடை அடி கொடுக்க, மற்றவர் பாட்டை முடிக்க; ஒருவர் அடியெடுத்துக் கொடுக்க மற்றவர் தொடர்ந்து பாட; ஒருவர் ஒரு கருத்தைச் சொல்ல அந்தக் கருத்தை அமைத்து மற்றவர் பாட என்று அமையும் அல்லவா? அந்த அவையில் ஒரு புலவர் விரும்புகிறார், சூரியன் செல்லும் கதி முழுதும் வரும்படி ஒரு வெண்பாப் பாட வேண்டும் என்று. உடனே பாடுகிறார் ஒரு புலவர்.

குண கடலில் தோன்றி
கோகனப் போதை
மணமுடனே நன்றாய்
மலர்த்தி—வணமாக
நாற்றிசைகள் எங்கும்
நன்றாய் ஒளிபரப்பி
மேற்றிசைக்குச் செல்லும்
வெய்யோன்

என்பது பாட்டு. ஆம்! காலை சூரிய உதயத்தி லிருந்து மாலை அஸ்தமனம் வரை சூரியனின் கதியை அல்லவா பாடல் கூறுகிறது. நாமும் தான் சூரிய உதயத்துக்கு முன்னமேயே எழுந்திருக்கிறோம். அவன் வான வீதியில் உலா வரும்போது உடல் உழைத்துப் பணி புரிகிறோம். அவன் மாலையில் மறைந்ததும் அயர்ந்து திரும்பவும் படுக்கைக்குச் செல்லு கிறோம். இதற்கிடையிலேதான் கோயில், குளம், பூசை, புனஸ்காரம் எல்லாம். ஆனால் இப்போது நான் உங்களை வேண்டுவது ஒரு நாள் முழுதும் கோயில் வழிபாட்டுக்கு என்று ஒதுக்கி வைக்க வேண்டும் என்று. வேண்டுமானால் அதுவும் ஞாயிற்றுக் கிழமையாக இருக்கட்டும். வாரத்துக்கு ஒரு நாளாகிய ஞாயிற்றுக்கிழமை தான் எல்லாத் துறையில் உள்ளவர்களுக்கும் ஓய்வுண்டே. எதற்காகச்சொல்லுகிறேன் என்றால், திருச்சி மாவட்டத்திலே உள்ள மூன்று கோயில்களுக்குக் காலையில் ஒன்றுக்கும் மதியத்தில் ஒன்றுக்கும் மாலையில் ஒன்றுக்கும் சென்று அங்குள்ள சந்நிதிகளில் வழிபாடு செய்தால் பலனுண்டு என்று ஒரு நியதி இருக்கிறதே அந்த நியதியையும் அந்த வட்டார மக்கள் ஒரு நல்ல பழமொழியாக அல்லவா சொல்கிறார்கள். 'காலைக்கடம்பர் மத்தியானச் சொக்கர், அந்தித் திருவேங்கி நாதர்' என்பதுதான் பழமொழி. கடம்பர் இருப்பது குழித்தலையிலே, சொக்கர் இருப்பது சிவாயமலையிலே, திருவேங்கிநாதன் இருப்பது திருஈங்கோய் மலையிலே. இவற்றைக் கடம்பந்துறை, வாட்போக்கி, மரகதமலை என்றும் புராணங்கள் கூறும். இவை மூன்றையும் ஒரே நாளில் மக்கள் ஏன் வணங்க வேண்டும் என்பதற்குக் காரணமும் கூறுவர். இந்த மூன்று தலங்களும் சோமாஸ்கந்த மூர்த்தம் போல் அமைந்திருக்கின்றனவாம். உண்மை தான். தெற்கேயுள்ள வாட்போக்கி சிவனது உருவத்தில் உயர்ந்த மலைமேல் இருக்கிறது. வடக்கே உள்ள ஈங்கோயும் சக்தி உருவில் மலையாக உயர்ந்திருக்கிறது. இடையே உள்ள கடம்பந்துறைதான் தரையோடு தரையாய்க் கந்தன் உருவத்தில் இருக்கிறது. அதனால் தான் இம்மூன்று தலங்களையும் அங்குள்ள மூர்த்திகளையும் ஒரே நாளில் கண்டு வணங்கினால், சோமாஸ்கந்த மூர்த்தியையே வணங்கிய பலன் கிடைக்கும். சரிதான் புறப்படுவோம் மூன்று தலங்களையும் ஒரே நாளில் கண்டு தரிசிக்க.

ஆம். முதல் முதலில் கடம்பந்துறைக்கே செல்வோம். அத்துறை கந்தனின் அம்சமாக இருப்பதினால் அல்ல. அங்கு செல்லத்தான் ரயில் வசதி இருக்கிறது. திருச்சி ஈரோடு லயனில் இருக்கிறது கடம்பந்துறை. ரயில்வே ஸ்டேஷனில் கடம்பந்துறைக்கு ஒரு டிக்கட் என்று கேட்டால், புக்கிங் கிளார்க் பரக்கப் பரக்க விழிப்பார். ஆதலால் டிக்கட்டைக் குழித்தலைக்குத் தான் எடுக்க வேணும். குழித்தலை என்ற பெயரில் தானே கடம்பந்துறை இன்று விளங்குகிறது. இக்குழித்தலை திருச்சிக்கு மேற்கே இருபத்திரண்டு மைல் தொலையில் ஒரு தாலூகாவின் தலைநகராய் விளங்குகிறது. ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி வடக்கு நோக்கி ஒரு மைல் நடந்தால் அங்குள்ள கடம்பவனநாதர் கோயில் வாயில் வந்து சேரலாம். கோயில் காவிரிக் கரையிலே



ஈங்கோய் மலை விமானம்



சிவாய மலை

இருக்கிறது. சிவன் கோயில்களெல்லாம் ஒன்று கிழக்கு நோக்கி, இல்லை, மேற்கு நோக்கி, இருப்பதைத்தான் பார்த்திருக்கிறோம். இந்தக் கோயில் மாத்திரம் வடக்கு நோக்கி இருக்கிறது. கங்கைக் கரையில் காசி விசுவநாதர் கோயில் வடக்கு நோக்கியிருப்பதுபோல் காவிரிக்கரையில் வடக்கு நோக்கி இருக்கும் கோயில் இது ஒன்றுதான். இங்குள்ள இறைவன் வடக்கு நோக்கியிருந்தால், இறைவியாம் முற்றிலாமுலையம்மை கிழக்கு நோக்கியே நிற்கிறாள். கோயிலுக்குள் நுழையுமுன் ஏன் இத்தலம் குழித்தலை என்றும் கடம்பந்துறை என்றும் பெயர் பெற்றது என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? குளிர்ந்த சோலைகளை உடையதால் குழித்தண்டலை என்று பெயர் பெற்றிருக்கிறது. குழித்தண்டலையே குழித்தலை என்று குறுகி யிருக்கிறது. ஆதியில் இந்தப் பிரதேசம் கடம்பவனமாக இருந்திருக்கிறது. இன்றும் இக்கோயிலின் தலவிருட்சம் கடம்ப மரமே. கடம்ப வனத்திடையே அமர்ந்தவர் கடம்பவன நாதராகி யிருக்கிறார். காவிரிக் கரையில் கட்டப்பட்ட கோயில் ஆனதினால் கடம்பந்துறை என்று பெயர் பெற்றிருக்கிறது. இத்தலத்துக்கு வந்த அப்பர்,

> பூமென் கோதை உமையொரு பாகனை
> ஓமம் செய்து உணர்மின்கள்
> உள்ளத்தால்;
> காமன் காய்ந்த பிரான் கடம்பந்துறை,
> நாமம் ஏத்த நம் தீவினை நாசமே.

என்று பாடி யிருக்கிறார்.

இனி, கோயிலுள் நுழையலாம். கோயில் பெரிய கோயில் அல்ல. கருவறையில் லிங்கத் திருவுருவுக்குப் பின்னே சப்தகன்னியர் உருவச் சிலைகள் இருக்கின்றன. வெளிப் பிராகாரத்தின் வடமேற்குப் பகுதியிலேதான் இறைவியின் சந்நிதி. அம்மையின் சந்நிதிக்கு முன் பரமநாதர் வடிவம் இருக்கிறது. இவரே இத்தலத்தின் காவல் தெய்வம். ஆனால் இவரோ, நாம் அவரை அணுகு முன்பே வலக்கையை நேரே உயர்த்திச் சலாம் போடும் பாவனையில் நிற்கிறார். சலாம் போட்டு நம்மை வரவேற்பவர்க்கு நாமும் சலாம் போட்டு விட்டே நடக்கலாம். இக்கோயிலில் இரண்டு சோமாஸ்கந்த மூர்த்திகள், இரண்டு நடராஜ மூர்த்திகள். இரண்டு நடராஜரில் ஒருவர் காலடியில் முயலகன் இருக்க மாட்டான். ஏதோ அயர்ந்து மறந்திருந்த பொழுது எழுந்து ஓடியிருப்பான் போலும்! இந்த நடராஜ வடிவம் பல வருஷங்களுக்கு முன் பூமியின் அடியிலிருந்து கண்டெடுக்கப்பட்டது என்கிறார்கள். இக்கோயிலில் வேறு பார்க்க வேண்டியவை ஒன்றும் இல்லை. இக்கோயில்களில் உள்ள கல்வெட்டுக்களில் ஒன்று 1552ல் விஜயநகர மன்னன் கிருஷ்ணதேவ ராயனது. அதில் இத்தலத்தை ராஜ கெம்பீர வளநாட்டுக் குழித் தண்டலைச் சீமையான கணபதிநல்லூர் என்று குறித்திருக்கிறது.'காலை ஏழு மணிக்கே இங்கு வந்திருக்கிறோம். இப்போது மணி ஒன்பது. இன்னும் இரண்டு கோயில்களை மாலை மயங்குவதற்குள் சென்று காண வேண்டும். நீர் என்னடாவென்றால் இப்போதுதான் கல்வெட்டுக்களை ஆராய முனைகிறீர்' என்று நீங்கள் சொல்வது என் காதில் விழத்தான் செய்கிறது. ஆதலால் இந்தத் தலத்தை விட்டுப் புறப்படலாம், மத்தியானச் சொக்கரைக் காண்பதற்கு.

மத்தியானச் சொக்கர் முன்னமேயே சொன்னது போல் தரையில் இருப்பவர் அல்ல, ஒரு நல்ல மலைமீது ஏறியே நிற்கிறார். அந்த மலையையே **ரத்தினகிரி** என்பார்கள். அந்த மலையோ மணப்பாறை செல்லும் ரோட்டில் குழித்தலைக்குத் தெற்கே ஆறுமைல் தூரத்தில் இருக்கிறது. அத்தலத்துக்குக் காரில் போகலாம்; பஸ்ஸிலும் போகலாம்; மாட்டு வண்டியிலும் போகலாம். மாட்டு வண்டியில் போனாலும் காலை பத்துப் பத்தரைக்குள் சென்று சேர்ந்து விடலாம். தூரத்தில் போகும்போதே மலை தெரியும். ஆம். அம்மலைதான் 1200 அடி உயரம் உயர்ந்திருக்கிறதே. இந்த மலையைத்தான் **சிவாயமலை, ஐயர்மலை, வாள்போக்கி, ரத்தினகிரி** என்றெல்லாம் அழைத்திருக்கிறார்கள். ஓம் என்னும் பிரணவ எழுத்தைப் போல் மலையும் படியும் அமைந்திருப்பதால் சிவாயமலை என்றார்களாம். மலையில் ஒரு பக்கம் சமண முனிவர் படுக்கைகள் ஐந்து இருப்பதைப் பார்த்து இதனைப் பஞ்ச பாண்டவர் மலை என்றிருக்கிறார்கள். இந்தப் பஞ்ச பாண்டவரே பின்னர் ஐவர் என்றும் அதன் பின்னர் ஐயர் என்றும் திரிந்து இம் மலைக்கு ஐயர்மலை என்ற பெயரையும் வாங்கிக் கொடுத்திருக்கிறார்கள். இம்மலைக்கு ஏன் ரத்தினகிரி என்றும் வாள்போக்கி என்றும் பெயர் வந்தது? அதுவா, ஆரிய மன்னன் ஒருவனது மணிமுடி காணாமல் போய் விட்டது. புதிய மகுடம் செய்து கொள்ள நல்ல ரத்தினங்கள் தேடி இப்பக்கம் வந்திருக்கிறான் அவன். அவன் முன்னும் இறைவன் ஓர் அந்தணன் வடிவில் தோன்றி, தொட்டி ஒன்றைக் காட்டி அதைக் காவிரி நீரால் நிரப்பினால் ரத்தினங்கள் தருவதாகக் கூறியிருக்கிறார். அப்படியே மன்னன் நீர் கொணர்ந்து குடம் குடமாய்க் கொட்டியும் தொட்டி நிறையக் காணோம். அதனால்

கோபமுற்ற மன்னன் தன் உடைவாளை உருவி அந்தணன் தலையில் வெட்டியிருக்கிறான். உடனே இறைவனும் அந்தணன் மறைய, மன்னன் தான் செய்த தவறுக்காக வருந்துகிறான். அதன்பின் மன்னனுக்கு இறைவன் மாணிக்கம் ரத்தினம் எல்லாம் அருளுகிறான். வாளால் ஏற்பட்ட தழும்பு இன்னும் இறைவன் திருமுடியில் இருக்கிறது. அதனால் முடித்தழும்பர் என்றும் அவன் அழைக்கப்படுகிறான். இப்படி மன்னன் வாள் போக்கிய காரணத்தால் வாள் போக்கி என்றும் மன்னனுக்கு ரத்தினம் கொடுத்தலால் ரத்தினகிரி என்றும் வழங்குகிறது.

இனி மலை ஏறலாம். மலை ஏறுவது கொஞ்சம் கடினம். மொத்தம் 952 படிகள் ஏறிக் கடக்க வேணுமே. அடிவாரத்திலிருந்து மலை ஏறும் இடத்திலே ஒரு பெரிய உருண்டைப் பாறையிலே விநாயகர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. இவருக்குப் பூசை போட்டால் மழை பெய்யுமாம். இன்னும் கொஞ்சம் ஏறினால் பொன்னிடும் பாறை என்று ஒரு பாறை. அதையும் கடந்து சென்றால் சப்த மாதர் கோயில். அதையும் கடந்து அதன் பின் உள்ள வசந்த மண்டபத்தையும் கடந்தால்தான் அம்பாள் சந்நிதி வந்து சேரலாம். அங்குதான் தல விருட்சமான வேப்பமரம் இருக்கிறது. சரி, ஒரு மட்டும் கோயில் மட்டும் ஏறி வந்து விட்டோம் என்று பெருமூச்சு விட்டால் உடன் வருபவர்கள் இன்னும் கொஞ்சம்—ஆம், எழுபது படிகள் மாத்திரம் ஏறி விட்டால் சுவாமி சந்நிதி சேரலாம் என்பார்கள். இன்னுமா எழுபது படி? வந்ததோ வந்தோம், மூச்சைப் பிடித்துக் கொண்டு ஏறி உச்சிக் கால சேவைக்கு இறைவன் கோயிலுக்குச் சென்று சேர்ந்து விடலாம். அம்பாள் கிழக்கு நோக்கி நின்றால் இறைவன் மேற்கு நோக்கி நிற்கிறார். இவரையே ரத்தின கிரீசர், வாள் போக்கி நாதர், முடித்தழும்பர், மலைக்கொழுந்தீசர், மத்தியானச் சொக்கர் என்றெல்லாம் அழைக்கிறார்கள். இறைவியே சுரும்பார்குழலி. கல்வெட்டுக்களில் மாணிக்க மலை உடைய நாயனார், ஹாலட்சேஸ்வரி என்ற பெயர்கள் காணப்படுகின்றன. இறைவனைத் தரிசித்து விட்டுக் கீழே இறங்கலாம். இறங்குவது சிரமமாக இராது. இருந்தாலும் கால் வலிக்கும் குறைவிராது. படி இறங்கியபின் சாவதானமாக அடிவாரத்தில் இருக்கும் கருப்பண்ணர், வைரமேகப் பெருமாள் கோர உரு நாயக்கர் முதலிய சந்நிதிகளுக்குச் செல்லலாம். இவர்களில் பிரசித்தி பெற்றவர் **வைரமேகப் பெருமாளே**. காஞ்சியிலுள்ள ஆயர்குலத்தினர் ஒருவர் ஒரு பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார். பிரார்த்தனை நிறைவேறினால் தலையையே தருவதாகப் பிரதிக்ஞை செய்கிறார். பிரார்த்தனையை முடித்து வைக்கிறார் ரத்ன கிரீசர். சொன்னபடியே தம் தலையையே பலியாகக் கொடுக்கிறார் பிரார்த்தித்துக் கொண்டவர். அவரே வைரமேகப் பெருமாள் என்னும் பெயரில் இத் தலத்தின் காவல்



சிவாயமலை ஈசன்

தெய்வமாக இருக்கிறார்; ஆம், இத்தகைய வைர நெஞ்சம் படைத்தவரை வைரமேகப் பெருமாள் என்று அழைக்காமல் வேறு என்ன பெயர் சொல்லி அழைப்பது?

இன்னும் இந்த வட்டாரத்தில் ஒரு வகுப்பினர் பன்னிரண்டாம் செட்டியார் என்று அழைக்கப்படுகின்றனர். எதற்காக இவர்களுக்கு இந்தப் பெயர் என்றால், என்றோ, எப்போதோ, பதினொரு வணிக மக்கள் தங்கள் சொத்தைப் பங்கு போட்டுக் கொள்ளத் தெரியாமல் திண்டாடியபோது இறைவனே ஒரு செட்டியாராக வந்து இருந்த சொத்துக்களைப் பன்னிரண்டு பங்கு வைத்து ஒரு பங்கைத் தாம் எடுத்துக் கொண்டு மறைந்திருக்கிறார். அதனால் மற்றப் பதினொரு பேருடைய பரம்பரையும் பன்னிரண்டாம் செட்டியார் என்று அழைக்கப்படுகின்றனர். இறைவன் கெட்டிக்காரர்தான், பன்னிரண்டாம் செட்டியாராக வந்து பொருளைச் சுற்றிக் கொண்டு போனதுடன் ஏமாந்த சோணகிரிகளான மற்றப் பதினொரு பேருக்கும் பன்னிரண்டாம் செட்டியார் என்ற பெயரையும் சூட்டிவிட்டல்லவா சென்றிருக்கிறார்.

என்ன? மணி ஒன்று ஒன்றரையாகிறதே! சாப்பாட்டிற்கு ஏதாவது வழி உண்டா? எப்போது ஈங்கோய் மலை போவது என்றுதானே நினைக்கிறீர்கள்? சாப்பாடு இந்தச் சிவாய மலையில் கிடைக்காது. வந்த வண்டியிலேயே திரும்பிக் குழித்தலைசென்று அங்குதான்உணவு அருந்த வேணும். ரத்தினகிரி மலை ஏறிய அலுப்புத் தீர, குழித்தலையில் உள்ள ஜில்லா போர்ட் தங்கும் விடுதியில் வேண்டுமானால் கொஞ்சம் இளைப்பாறலாம். அதன்பின் மாலை நாலு மணிக்குத் திரும்பவும் பயணத்தைத் தொடங்கலாம். குழித்தலையிலிருந்து ஈங்கோய் மலை செல்லக் காவிரி ஆற்றைக் கடக்க வேணும். இத்தலம் காவிரியின் வடகரையில் இருக்கிறது. அத்துடன் இங்கே காவிரி ஒரு மைல் அகலம் உள்ளதாய் இருக்கிறது. இந்த அகண்ட காவிரியைக் கடக்க மணத்திட்டை என்ற இடத்திற்குச் சென்று பரிசல் ஏறித்தான் செல்ல வேணும். பரிசல் ஏற விருப்பமில்லாதவர்கள், சொந்தக் கார் வைத்துக் கொண்டு திருச்சி வந்து அங்கிருந்து சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் 27 மைல் செல்ல வேணும். நாம்தாம் ஆற்றைக் கடக்கத் துணிந்தவர்களாயிற்றே! ஆதலால் பரிசல் ஏறியே அக்கரை சென்று ஈங்கோய் மலை ஏறலாம். இந்த மலை ரத்தினகிரியைப் போல் அவ்வளவு உயரமில்லை. சுமார் 500 படிகள் ஏறினால் போதும். கோயிலுக்கு வந்து சேரலாம். மாலையில் கட்டாயம் அர்ச்சகர் இருப்பார். மற்ற வேளைகளில் சென்றால் ஆள் அனுப்பி அவரைத் தேடிப் பிடிக்கத்தான் வேணும். கோயில் பெரிய கோயில் அல்ல. என்றாலும் சமீபத்தில் புதுப்பித்திருக்கிறார்கள். அகத்தியர் 'ஈ' உருவத்தில் இங்குள்ள இறைவனை வழிபட்டதால் ஈங்கோய்மலை என்று பெயர் பெற்றிருக்கிறது என்று தல வரலாறு கூறும். ஆனால் மக்களோ இதனைத் திரு வேங்கிமலை என்றுதான் கூறுகிறார்கள். இது தவிர இம்மலைக்கு மரகதமலை என்று வேறு பெயரும் உண்டு. இங்குள்ள இறைவன் மரகத அசல ஈசுவரர். அம்பிகையோ மரகதாம்பிகை. இங்கு இறைவன் இறைவி தவிர காணவேண்டியவர்கள் அதிகம் இல்லை. செப்புச் சிலை வடிவில் உள்ள சம்பந்தர் சோழர் காலத்தியவர். மற்றவர்கள் எல்லாம் பிற்காலத்தியவரே. இங்கு சமய குரவர் நால்வரும் வந்திருக்க வேணும். சம்பந்தர் மட்டும்தான் பதிகம் பாடி யிருக்கிறார். மாணிக்கவாசகர் ஈங்கோய் மலையின் எழிலைக் காட்டுவதோடு திருப்தி அடைந்திருக்கிறார். சுந்தரர் வழக்கம்போல் கை நீட்டியிருக்கிறார். இறைவனும் அவருடன் விளையாட முதலில் புளியங் காயைக் கொடுத்துப் பின்னர் அதைப் பொன்னாக்கியிருக்கிறார். இந்த வரலாற்றை ஓர் அம்மானை கூறுகிறது.

சுந்தரர்க்குப் புளியங்காய்
ஈந்தது காண் அம்மானை!
சுந்தரர்க்குப் புளியங்காய்
ஈந்ததுவே ஆமாயின்,
அத்தனையும் சொர்ணங்காண்
அம்மானை!

என்பது பாடல். நக்கீர தேவ நாயனார் ஈங்கோய்மலை எழுபது பாடியிருக்கிறார். அவரது அடியொற்றித் திருவாசகமணி ஈங்கோய் அந்தாதியே பாடியிருக்கிறார்.

இம்மூன்று கோயில்களுக்கும் சேர்ந்த பெருந் திருவிழா தைப்பூசம்தான். இம்மூவரைத் தவிர இன்னும் ராஜேந்திரம், பேட்டைவாய்த்தலை, கருப்பத்தூர், முசிறி, வெள்ளூர், கோயிலில் உள்ள மூர்த்திகளும் காவிரியின் தென்கரை வந்து, முகாம் அடித்து ஓர் இரவு முழுவதும் கூத்தடித்துவிட்டுத் திரும்புவர். மலை ஏற இறங்க எல்லாம் இயலாதவர்கள், காலை, மதியம், மாலை என்றெல்லாம் ஓடக் கூடாதவர்கள் எல்லாம் ஒரே இரவிலேயே எல்லோரையும் கண்டு தரிசித்து விரும்பிய பலனைப் பெற்றுவிடலாம். இந்த ரகசியத்தை நான் சொன்னேன் என்று மட்டும் இந்த மூவரில் எவரிடமும் சொல்லிவிடாதீர்கள். அவ்வளவுதான்.

# மனத் தீ

நன்றாக விடிந்திருக்கிறது. எழுந்திருந்து வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்ற ஆசையும் இருக்கிறது. ஆனால் முடியவில்லையே? உடம்பின் ஒவ்வோர் அங்கத்திலும் உள்புறமாகக் கூரான இரும்புக் கொக்கியை மாட்டி வெட்டி வெட்டி இழுப்பதுபோல் அல்லவா இருக்கிறது? தலைக்குமேலே தாங்கமுடியாத பெரிய கல்லை வைத்து அழுத்துவது போன்ற பிரமை! இல்லை; நினைவு! பசியின் உணர்வும் இருக்கிறது. ஆனால் சாப்பிடப் பிடிக்காத வெறுப்பும் இருக்கிறது. உடலில் எந்த பாகத்தில் வேதனை என்று எப்படிச் சொல்லமுடியும்?

இப்போது என் நெற்றிப்பொட்டை இதமாக அமுக்கிப் பிடிக்க அவள் இருந்தால்? தனிமை இப்பொழுதுதான் தெரிகிறது. ஏனென்று கேட்கக்கூட இங்கே யாரும் இல்லையே? நான்கு மனிதர்களுடன் பிறந்து என்ன பயன்?

நாழிக்கு நாழி வேதனை அதிகமாகிறதே. மெள்ள எழுந்திருந்து வாசல் வரைக்கும் சென்றால் பாதையில் என் மாணவர்கள் எத்தனையோ பேர்கள் போவார்கள். கூப்பிடலாம். ஆனால் அசைய முடிந்தால் தானே? கதவு தாழிடப்படாமல் தானே இருக்கிறது. அம்மா ...அம்மா...அம்மா... எத்தனை தடவைகள் கூப்பிட்டாலும் பதில் வருமா? இந்த வார்த்தையைச் சொல்லும் பொழுது மாத்திரம் கொஞ்சம் வேதனை குறைந்திருப்பதாகப் படுகிறது. இனி சொல்லும் தெம்புகூட இருக்குமா? கண்களையும் இருட்டுகிறது. எதிரே இருக்கும் பொருள்களும் தெரியவில்லை! உருவமில்லை! எல்லாமே ஒன்றன்பின் ஒன்றாகச் சுற்றுகிறமாதிரி இருக்கிறது. ஆ...மா...ம்!

நெற்றியில் ஜில்லென்ற ஒரு பொருள் உராய்வதுபோல் இருக்கிறது. ஒட்டிக்கொண்டிருக்கும் இமைகளை மெள்ளப் பிரிக்கிறேன். கண்கள் திறந்து கொண்டதும், எரிச்சலாக இருக்கிறதே. முன் பக்கம் ஒருவரையும் காணோம்! பின்னால்...ஏதோ விரல்கள் மட்டும் தெரிகின்றன. நிமிர்ந்து பார்க்க வேண்டும் என்ற ஆசை யிருக்கிறது. ஆயாசம் என்னைத் தடுத்து நிறுத்துகிறது.

அம்மாடி, தலைவலி கொஞ்சம் குறைகிறது. இரண்டு பக்கங்களிலும் நெற்றிப் பொட்டில் விரல்கள்,-கொஞ்சம் குளிர்ச்சியோடு உள்ள விரல்கள் — அமுக்கிக் கொண்டிருக்கின்றன. விழித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்படுகிறது. சே! உடல்போக்கில் ஏற்படும் துளி மாறுதலால் என்னென்ன சிக்கல்கள் ஏற்படுகின்றன!

அறைக்குள் வெளிச்சம் கண்களைக் கூசுகின்றது. என் எதிரே ஒரு சிறிய ஸ்டூலும் தெரிகிறது. அதில் மருந்து பாட்டில்கள், அவுன்ஸ் கிளாஸ், ஹார்லிக்ஸ் புட்டி! இவையெல்லாம் எங்கிருந்து வந்தன? தலையைத் திருப்பாமல் கண்களைமட்டும் நாற்புறம் சுழல விடலாமா? இதென்ன நெற்றிக்கு மேலே வளையல் கரம் ஒன்று தெரிகிறதே! ஜானகியா வந்துவிட்டாள்? ஊஹூம், அவள் வர இயலாது! பின்யார்? எழுந்திருக்கலாமா?

''வேண்டாம், இன்னும் கொஞ்ச நேரத்துக்கு அசையாமல் இருங்கள்!'' என்ற குரல் கேட்கிறது. பாலைவனத்தின் நடுவே தண்ணீருக்காகத் தவிக்கும் வேளையில் கையில் குடமேந்தி, 'இந்தாருங்கள்!' என்று ஒரு மங்கை சொன்னால் எப்படி இருக்குமோ, அப்படி இருக்கிறது.

''யார் நீங்கள்?'' மெதுவாகத்தான் கேட்கிறேன். உரக்கப் பேச முடிந்தால்தானே என்னால்!

''ஒருவருமில்லை. இப்பொழுது எப்படி இருக்கிறது?'' என்று கேட்டுக் கொண்டே முன்னால் வருகிறவளைப் பார்த்ததும்.... ''பானு!'' என்று என்னையறியாமல் குரல் வெளியே வருகிறது.

'' ஏன் வரக்கூடாதா?'' அவள் கேட்கிறாள்.

''அப்படி யொன்று மில்லை. என்னைப் பற்றி எப்படித் தெரிந்தது?''

''அழகாகத்தானிருக்கிறது. நேற்றுக் காலை முதல் நான் இங்கேயேதான் இருக்கிறேன். நீங்கள் இப்பொழுதுதான் கண்ணைத் திறந்து பார்க்கிறீர்கள்.''

''நேற்றுக் காலை முதலா?'' எனக்கே வெட்கமாக இருக்கிறது.

''எனது வகுப்பைச் சேர்ந்த சரோஜா உங்களைப் பார்க்க வந்தாளாம். கதவு திறந்திருந்ததாம். உள்ளே நீங்கள் படுத்திருப்பதைக் கண்டதும் அருகில் வந்து கூப்பிட்டிருக்கிறாள். நீங்கள் அசையவில்லை! உடனே என்னிடம் வந்துசொன்னாள். நான் இங்கே வந்து பார்த்த பிறகுதான் உண்மை தெரிந்தது. யாரிடமாவது சொல்லி அனுப்பக் கூடாதா?''



அவள் பேசப் பேச ஒவ்வொரு வார்த்தையும் என் இதயத்தைப் பிளக்கத்தொடங்கியது. தாயைப் பிரிந்து அவளுக்காக ஏங்கி, பின் அவளைக் கண்டதும் உள்ளே குமுறிக்கொண்டிருக்கும் துக்கம் வெளியே வெடித்து வருவது போல் என் உள்ளத்தினின்று அறியாதவேதனை உணர்ச்சி பொங்கிக் கண்ணீராக வருகிறது. அவள் தன் பேச்சை நிறுத்தி என்னைக் கவனிக்கிறாள். கண்ணீர் விடுவது புருஷ லட்சணமில்லைதான். என்ன செய்ய?

''எதற்காக நீங்கள்...? நாங்கள் இருக்கிறோம், சொல்லியனுப்பக் கூடாதா என்று கேட்டேன். இது தவறு?''

'' தவறு என்று சொல்லவில்லை. ஏதோ நினைத்துக் கொண்டேன். என்னும் சொல்லியனுப்ப முடிந்தால்தானே? ஆமாம். இதை அங்கேயும் தெரிவித்து விட்டீர்களா?''

''ஊஹூம்!''

''நல்லவேளை!''

''உங்களுக்கு நான் மிகவும்......நீங்கள் இங்கே வராமலேயே இருந்திருந்தால்......''

எனக்கு மூச்சுத் திணறுகிறது. ஒரு நாளைய ஜுரம் உடலின் சக்தியை யெல்லாம் ஜீரணித்து விட்டது. ஏதாவது கொஞ்சம் சூடாகச் சாப்பிட வேண்டும் போலிருக்கிறது.

'' கொஞ்சம் ஏதாவது பசிக்குச் சூடாகத் தருகிறீர்களா ?''

இத்தனை நேரமாக நான் பேசினதை ஜன்னல் ஓரமாக நின்று கவனித்துக் கொண்டிருந்த பானுமதி இப்பொழுது திரும்பிக் கொண்டே கண்களையும் துடைத்துக் கொள்கிறாள். ஒருகால் அவளை நான் மரியாதையாகக் கூப்பிடுவதும், புதியவளிடம் நடந்து கொள்வதைப் போலப் பேசுவதும் வருத்தத்தைத் தருகின்றனவோ, என்னவோ? நான் என்ன செய்ய முடியும்? நாம் நினைத்தபடியே நடந்து விடுகிறதா? கன்னத்தில் வழியும் நீரைத் துடைத்து விடலாம். கண்களின் உள்ளே துளியைப் புகுத்தித் துடைக்க முடியுமா? குபுகுபுவென்று ஊற்றுப்போல் வெளிவரும் அதை என்ன செய்ய முடியும்? இந்த நேரத்தில் பார்த்தும் பார்க்காதது போல் இருக்க வேண்டியதுதான். உள்ளேயே சுருண்டு கிடக்கும் உணர்ச்சி நாகம் பரிவு வரானியால் படமெடுக்கும்.

சுத்தமாகத் தேய்த்திருந்த வெள்ளி டம்ளரில் ஹார்லிக்ஸைக் கரைத்துக் கொண்டு வரு



கிருள். என்னிடம் நீட்டுகிருள். அவளுடைய கைகள் நடுங்குகின்றன. ஏன்?

சாதாரண நாட்களில் ஹார்லிக்ஸ் என்ருல் காததூரம் ஓடுவேன்! இன்று என் நாவுக்கு இது இனிக்கிறது. அமுதமாக இனிக்கிறது! ஒருநாள் முழுவதும் பசியுடன் இருந்ததனுலா? அல்லது…………

உள்ளே ஆகாரம் சென்றதும் ஒரு படபடப்பு வருகிறது. கொஞ்சம் களைப்பு நீங்கட்டும் என்று மெதுவாகக் கண்களை இறுக மூடிக் கொள்கிறேன்.

''மருந்து சாப்பிட வேண்டாமா?'' கிணற்றின் உட்பக்கத்திலிருந்து வரும் குரல்போல் இருக்கிறது. என்னிடமா பேசுகிருள்? யார்? ஏதோ! அதற்குள் எங்கேயோ நினைவு! பானு என்னை எழுப்புகிருள் போலிருக்கிறது.

''மருந்து……''

நான் மெதுவாக உட்கார முயலுகிறேன், மெள்ள உடலின் முன்பாகத்தை இடுப்பின் பலத்தில் நிமிர்த்தி. ஆனால் ஒரு பக்கமாக என்னைக் கீழே தள்ளுகிறது. பிடித்துக் கொள்ள உதவி…உதவி…

பானு டக்கென மருந்துகளை ஸ்டூல் மேல் வைத்துவிட்டு என் கையைப் பிடித்து… நல்லவேளை! தப்பினேன். இல்லாவிடில் கீழே விழுந்திருப்பேன்.

''அதற்குள் என்ன அவசரமாம்?'' குரலில் கடுமையைக் காணும். ஆனால் அவளுடைய உடல் நடுங்குவது தெரிகிறது. முகம் வியர்த்திருக்கிறது.

''பானு…பானு…நன்றி…''

அவள் தன் தோளில் முகத்தை ஒரு தடவை இடித்துக் கொண்டு உள்ளே போகிருள். நான் என் கையை,-குறிப்பாக அவள் பிடித்த அந்தக் கையை-பார்த்துக் கொள்கிறேன். அங்கே ஒரு கீறல்! கையைக் காயமாக இருந்தாலும் எரிச்சல் இல்லை. இந்தப் புண்ணுக்கு இதம் எங்கிருந்து வருகிறது! சே! என்ன சலனம் வேண்டியிருக்கிறது?

ஜானகியிடமிருந்து நான்கு நாட்களாகக் கடிதமே யில்லை! என்னை மட்டும் ஒவ்வொரு நாளும் எழுத வேண்டும் என்று சொல்லி விட்டுப் போயிருக்கிருள். ஆனால் அவள்…? ஹூம்! எல்லாம் அவ்வளவுதான்! பிறந்தகத்தின் மண்ணைத் தொட்டதும் அவளுக்கு மெய் மறந்து விட்டதோ, என்னவோ? இங்கே நான் படும் பாடு?

எனக்கென்ன இங்கே குறை? பானு தான் இருக்கிருளே? என்னுடைய பள்ளிக்கூடத்தில், என் கீழே எனக்கு ஓர் உதவி ஆசிரியையாக வேலை செய்வதால், தானே வலிய வந்து எனக்கு உதவ வேண்டும் என்று சட்டமா இருக்கிறது? இல்லையே? பின் அவள் ஏன் வந்திருக்கிருள்?

இந்த ஜுரம் சீக்கிரம் குணமாகி விட்டால்? மருந்துக்குக் குணப்படுத்தும் திறன் இல்லாமற் போய்விட வேண்டும்! பானு…. நான் மறுபடியும் அந்தக் கையைப் பார்த்துக் கொள்கிறேன். இப்பொழுது உள்ளங்கையில் பானுவின் முகம் தெரிகிறது! நன்ருக, தெளிவாகத் தெரிகிறது. அதே பழைய பானு! நான்கு வருஷங்களுக்கு முன் சந்தித்த அதே முகம்! அதே சிரிப்பு! அதே….!

''கஞ்சி கொண்டு வந்திருக்கிறேன்.'' சட்டென்று நான் கையை மறைத்துக் கொள்கிறேன். என் விழிகளில் திருட்டுத்தனம் கொப்பளித்திருக்க வேண்டும். அதை அவள் கவனிக்கிருள்.

''கையில் என்ன?''

''ஒன்றுமில்லை!''

''கஞ்சி சாப்பிடுகிறீர்களா?''

''வேண்டாம்!''

''ஏன்?''

''பிடிக்காது!''

''பின் என்ன சாப்பிடுவதாக எண்ணம்?''

''எனக்குச் சாதம் சாப்பிட வேண்டும் போலிருக்கிறது!''

''நன்ருக இருக்கிறது! நீங்கள் என்ன குழந்தையா?'' என்று கூறி என்னருகே வருகிருள். ஸ்டூலில் கஞ்சி நிரம்பிய டம்ளரை வைக்கிருள். நான் கஞ்சியையும் அவளையும் மாறி மாறிப் பார்க்கிறேன்.

''ஹூம். சாப்பிடுங்கள்…''

ஒரு நிமிஷம் கழிந்தது. தானே எடுத்து என் கையில் தருகிருள். வாங்கிக் கொள்வதைத் தவிர வேறு வழி?

விந்தையாக இருக்கிறது! கஞ்சியே வேண்டாம் என்று கூறியவன் இரண்டு டம்ளர் குடித்திருக்கிறேன். என் கையில் வெந்நீரை வார்த்துக் கொண்டே குறும்புச் சிரிப்புடன், ''இன்னும் கொஞ்சம் விடட்டுமா?'' என்கிருள். எனக்கும் சிரிப்பு வருகிறது. தற்செயலாகச் சிரிக்கும் அந்த நிலையில் இருவரும் நிமிர்ந்த பொழுது நேருக்கு நேர் பார்த்துக் கொள்கிறோம். அங்கே அவள் முகத்தில் நாணத்தின் செம்மை படருவது தெரிகிறது. எனக்கும் கொஞ்சம் பரபரப்புத் தெரிகிறது! சமையலறையில் அவள் நுழையும் வரையில் பார்த்துக் கொண்டேயிருக்கிறேன்.

* * *

உள்ளே அவள் ஏதோ வேலை செய்து கொண்டிருக்கிருள். அடிக்கடி ஜன்னல் ஓரமாக வருகிருள். வந்து ஓர் ஐந்து நிமிஷங்கள் நிற்கிருள். அப்பொழுது அவளை என்ஞல் பூரணமாகப் பார்க்க முடிகிறது. இதழ்க் கடையில் மெல்லிய கோடு போல் நெளியும் குறும்புச் சிரிப்பையும் பார்க்க முடிகிறது. எட்டாத தூரத்தில் இருக்கும் சந்திரனிடம் குழந்தைகளின் ஆசை குறைகிறதா? கைக்கு எட்டும் தூரத்தில் இருந்து விட்டால்? ''பானு!'' அவளுடைய பெயரை மனத்தின் உள்ளே உச்சரிக்கத்தான் நினைத்தேன். குரல் பிறிட்டு வெளியே வருகிறது. அவளும் வெளியே வரும் அரவம் கேட்கிறது.

''ஏன்?'' வலது கை விரல்களை முகவாய்க் கட்டையில் வண்ணமாகப் பொருத்தி ஒய்யாரமாகத் தலையைச் சாய்த்துக் கொண்டு, கேள்வியின் பதிலுக்காகக் காத்திருக்கும் இந்தப் பாணி…

''ஒன்றுமில்லை. குளித்தால் தேவலை என்று நினைக்கிறேன்.''

''இருங்கள். டவலை வெந்நீரில் நனைத்து வருகிறேன். அதைக் கொண்டு அழுக்கைப் போக்கிக் கொள்ளுங்கள்!'' அவள் உள்ளே போகிருள். இங்கேயே என் எதிரேயே நின்று




''மாமி! எங்கம்மா உங்க வீட்டிலிருந்து தீபாவளி மலர் வாங்கிண்டு வரச்சொன்னா!''

''அது இப்போ மலராக இல்லேடி.... அது இதழ் இதழாத்தான் இருக்கு!''

கொண்டிருந்தால்... சே! என் கண்கள் கொஞ்சம் உட்பக்கமாகப் பார்க்கத் தொடங்குகின்றன. அங்கே என் மனத்தைக் காணோம். எங்கே அது? சமையலறை வாசலில் நின்றுகொண்டு உள்ளே கையைக் காட்டுகிறது. வெளியே தன்னை அழைத்துப் போகப் பிடிவாதம் செய்யும் குழந்தை தாய்க்கு முன்னால் வாசலில் நின்று கொண்டு வீட்டின் வெளியே சுட்டிக் காட்டும் போது முதலில் அதட்டி, பின் பயம் காட்டி, பிறகு ஒன்றும் பலிக்காமல் அதன் வழியே செல்லும் தாயைப் போல் என் நிலையும்...

உடலைத் துடைத்துக் கொண்டு வருவதற்குள் மேஜை மீது வண்ணான் மடி தயாராக இருக்கிறது. வேஷ்டிக்கும் சட்டையின் நிறத்துக்கும் எத்தனை பொருத்தம். இரண்டுமே தும்பையைப் போன்ற துல்லியமான வெண்ணிறம்! என் மனம்...

நன்றாகத் தலையை வாரிக் கொண்டு நாற்காலியில் உட்காருகிறேன். எதிரே தெரியும் நிலைக் கண்ணாடியில் என் உருவம் தெரிகிறது. என் முகத்தில் இருக்கும் கவர்ச்சி எனக்கே தெரிகிறது.

''ரஸம் சாதம் கரைத்துக் கொண்டு வரலாமா?'' வெளியே வராமல் உள்ளிருந்தபடியே கேட்கிறாள் பானு. வெளியே வந்து கேட்டால் என்னவாம்?

''கொண்டு வரலாம்!''

அதற்குள்ளாகவா தயார் செய்து விட்டாள்! வேலையில்தான் எத்தனை துடிப்பு!

''இத்தனையும் எனக்கா?''

''ஏன், சாப்பிட முடியாதா?''

''நிறைய இருக்கிறதே!''

''நீங்கள் சாப்பிடும் அளவு எனக்கு நன்றாகத் தெரியும்!''

ஒன்று, இரண்டு, மூன்று டம்ளர்கள் ஆகிவிட்டன. நான்காவதை நிரப்பும் பொழுது நான் வேண்டாம் என்று தடுத்தும் அவள் ஊற்றுகிறாள். அவள் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்துவதைத் தவிர எனக்கு வேறு வழி தோன்றவில்லை. கையிலிருந்த பாத்திரத்தை 'ணக்' என்று கீழே வைக்கிறாள்.

அவளது நெற்றிப் பொட்டுக்களில் முத்து முத்தான வியர்வைத் துளிகள் அரும்புகின்றன.

''பானு, என்னை மன்னித்து...''

''எதற்கு?....'' ஒன்றுமே தெரியாதவள் போல அவள் கேட்கிறாள்.

''ஒன்றுமில்லை! உனக்கு எத்தனை தொல்லை என்றால்...என்று சொல்ல வந்தேன்!''

''மறுபடியும் தொடங்கி விட்டீர்களா?''

அருகே வந்து என் கைகளில் வெந்நீரை வார்க்கிறாள். இருவருக்கும் இடையே சில அங்குலங்கள்தான் இடைவெளி! உட்கார்ந்திருந்தபடியே பானுவின் முகத்தை நிமிர்ந்து பார்க்கிறேன். அவளும்....

சிரித்துக் கொண்டே உள்ளே போகிறாள். அதன் பொருள் என்னவோ? கணத்துக்குக் கணம் இயற்கையில் தோன்றும் அதே மாறுதல் இந்தப் பெண்களின் இயற்கையிலும் தெரிகிறதே! புரிந்து கொள்ளும் அளவுக்கு நிலையான ஒன்றுமே கிடையாதா?

என் எதிரே ஒரு கவர் வந்து விழுகிறது. விலாசத்தின் எழுத்துக்கள் புதிதாக இருக்கின்றன. அப்படியே எடுத்து டிராயரில் போடுகிறேன். படிக்க வேண்டும் என்று தோன்றவில்லை!

எங்கேயோ கைக்குழந்தை ஒன்று அழும் சத்தம் கேட்கிறது! உள் நினைவு ஞானகியை நோக்கி ஓடுகிறது. ஏன் கடிதமே வரவில்லை? ஒருகால் கடிதம் எழுத முடியாமல் அவள்....

அடுத்த கணம் இந்த நினைவும் மறைகிறது. மனத்திலே இந்த நினைவை நிறுத்தத்தான் பார்க்கிறேன். முடியவில்லை! நீந்தத் தெரியாதவன் ஆற்று வெள்ளத்தில் அடித்துக் கொண்டு கரையேற முயற்சி செய்து, பின் வெள்ளத்துடன் போவதைப் போல் ஞானகியின் நினைவு சலன வெள்ளத்தில் மிதக்கிறது. கரையேற முடியாமல் போய்க் கொண்டேயிருக்கிறது. நான் என்ன செய்ய முடியும்?

*   *   *

சிட்டத்து விளக்கை ஏற்ற அவள் வருகிறாள். அப்பொழுதுதான் முகம் கழுவி, அழகு சாதனங்களை மெருகேறும் வகையில் நிரப்பிப் பளிரென்று குங்குமம் தெரியும்படி இட்டுக் கொண்டு வருகிறாள். அவளுடைய முகத்தில் பதிந்துபோன கண்களை அகற்ற இயலவில்லை என்றால், நான் அவளையே கவனிப்பதையும் கவனிக்கிறாள். இலேசான புன்னகை தெளிகிறது. இதனால் என் மனத்தின் அரண் உடைகிறது.

''பானு...!'' மெதுவாக நான் கூப்பிடுகிறேன். என் குரலின் விரிசல் எனக்கும் புரிகிறது.

''ஹும்....'' அலட்சியமான, ஆனால் அழகான எதிர்நோக்கு. இப்பொழுதும் மாயப் புன்னகை!

"கொஞ்சம் வெந்நீர் வேண்டும்." அவள் உள்ளே போகிறாள். நான் எழுந்திருந்து சமையலறை நிலைப்படியருகே வருகிறேன். உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டுகிறது. மூச்சு நின்று நின்று தயக்கமாக வருகிறது. கண்களின் ஓரங்களில் ஜில்லென்று வெப்பேறுவதைப் போன்ற ஒரே நினைவு.

ஓரக்கண்ணால் என்னைப் பார்க்கிறாள் அவள். அதே சிரிப்பு! எனக்கு அழைப்பின் அறிவிப்பாகப் படுகிறது. மெள்ள நடந்து வருகிறாள். சந்திரனை நெருங்கி வரும் சகோர பக்ஷியாகத் தெரிகிறாள். பானுவின் உருவம் முழுதும் மறைகிறது. இளம் சூடான ஒன்று என் கைகளில் உராய்கிறது.

நிலைப்படியில் தம்ளர் உருண்டு விழும் ஓசை கேட்கிறது. நிமிர்ந்து பார்க்கும் பொழுது பானு கம்பீரம் கொஞ்சம் கூடக் குறையாமல் அதே நிலையில் தெரிகிறாள். இப்பொழுதும் அதே சிரிப்பு.

"தந்தி!"

வாசலில் சேவகன் கூப்பிடுகிறான். ஓடுகிறேன். எனக்கு முன்னால் பானு ஓடுகிறாள். அதில்—"ஜானகி, ஸீரியஸ்" என்றிருக்கிறது. என் இதயத்தில் பலமான அடி விழுகிறது. கைகளும் கால்களும் தவிக்கின்றன. நடக்க வேண்டியதை நினைக்க மனத்துக்குத் தெம்பில்லை. எல்லாமே செயலற்றுப் போய் விடுகின்றன.

பரபரவென்று பானுவே பெட்டியைச் சரி செய்து ஏதோ என் கையில் கொண்டு வந்து தருகிறாள்.

"ஊம், புறப்படுங்கள்!"

அப்பொழுதுதான் சுய உணர்வுடன் அவளைப் பார்க்கிறேன். அவள் கண்களில் நீர் நிறைந்திருக்கிறது.

"பா..." என்று தொடங்குவதற்குள் "வண்டிக்கு நேரமாகி விட்டது. போய் வாருங்கள்" என்கிறாள். நான் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடக்கிறேன்.

வாசலில் கீழே இறங்கும் பொழுது பானுவின் தோள்கள் பலமாக ஆடுவது தெரிகிறது. இரு கைகளும் முகத்தை மறைக்கின்றன. குலுங்குகிறாள். என் இதயம் கலக்கின்றது. அதையும் தாங்கிக் கொண்டே நடந்து செல்கிறேன்.

"இந்த மட்டில் பெரிய உயிருக்கு ஆபத்தில்லாமல் பிழைத்தாளே, அதுவே பெரிது" என்று வரவேற்கிறார் மாமனார். உள்ளே நுழையும் வேளையில், நல்ல செய்திதான். ஜானகி பிழைத்தது புனர்ஜன்மம். எனக்கும் மறுபிறப்புத்தான்! பானுவின் நினைவில் என் நெஞ்சிலே எழுந்த நெருப்பு என் குடும்ப விளக்கை முழுவதும் அணைக்கவிருந்தது. நல்ல வேளை!

உடையை மாற்றப் பெட்டியைத் திறக்கிறேன். மேலே துணிகளுக்கு மேல் நான்கு வரிகளில் பானு என்னவோ எழுதி வைத்திருக்கிறாள்:

"உங்கள் மனத்தின் கண்எழுந்த நெருப்பு என்னை ஆட்கொண்டு நம் இருவரையும் சுட்டெரிக்க இருந்தது. அத்துடன் அக்காவின் வாழ்வையும் பொசுக்கியிருக்கும். கடவுள் புண்ணியத்தில் தப்பினேன். இனி நான் உங்களிடம் உதவி ஆசிரியையாக வேலை பார்க்க மாட்டேன். என்னை மறந்து விடுங்கள்.

பானு."

அதைப் பத்திரமாக எடுத்து அடியில் வைக்கிறேன். உள்ளே ஜானகியைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றுகிறது. மெள்ள எட்டிப் பார்க்கிறேன். கட்டிலில் சுயநினைவில்லாமல் கிடக்கும் என் ஜானகிக்கு நான் வந்திருப்பது தெரியுமா?

குடும்ப இன்பத்துக்கு மறுவாழ்வு பெறும் இந்த என் ஜானகிக்கு நான் என்ன துரோகம் செய்யவிருந்தேன்? சமயத்தில் நான் தப்பியதுதான் ஜானகிக்கு உயிர்தானம் கொடுத்திருக்குமோ? குழந்தை போனால் போகட்டும். அவள் திரும்ப என்னுடையவள் ஆனாளே! அதுவே போதும்!

கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அப்பொழுது மறுபடியும் மனத்தினுள் பார்வையைச் செலுத்தினேன். அங்கே ஜானகி முழுவதுமாக வீற்றிருந்தாள்! இவள்தான் இனி என் மனராஜ்யத்தின் ஒரே ராணி.

அப்பா! அந்த நெருப்புக்குத்தான் எத்தனை சக்தி! அதன் கொழுந்து நாவிலே எல்லாவற்றையும் துடைக்கும் திறன் எங்கிருந்து வருகிறது! வீட்டின் நெருப்பைவிட மனத்தின் இந்தத் தீய நெருப்பு பயங்கரமானது! உண்மையிலேயே பயங்கரமானதுதான்!




ச. து. நாராயணசாமி, உதவி என்ஜினீயர்

டெலிபோன் மணி கிணு கிணு வென்று ஒலித்தது.

"மிஸ்டர் ராமனா?"

"இல்லை!"

"கோவிந்தனயிருக்குமோ?"

"அதுவும் இல்லை!"

"லக்ஷ்மணன் தானே!"

"இல்லை, தப்பு!"

"அப்படின்னா பெயரைப் பேசித் தொலை!"

"நீங்க சொன்னதைத் திருப்பிப் போடுங்க. விடை தெரியும். அது நான்தான்!"

"என்ன புதிர் போடறே! நீ யாரு! முதலில் பேசித் தொலையேன்!"

"நான்தான் தொலை பேசி—டெலிபோன்—பேசறேன். உங்களுக்குப் பேரை உடனே சொல்லாட்டி எவ்வளவு எரிச்சல் பத்திண்டு வர்றது! அது மாதிரித்தான் எல்லாருக்கும்! எடுத்தவுடனே யோக க்ஷேமங்களை விசாரிக்காம பெயரையே நீங்க சொல்லியிருந்தால் நானும் சொல்லியிருப்பேன்! இத்தனை விதண்டாவாதமும் நடந்திராது! இந்த அநாவசிய நேரத்திலே நான் எத்தனையோ பேருக்கு உபயோகமாயிருந்திருப்பேன்!"

"உண்மைதான்!"

* * *

டெலிபோனைக் காதில் வைத்துக் கொண்டு அரை மணி நேரமாகத் தம் நண்பரைக் கூப்பிட முயன்று கொண்டிருந்தார் ஸ்ரீமான் பொதுஜனம். எதிர்ப் பக்கத்தில் அரைமணி நேரமாக மணியடிக்கவில்லை, எந்த விதமான சத்தமுமில்லை. 'டெலிபோன் தகராறு போதும்! இல்லாவிட்டால் இத்தனை நேரம் இத்தனை நரம் கைவலிக்கச் சுற்றியும் பலன் கிடைக்காமல் போகுமா?' அவருக்கு டெலிபோன் இலாகாவின் மேல் எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. உடனே டெலிபோன் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டு, "என்ன ஸார் இது அக்கிரமமாயிருக்கு! அரை மணி நேரமா நம்பரைக் கூப்பிடறேன்! எந்தவித பதிலும் காணுமே! டெலிபோன் ரிப்பேரோ?" என்று கேட்டார் பொதுஜனம்.



"ரிப்பேரில்லை! சரியாகத்தானே இருக்கிறது!" என்று பதில் வந்தது.

"சரியாயிருக்குன்னு வார்த்தையாலே சொல்லி என்ன பிரயோசனம்! 'கொய்' என்ற சப்தம்தான் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருக்கிறது. எனக்கு நான் கேட்கும் நம்பர் கிடைக்கவில்லை" என்று அலுத்துக்கொண்டே டெலிபோனைத் தொப்பென்று வைத்து விட்டுத் தம் நண்பரைச் சந்திக்கக் கிளம்பி விட்டார்.

அவர் வீட்டையடைந்த போது நண்பர் சாய்மானத்தில் சாய்ந்தபடியே கண்களை மூடும் நிலையில் இருந்தார். செருப்புச் சத்தம் கேட்டதும் கண்களை விழித்துக்கொண்டு, "வரணும்! வரணும்! எங்கே இப்படி அபூர்வமா? டெலிபோன் பண்ணிட்டு வரப்படாதோ?" என்று வரவேற்ருர்.

"உங்களைத்தான் அரைமணி நேரமா டெலிபோனில் கூப்பிட்டேன் கிடைக்கல்லே! நேரிலேயே வந்து விட்டேன். உம்ம வீட்டு டெலிபோன் ரிப்பேர் போலிருக்கு!"

"ரிப்பேரா? இல்லையே.........அடடா! இதோ பாரும்!"

"என்ன?" திரும்பிப் பார்த்தார். டெலிபோன் ரிஸீவர் கருவியின் ரெஸ்டில் பொருந்தாமல் கீழே வைக்கப்பட்டிருந்தது.

"அடிக்கடி பலபேர் கூப்பிட்டுத் தொந்தரவு செய்கிருர்களென்று ரிஸீவரைக் கீழே வைத்து விட்டேன். கடைசியிலே நம்ம ஆப்த நண்பருக்குக் கூடப் பேச முடியாமல் போய் விட்டது. மன்னிக்கணும்!"

"அட, பாவி மனுஷா! நீர்தான இந்தக் கைங்கரியத்தைச் செய்தது? நான் இந்த டெலிபோன் இலாகாவைப் போய்ச் சபித்துக் கொட்டிக் கொண்டிருந்தேனே!"

* * *

இரவு பன்னிரண்டு மணி. தாயார் குழந்தையை – வீறிட்டு அலறிக் கொண்டிருக்கிற குழந்தையைச் – சமாதானப்படுத்த முடியாமல் திணறிக் கொண்டிருக்கிருள். குழந்தையின் அழுகை ஓயவில்லை. தாயாரின் சிரமமும் தீரவில்லை. கடைசியில் டாக்டருக்கு டெலிபோன் பேசினள். "டாக்டர்! குழந்தை ரொம்ப நேரமா அழுது அழுது விக்கித்துப் போய்விட்டது! என்ன பண்ணறதுன்னு புரியல்லே!"

"அப்படியா? சரி! உங்கள் குழந்தையின் காதை டெலிபோன் பக்கமாகத் திருப்புங்கோ, பார்க்கலாம்!" என்ருர் டாக்டர்.

"மருந்தை டெலிபோன்லேயும் அனுப்ப முடியுமா?" என்று அதிசயித்துக் கேட்டாள் அந்தக் குழந்தையின் தாயார்.

"ஓ. முடியும்!" என்று கூறினார் டாக்டர். சில நிமிஷங்களில் குழந்தையின் அழுகை ஓய்ந்து விட்டது. தாயாரின் சிரமமும் நீங்கியது. டாக்டரை அந்தப் பெண்மணி வாயார வாழ்த்தினாள். டெலிபோனை மனதாரப் போற்றினாள்.



அந்த டாக்டர் டெலிபோனில் செய்த வைத்தியம் என்ன தெரியுமா? அந்தப் பெண்மணி நவநாகரிகத்தில் வளர்ந்தவள். அதனால் அவளுக்குத் தாலாட்டுப் பாடத் தெரியாது. ஆனால் அந்த முதிர்ந்த கெட்டிக்கார டாக்டர் அழகாக ஒரு தாலாட்டுப் பாடிக் குழந்தையைத் தூங்கப் பண்ணிவிட்டார்! நடு இரவில் அந்தத் தாயாரின் பிரச்னை டெலிபோனின் பெருதவியால் தீர்ந்துவிட்டது.

* * *

இரவு ஒன்பது மணியிருக்கும். எதிர் வீட்டுக்காரர் பதறியடித்துக் கொண்டு என் வீட்டுக்கு ஓடி வந்தார். "ஸார்...ஸார்! கொஞ்சம் சைக்கிள் தரமுடியுமா? அவசரமாகத் தந்தி ஒன்று கொடுக்கணும்..."

"இவ்வளவுதானே? பதற்றமடையாதேயும். எங்கள் வீட்டிலே டெலிபோன் இருக்கு. தெரியுமோல்லியோ? அதிலே தந்தியை அனுப்பிச்சுடறேன்."

"என்ன ஸார்! அதிசயமாயிருக்கு! போஸ்டாபீசிலே கொடுத்தான்னு தந்தி போய்ச் சேரும்...."

"ஸார்! இதற்கு போனோகிராம்னு பெயர். நம்ப டெலிபோன் நம்பரைச் சொல்லி, டெலிபோனில் தந்தி விஷயத்தைச் சொல்லிட்டா, அதை நேரே அனுப்பிடுவாங்க.... நீங்க போஸ்டாபீசுக்கு ஓட வேண்டியதில்லே!"

"அப்படியா? இது தெரியாமல் போச்சே! ரொம்பச் சௌகரியமாய் இருக்கே! இலகுவிலே காரியம் முடிந்து போச்சே!"

* * *

வாசலில் செட்டியார் கையில் பூமாலை பழங்களுடன் நின்று கொண்டிருந்தார். எனக்கு அதிசயமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது.

"எதற்கு ஸார், இவையெல்லாம்? கோவிலுக்குப் போகிறீர்களோ?"

"இல்லே ஸார்! எல்லாம் உங்களுக்குத்தான். அன்றைக்கு என் கடையிலே நெருப்பு பிடிச்சபோது உடனே நெருப்புப் படை இலாகாவுக்கு டெலிபோன்பண்ணி வரவழைச்சுக் கொடுத்து ஒண்ணும் சேதமாகாமல் காப்பாற்றினீர்களே... அதுக்கு நன்றியாகத்தான் இவற்றை...!"

"ஒரு டெலிபோன் பண்ணினேன். அவ்வளவுதானே, அதற்கா இவ்வளவு உபசாரம்?"

"நீங்க செய்தது பேருதவி......அதற்கு இதைவிடப் பெரிசா செய்யணும்......ஏதோ என்னாலான சிறிய உதவியை......"

"செட்டியார்வாள்! இந்தப் பாராட்டெல்லாம் டெலிபோன் இலாகாவுக்குக் கிடைக்கணும்......அவர்கள் இவ்வளவு அபூர்வமான ஒரு கருவியை இயக்கி நமக்கு ஒத்தாசை செய்து கொண்டிருக்கிறார்களே......"

* * *

தந்தி 1837ம் வருஷம் கண்டுபிடிக்கப்பட்டது. அதைக் கண்டு மின்சாரம் ஓர் அதிசய விந்தை என்று மக்கள் கூறினர். ஆனால் தந்தியில் 'கோட்' வார்த்தைகளிலேயே செய்தியை அனுப்பமுடிந்தது. வெகு சீக்கிரத்திலேயே மக்கள், "மின்சாரம் மூலமாகப் பேச்சைக் கேட்கச் செய்ய முடியாதா?" என்று ஏங்க ஆரம்பித்தனர்.

1876ம் வருஷம் அலெக்ஸாண்டர் கிரஹாம் பெல் மின்சாரம் செலுத்தப்பட்ட ஒரு கம்பியில் ஒலிகள் பலவித சலனங்களை விளைவிப்பதைக் கண்டார். அவர் அந்தச் சலன மாறுபாடுகளைக் கொண்டு ஒலியை உண்டாக்க முடியும் என்று கண்டார். அந்தப் பரிசோதனையிலிருந்து அவரே டெலிபோனைக் கண்டுபிடித்தார். டெலிபோன் என்பது கிரேக்க மொழியிலிருந்து வந்தது; தொலை தூரத்துக்குப் பேசுவது என்பது அதன் பொருள்.

டெலிபோனை எடுத்துப் பேசத் தொடங்கியதும் உங்கள் குரல் ஒலி டிரான்ஸ்மிட்டரைப் போய்த் தாக்குகிறது. டிரான்ஸ்மிட்டர் காற்றிலே மிதந்து செல்லும் ஒலி அலைகளைச் சலனமுள்ள மின்சார அலைகளாக மாற்றி எடுத்துச் செல்கிறது. இந்தச் சலனமுள்ள மின்சார அலைகள் கம்பியின் வாயிலாக ரிஸீவரைச் சென்றடைகிறது. அங்கே அந்த மின்சாரம் மின்சார காந்தத்தைத் தாக்குகிறது. இந்தக் காந்தம் ஒரு மெல்லிய உலோகத்தகட்டை இழுக்கிறது. காந்தத்தின் பலமாதிரியான இழுப்புக்களில் டயாபரம் சலனமடைகிறது. அது காந்தத்தைத் தள்ளி ஒலி அலைகளை எழுப்பி, நாம் டிரான்ஸ்மிட்டரில் பேசுவது போலவே கேட்கச் செய்கிறது. டெலிபோன் இயங்கும் அதிசயம் இதுதான்.

1876ம் வருஷம் மார்ச் பத்தாம் தேதி அலெக்ஸாண்டர் கிரஹாம் பெல் தாம் தயாரித்த டெலிபோனைப் பரிசோதித்துப் பார்க்க எண்ணினார். அவரது உதவியாளர் தாமஸ் வாட்ஸனே முதன் முதலில் டெலிபோனில் பேசுவதைக் கேட்கும் பாக்கியம் பெற்றவர்.

"மிஸ்டர் வாட்ஸன்! தயவு செய்து இங்கே வாருங்கள். நீங்கள் இங்கே தேவைப்படுகிறீர்கள்" என்றார் கிரஹாம் பெல். அவ்வளவுதான்; அந்தப் பேச்சைக் கேட்டு ஆனந்தமடைந்தார் தாமஸ் வாட்ஸன்; அவரைப் போல் பல்லாயிரக் கணக்கானவர்கள் இன்று ஆனந்தப்படுகிறார்கள்; டெலிபோனின் பெருதவியைக் கண்டு பேரானந்தம் அடைகிறார்கள்.

# ACOSTO

அகாஸ்டோ




**சுந்தரதாஸ் டிரேடிங் & மானுபாக்சரிங் கோ.**

இவ்ராஜ்மேன்ஷன்

**150 - A, மவுண்ட் ரோடு (போன் : 84979) சென்னை - 2**

# அப்பா இருந்தால்..

"ராஜம் டீச்சர் வீடு இதுதானே?" என்று கேட்டவாறு உள்ளே நுழைந்தாள் ஓர் அம்மாள். கூடத்தில் நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்த ராஜம் சட்டென்று எழுந்து வந்து, "ஆமாம்! நான்தான் ராஜம்..உள்ளே வாருங்கள்..." என்று வரவேற்றாள்.

"நான் கீதாவின் அம்மா....." என்று தன்னை அறிமுகம் செய்து கொண்டவாறு கூடத்துக்கு வந்து உட்கார்ந்தாள் வந்த அம்மாள். சுமார் நாற்பது வயது இருக்கலாம். முகத்திலே பணக்காரக் களை சொட்டினாலும் ஆடை அணிகலன்கள் நடுத்தரக் குடும்பந்தான் என்பதை எடுத்துக் கூறின.

"அப்படியா! ரொம்ப சந்தோஷம். இன்னும் வரவில்லையே என்று கீதாவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். பள்ளியிலேயே என் மனத்தைக் கவர்ந்த மாணவி உங்கள் பெண் கீதாதான். ஒரு பெண்ணுக்கு இருக்க வேண்டிய சகலவிதமான நற்குணங்களும் கீதாவிடம் இருக்கின்றன. பள்ளிக்கூடத்துக்கு வரும்போதும் போகும் போதும் இந்த உலகத்தையே மறந்து கண்டபடி பேசிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் தவறாக நடந்துகொள்ளும் பெண்களுக்குக் கீதாவைப் பார்த்து அவளைப் போல் இருக்குமாறு நான் 'அட்வைஸ்' பண்ணுவேன். 'கீதாவின் தாயார்' என்று சொல்லிக் கொள்ளுவதிலேயே நீங்கள் பெருமைப் படலாம்..." என்றாள் ராஜம். பெண்ணைப் பற்றிய புகழ்ச்சியைக் கேட்டதில் தாயாரின் உடல் முழுதும் ஓர் இன்ப உணர்ச்சி பரவியது என்றாலும் எதையும் காட்டிக் கொள்ளாமல் மெள்ளச் சிரித்தவாறு, "என் பெண்ணை ரொம்பவும் புகழ்கிறீர்களே!" என்றாள்.

"புகழ்ச்சியேயில்லை. மனப்பூர்வமாகச் சொல்கிறேன், கீதா ஓர் அரிய ரத்தினம்! கடவுள் கிருபையால் அதிர்ஷ்டம் மட்டும் அவளுக்கு இருக்க வேண்டும்!"

"அதைச் சோதிக்கத்தான் வந்திருக்கிறேன்!" என்றாள் கீதாவின் தாயார் சிரித்தவாறு. குறிப்பாக அந்த அம்மாளைப் பார்த்தாள் ராஜம். ஒரு கணம் தயங்கிவிட்டு, "கீதா எங்களுக்கு ஒரே பெண்..." என்றாள்.

"தெரியும்..."

"இன்னும் உலகம் தெரியாத குழந்தையாக இருக்கிறாள்."

"அவள் குழந்தைதானே! வயது வந்தால் எதையும் தெரிந்து கொள்கிறாள்!"

"குழந்தையாயிருந்துவிட்டால்தான் பரவாயில்லையே! இப்பொழுது அவள் ஒரு குமரியாகி விட்டாளே!" என்று பெருமூச்சுவிட்டாள் கீதாவின் தாயார்.

"பெண்ணுக்கு அழகில்லாவிட்டாலும்சிறிது கவலைப்படணும்... கீதாவுக்கு என்ன குறைச்சல்? ராஜாத்தி மாதிரி இருக்கிறாள்!"

"அவள் ஆசையும் அப்படித்தான் இருக்கிறது. தன் உயரம் தெரியாமல் சக்திக்கு மீறினதையெல்லாம் எட்டிப் பிடிக்கப் பார்க்கிறாள்!"

ஸ்ரீரங்கம் நரஸிம்மன்

ராஜத்தின் உதட்டில் ஒரு புன்னகை நெளிந்தது. ''அப்படி என்ன செய்கிறான்? ஆஞ்சனேயரைப் போல் சூரியனைப் பிடிக்கப் பார்க்கிறானா?'' என்றாள்.

''சூரியநாராயணனையே பிடிக்கப் பார்க்கிறான்!... உங்களுக்குச் சூரி என்றொரு பிள்ளை இருக்கிறாராமே!''

இந்த வார்த்தையைக் கேட்டதும் அப்படியே பிரமித்துப்போய்க் கல்லாய்ச் சமைந்து விட்டாள் ராஜம். இரண்டு நிமிஷங்கள் அவள் முகத்தையே ஒருவித ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தாள் கீதாவின் தாயார். ராஜம் இந்த உலகத்திலேயே இல்லை. அவள் சிந்தனை எங்கோ ஓடிக் கொண்டிருந்தது. ''உங்களிடம் பாடம் சொல்லிக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டால் உங்களுடைய உயர்ந்த குணங்களைப் பற்றியும் உங்கள் பிள்ளையின் அழகைப் பற்றியும்தான் பேசிக் கொண்டிருக்கிறாள்..அவளுடைய மனத்தைப் புரிந்துகொண்ட நான்தான் அவளுக்குக் கூடத் தெரியாமல்' இப்போது வந்தேன்...'' என்று ஏதோ தவறு செய்துவிட்டதற்கு மன்னிப்புக் கேட்கும் வகையில் பேசினாள் கீதாவின் தாயார். ராஜம் பதிலே சொல்லவில்லை. ''உங்கள் பிள்ளைக்குப் பெரிய பெரிய இடங்களிலிருந்து ஜாதகங்கள் வரலாம்..'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள். ராஜம் சட்டென்று ஏதோ கனவிலிருந்து விழித்துக் கொண்டவள்போல், ''என்ன சொல்லிக் கொண்டிருந்தீர்கள்?'' என்றாள்.

''எங்களால் அதிகம் செய்ய முடியாது. ஆனாலும் பொன்னை வைக்க வேண்டிய இடத்தில் பூவையாவது வைப்போம்...''

ராஜம் மெள்ளச் சிரித்தவாறு, ''கீதாவே ஒரு ஸ்வர்ண விக்கிரகமாச்சே! பணத்தைப் பற்றியே நான் யோசிக்கவில்லை.... இப்பொழுது நீங்கள் வந்த பிறகுதான் என் சூரிக்குக் கல்யாண வயது ஆகி விட்டதென்ற விஷயம் என் கவனத்துக்கு வந்தது...அவன் வரட்டும். கீதாவைப் பற்றி எடுத்துச் சொல்லுகிறேன். ஒருவேளை கீதாவே அவன் கண்ணைத் திறந்திருந்தால் ரொம்பவும் நல்லதாயிற்று! சீர்வரிசைகளைப் பற்றிய கவலையே வேண்டாம். கீதாவைவிட எனக்கு எதுவும் முக்கியமில்லை......'' என்றாள் ராஜம். கீதாவின் தாயார் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போய்விட்டாள். ராஜம், பிள்ளை சூரியைப் பற்றிய நினைவில் பல்லாண்டுகள் பின்னோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள்.

தோற்றத்தைக் கொண்டு ராஜத்துக்கு முப்பது வயது இருக்கலாமென்று மதிப்பிட்டாலும் உண்மையில் அதைவிட எட்டு வயது அதிகமானவள். அமைதியான அழகும் ஆழ்ந்த அறிவின் ஒளியும் உறவாடும் அவளுடைய முகத்திலே ஏதோ ஒரு குறை இருக்கிறது என்கிற விஷயத்தைச் சிறிது கவனித்துப் பார்த்தால் தான் தெரியும்: பளிங்கு போன்ற அந்த நெற்றியானது வெறும் பாழ் நெற்றி.



பதினைந்து வயதிலே ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்டாள். அடுத்த வருஷம் ஒரு பிள்ளையைப் பெற்றெடுத்தாள். பிள்ளை பிறந்த மறுமாதமே அதன் மூலவரைப் பறிகொடுத்தாள்.

கைப்பிடித்த கணவன் அவளுக்கென்று அதிகமாக ஒன்றும் வைத்து விட்டுச் செல்லவில்லை. எப்படி முடியும்? அவனே அந்த வருஷம்தான் 'என்ஜினீயர்' பட்டத்துடன் கலாசாலையிலிருந்து வெளி வந்திருந்தான். ஆனாலும் ராஜத்தின் புக்ககத்தில் அவளைக் கைவிட்டு விடவில்லை. பெற்ற தந்தைக்கு மேல் பிரியமாயிருந்தார் மாமனார். மெட்ரிகுலேஷன் தேறியிருந்த ராஜத்தை மேற்கொண்டு படிக்க வைத்தார். பிள்ளையைப் பறிகொடுத்த மாமியார், பேரனைக் கொஞ்சி வளர்ப்பதில் அந்தத் துக்கத்தை மறக்க முயன்றாள். தன் துக்கத்தை மறக்கப் புத்தகத்தை அடைக்கலம் தேடினாள் ராஜம். அதன் பலனாக நாலு வருஷங்களில் பி. ஏ. பட்டத்தை முதல் வகுப்பில் சம்பாதித்தாள். அதுமுதல் ஒரு பள்ளியில் உபாத்தியாயினியாகப் பணியாற்றி வருகிறாள். இடையில் எல்.டி. பட்டமும் பெற்று விட்டாள்.

சில நாட்களுக்கெல்லாம் ஒருவர்பின் ஒருவராக மாமனார் மாமியார் இருவரும் காலமாகி விட்டனர். அதுமுதல் வேலையும் பார்த்துக் கொண்டு குழந்தை சூரியையும் வளர்த்து ஓர் ஆளாக்குவதற்குள்......அப்பப்பா!.... என்ன பாடுபட்டிருப்பாள்! அவளை ஒரு தெய்வம் என்றுதான் சொல்ல வேண்டும். குழந்தைக்குத் தாயாக மட்டுமில்லாமல் உற்ற நண்பனாய், தந்தையாய், நல்ல மந்திரியாய்.....அவனுக்கு எந்தக் குறையும் இல்லாமல், முக்கியமாக 'அப்பா இல்லை' என்ற குறை இருக்கக் கூடாதென்று, அவன் திருப்தியிலேயே, அவனுடைய சௌக்கியத்திலேயே, அவனுடைய படிப்பிலேயே கண்ணும் கருத்துமாயிருந்து அவனை ஓர் ஆளாக்கி யிருக்கிறாள். அதுவும் வெறும் ஆளாக அல்ல; பட்டம் பெற்ற அவனுடைய தந்தை உயிருடனிருந்திருந்தால் இந்த நாட்டுக்கு என்ன சேவை செய்திருப்பாரோ, அந்தக் கடனைப் பிள்ளையாவது தீர்க்கட்டுமென்று அதே பி. ஈ. பட்டத்தை அவனுக்குச் சம்பாதித்துக் கொடுத்து விட்டாள். சில நாட்களுக்கு முன்புதான் தன் படிப்பை முடித்துக்கொண்டு ஊருக்குத் திரும்பி யிருந்தான் சூரி.

ராஜம் சாதாரணமாக மாலை ஐந்து மணிக்கெல்லாம் பள்ளிக் கூடத்திலிருந்து வீடு திரும்பி விடுவாள். அவள் வந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் புத்தகமும் கையுமாகக் கீதா வருவாள். கீதாவின் தாயாரிடம் சொன்னது போல் ராஜத்துக்குப் பள்ளிக் கூடத்திலேயே ரொம்பவும் பிடித்த மாணவி கீதா. அவள் அழகு, குணம், புத்திசாலித்தனம் எல்லாம் ராஜத்தின் மனத்தை அதிகம் கவர்ந்து விட்டன. ஒரு பாசமே வளர்ந்திருந்தது என்று கூடச் சொல்லலாம். 'பிரைவேட்' இல்லாமலே கீதா நல்ல மார்க்குகள் வாங்கக் கூடியவள். என்றாலும் அவளுக்குத் தனியாக இன்னும் அதிகமாகச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்ற ஆசை ராஜத்துக்கு. "சாயங்

கால வேளையில் அரை மணி நேரம் வீட்டுக்கு வாயேன்.....தெரியாததைச் சொல்லிக் கொடுக்கிறேன்'' என்றாள் ஒரு நாள். அன்று முதல் தினமும் கீதா வந்து கொண்டிருந்தாள். நாளுக்கு நாள் ஒருவரிடம் ஒருவருக்கு மதிப்பும் பிரியமும் அதிகரித்துக் கொண்டு வந்தன. மச்சரைப் பிடித்த கீதாவுக்கு இப்பொழுது அவள் பிள்ளையையும் பிடித்திருக்கிறது!......

சூரியையும் கீதாவையும் ஒப்பிட்டுப் பார்த்தவாறு மெய் மறந்து உட்கார்ந்திருந்த ராஜத்தை ''அம்மா!'' என்ற குரல் விழிப்படையச் செய்தது. திரும்பிப் பார்த்தாள். ஆஜானுபாகுவாக நின்று கொண்டிருந்த பிள்ளையின் தோற்றம் 'எனக்காம்மா இன்னும் கல்யாணப் பருவம் வரவில்லை?' என்று கேட்பது போலிருந்தது. ''சூரி, இப்படி உட்கார்...''என்றாள். பக்கத்திலிருந்த நாற்காலியில் அமர்ந்தான் சூரி.

''எங்கே போயிருந்தாய்?''

''சும்மா ஒரு 'வாக்' போய்ட்டு வந்தேன்.''

''ம்...மேற் கொண்டு என்னப்பா செய்வதாக உத்தேசம்?''

''சாதம் போட்டியானும் சாப்பிடுவதாக.''

ராஜம் சிரித்துவிட்டு, ''அதில்லே...படிப்பு முடிந்துவிட்டதே...'' என்று இழுத்தாற் போலச் சொன்னாள்.

''உத்தரவு வந்ததும் உத்தியோகம் பார்க்க வேண்டியதுதானே! எத்தனை நாளைக்குத் தான் நீ உழைப்பாய் அம்மா? இவ்வளவு காலமும் நீ சம்பாதித்து என்னைக் காப்பாற்றினாய். இனிமேலாவது நான் சம்பாதித்து உன்னைக் காப்பாற்ற வேண்டாமா? நான் வேலையை ஒப்புக் கொண்டதும் நீ ராஜினாமாச் செய்ய வேண்டும்!'' என்று சூரி கூறியதும் ராஜத்தின் கண்கள் இலேசாகக் கலங்கிவிட்டன. சட்டென்று அதை மறைத்துக் கொண்டு சிரித்தவாறு, ''அப்பொழுது மட்டும் என் உழைப்பு குறைந்துவிடுமா சூரி?'' என்று கேட்டாள்.

''பின்னே?''

''என்னையும் உன்னையும் கவனித்துக் கொள்ள ஒரு பெண் வேண்டும்! அவளை நான் அதட்டி உருட்டி வேலை வாங்கிக் கொடுமைப் படுத்தணும்னு ஆசையாயிருக்கு...அதற்காக ஒரு கல்யாணத்தைப் பண்ணிக் கொள் என்கிறேன்...பெண்ணையும் பார்த்துவிட்டேன்!''

''கல்யாணமா! எனக்கா?''

''உனக்கும் அவளுக்கும்!''

''எவளுக்கும்?''

''கீதாவுக்கும்!''

''கீதாவா? யாரம்மா அவள்?''

''கீதாவைத் தெரியாது? என்ன பிள்ளையடா நீ! அவள் உன்னைக் கவனித்து வைத்திருக்கிறாள். நீ கவனிக்கவில்லையா? தினமும் என்னிடம் 'ட்யூஷ'னுக்கு வருகிறாளே ஒரு பெண், அவள்தான்! பெண் அழகாயில்லே?''

''யார்தான் அழகாயில்லே? ஒவ்வொருவரிடமும் ஒவ்வோர் அழகு இருக்கிறது. அழகு இருந்தால் மட்டும் போதுமாம்மா?''

''நன்றாய்க் கேட்டாய். ஆனால் கீதாவிடம் நல்ல குணமும் இருக்கிறது சூரி. ரொம்பவும் கெட்டிக்காரி. இன்னும் என்ன வேணும்?''

 மாம்பழம் பனிகாலத்தில்

கிடைக்குமென்றால்?  அது

மந்திரத்தினால் அல்ல 

அளிப்பவர்கள் மிட்லண்டார்

தான்  ஐஸ் க்ரீமுடன் பரிமாறி

னால்  அருமையான ருசி

அளிக்கும். ஸூப்ளேயுடன் சேர்த்

துண்டாலோ அமிர்தம் போன்றிருக்

கும்  கனிந்த 

பழங்களைப்போன்று நாவிற்கினியது.

*Midland*

மிட்லண்ட் சுவை மிகுந்த 28 வகைகள் பழங்களாகவும், மரக்கறிகளாகவும், ஜாம்களாகவும், ஜெல்லிகளாகவும், மற்றும் கெச்சப்களாகவும் கிடைக்கின்றன.




தயாரிப்பாளர்கள்: மிட்லண்ட் ப்ருட் அன்டு வெஜிடபிள் பிராடக்ட்ஸ் (இந்தியா) மதுரா

ஏகபோக விநியோகஸ்தர்கள்: கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்., பம்பாய்

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி அன்டு கம்பெனி லிமிடெட்.

"பணம் வேண்டாமா, அம்மா ?"

"அதை நீ சம்பாதிக்க மாட்டாயா? பெண்ணுக்குக் குணம்தான் முக்கியம் சூரி. ஏதோ முடிந்ததை அவர்கள் செய்கிறேன் என்கிறார்கள்..."

"மார்க்கெட்டில் இப்பொழுது பி. ஈ.க்கெல்லாம் என்ன 'ரேட்' தெரியுமாம்மா? பத்து முதல் பதினையாயிரம் வரையில்! சில பேர் கார்கூட வாங்கித் தருகிறார்கள்!"

ராஜத்தின் ஆர்வமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது. எதை அவள் துச்சமாக நினைத்தாளோ, அதில் கருத்தாயிருக்கிறான் பிள்ளை. "தாயார், தகப்பனார் இல்லாத பி. ஈ. படித்த பிள்ளையாக இருந்தால் யாரோ கிட்டத்தட்ட லட்ச ரூபாய்க்குச் செய்கிறார்களாம். என்னை விட்டுவிடுகிறாயா?" என்றான் ரொம்பவும் அமைதியான குரலில்.

இந்தக் கேள்வி சூரியை ஓர் உலுப்பு உலுப்பி விட்டது. "அம்மா!" என்றான்.

"சம்பாதிக்கத் தெரியாதவனாக இருக்கக் கூடாதென்றுதானே இவ்வளவு பாடுபட்டு உன்னை பி. ஈ. ஆக்கினேன். இப்பொழுதும் உனக்கு ஒரு பெண் மூலம்தான் பணம் வர வேண்டுமா?" என்றாள் ராஜம். பேச்சில் சிறிது கசப்பு உணர்ச்சி கலந்திருந்தது.

"அதில்லையம்மா. 'டிக்னிடி' ஒன்று இல்லையா? அப்பா இருந்தால் இப்படியெல்லாம் சம்பந்தம் செய்வாரா?" என்றான் சூரி. 'அப்பா இருந்தால்' என்ற வார்த்தை ராஜத்தின் காதுகளில் நாராசமாகப் பாய்ந்து, 'அப்பா இருந்தால்' 'அப்பா இருந்தால்' என்று ஒலித்துக் கொண்டேயிருந்தது. எந்தக் குறை அவனுக்கு ஏற்படக் கூடாதென்று அவள் இராப் பகலாகப் பாடுபட்டு வந்தாளோ, அந்தக் குறை ஏற்பட்டு விட்டது! அதுவும் அவன் வாயாலேயே கூறிவிட்டான். இது முதல்தரமல்ல, இரண்டாம் முறையாகச் சொல்கிறான்!

ராஜத்தின் மனம் அமைதியின்றித் தவித்தது. தலையைச் சுற்றுவது போலிருந்தது. கண்கள் இருண்டு வந்தன. அவள் சக்தியெல்லாம் திடீரென்று அவளை வஞ்சித்து விட்டு எங்கோ சென்று விட்டதைப் போல உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை ஒரு நடுக்கம் கண்டது. ஏதோ சொல்ல நினைத்தாள். ஆனால் உதடுகள் அசைய மறுத்தன. பிள்ளையை வெறித்துப் பார்த்தாள்.

"முன்பு எனக்கு வெளி நாட்டுக்குச் செல்லும் வாய்ப்பு வந்தபோது 'அதெல்லாம் வேண்டாம்டா. இங்கு உண்டான படிப்பைப் படித்துச் சம்பாதித்தாலே போதும்' என்றாய். அப்பா இருந்திருந்தால் என்னைத் தடுத்திருப்பாரா? இப்பொழுது கல்யாணத்தின் மூலம் கிடைக்கக் கூடிய நல்ல வரும்படிக்கும் குறுக்கே நிற்கிறாய். அப்பா இருந்தால் 'பணம் வேண்டாம்டா. உனக்குப் பிடித்த பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள்' என்று சொல்வாரா?" என்றான் சூரி. 'அப்பா இருந்தால்! அப்பா இருந்தால்..! அப்பா இருந்தால்!' ராஜத்தின் காதுகளைத் துளைத்தெடுத்தன. சில நிமிஷ மௌனத்துக்குப் பிறகு ராஜம் பேசத் தொடங்கினாள்.

"அந்தக் காலத்தில் என்னை வந்து உன் அப்பா பார்க்கும்போது வெளியில் அவருக்கு நிறையச் செய்வதாகத்தான் எல்லோரும் ஆசை காட்டினார்கள். மற்றவர்கள் சொன்னதில் கால் பங்குகூட என் பெற்றோர்கள் செய்யவில்லை. உன் அப்பா என்னைத்தான் ஏற்றுக் கொண்டார். அவருக்குப் பிறந்த பிள்ளைதான் நீ!..." என்றாள். அவள் குரலில் எப்பொழுதோ காலஞ்சென்ற கணவருக்கான நன்றி, பிள்ளையின் அற்பத்தனமான ஆசையால் ஏற்பட்ட துக்கம் எல்லா உணர்ச்சிகளும் கலந்திருந்தன. அவளைப் பார்க்கப் பிடிக்காதவன் போல் பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

"உன் காலம் வேறு...இப்பொழுது மட்டும் அப்பா இருந்தால்..." என்று எதையோ சொல்ல ஆரம்பித்தவன் பேச்சை முடிக்காமலே எழுந்தான். ராஜத்தின் துக்கம் கோபமாக மாறியது. நீர்த் திரையிட்டிருந்த நீல விழிகள் தன் நிறத்தை இழந்து சிவப்பாக மாறிவிட்டன. அமுதமாகப் பேசும் அவள் அதரங்களிலிருந்து அனற்கட்டிகளாக வார்த்தைகள் வந்து விழுந்தன. ஆவேசம் வந்தவளைப் போல் இரைந்தாள்.

"அப்பா இருந்தால் என்னடா? இவ்வளவு காலமும் அப்பா இல்லாத குறையை என்னடா கண்டுவிட்டாய்? இப்பொழுது அப்பா இருந்தால் உனக்கு வரதட்சிணை மூலம் எவ்வளவடா சம்பாதித்துக் கொடுப்பார்? சொல்! பத்தாயிரமா? இல்லை, இன்னும் அதிகமாகவே சம்பாதித்துக் கொடுப்பாரா? கீதாவைச் செய்து கொள்வதானால் உனக்கு எவ்வளவு வேண்டும் என்று தயங்காமல் சொல்! உன் அப்பா இருந்தால் எத்தனை வாங்கிக் கொடுப்பார் என்று நம்புகிறாயோ, அதைச் சொல்! என்னை ராஜினமாக் கொடுக்கச் சொன்னாயல்லவா? இனி அந்த எண்ணமே எனக்குக் கிடையாது. இந்த உடலில் உயிர் இருக்கும் வரையில் நான் உழைத்துச் சம்பாதிக்கிறேன். இதுவரை நான் சேர்த்து வைத்திருக்கும் பணத்தோடு இனி சம்பாதிக்கப்போகும் பணத்தையும் சேர்த்து உன் அப்பா இருந்தால் கிடைக்கக் கூடிய தொகையை விட இரண்டு மடங்கு கொடுத்து விட்டுச் சாகிறேன்!... ஆனால் இனி என் காதுபட 'அப்பா இருந்தால்' என்று மட்டும் சொல்லாதே! அந்தக் குறை உனக்கு இருக்கக் கூடாதென்றுதான் பாடுபட்டேன். இனியும் அதற்காகவே பாடுபடுகிறேன்!" என்று ஆத்திரத்துடன் ஆரம்பித்தவள் அழுகையுடன் முடித்துவிட்டுக் கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டாள். அவன் காதுகளில் 'அப்பா இருந்தால்' என்ற வார்த்தை ஒலித்துக் கொண்டேயிருந்தது. சூரி அசையாமல் நின்றுகொண்டிருந்தான். 'நான் சம்பாதித்து இரு மடங்காகத் தருகிறேன்' என்ற வார்த்தைகள் அவன் காதுகளில் குடைந்து கொண்டிருந்தன. சிறிது நேரம் ஏதோ யோசித்தவாறு இருந்தான். பிறகு கட்டிலுக்குப் போய்த் தாயாரின் கால்மாட்டில் உட்கார்ந்து கொண்டு, "அம்மா! அம்மா!" என்றான். ராஜம் எழுந்து உட்

கார்ந்தாள். ''என்னை மன்னித்துவிடும்மா. இனிமேல் அந்த வார்த்தையைச் சொல்லவே மாட்டேன். உன் விருப்பப்படியே அந்தப் பெண்ணை மணந்து கொள்கிறேன். அவர்கள் எதுவும் செய்ய வேண்டாம். நீயும் எனக்குச் சேர்த்து வைக்க வேண்டாம். எனக்குச் சம்பாதிக்கத் தெரியும், அம்மா!'' என்றான்.

''கல்யாணத்தின் மூலம் வரதட்சிணையாக வாங்கும் பணம் நியாயமான சம்பாத்திய மில்லை சூரி. அதை நினைத்தால்தான் பயமாயிருக்கிறது. பெண் மூலம் பணம் சம்பாதிக்கணுமுன்னு பிரியப்படுகிற நீ எங்கே லஞ்சம் வாங்கி விடுவாயோ என்று கவலையாயிருக்கிறது. அதற்காக உன்னை நான் படிக்க வைக்கவில்லையடா....''

''இல்லையம்மா. சத்தியமாக லஞ்சம் வாங்க மாட்டேன். கிடைப்பதைக் கொண்டே திருப்தியடைவேன்!'' என்றான் சூரி.

''இந்த வார்த்தையைக் கேட்க உன் அப்பா இருந்தால் எவ்வளவு சந்தோஷப் படுவார், தெரியுமா?'' என்றாள் ராஜம்.

# படித்துப் பாருங்கள்!

## நவராத்திரியின் கதைகள்

இந்த நூலில் சக்தி வழிபாடு இனிய கதைகள் வடிவில் விளக்கம் பெறுவதைக் காணலாம். இந்த நூலை எழுதியவர் பி. ஸ்ரீ. அவரைத் தமிழுலகம் நன்கு அறியும். அம்மையின் கொலு, மதுகைடபரின் மதிமயக்கம், மகிஷாசுரமர்த்தினி, இராமபிரானும் மகாதேவியும், பாரதமும் தேவிபாகவதமும், நரநாராயணர் கதை, தாயின் வெற்றி என்பது போன்ற பன்னிரண்டு தலைப்புகளில் சக்தி வழிபாட்டு ரகசியங்களை எளிய நடையில் ஆசிரியர் விளக்குகிறார். நவராத்திரி ஒன்பது நாட்களிலும் மலைமகள், திருமகள், கலைமகள் என்ற மூன்று வடிவில் அம்பிகையை வழிபடுகிறோம். மகிஷாசுரன் முதலான அசுரர்கள் தேவியால் கொல்லப்பட்டதைத் தேவி மகாத்மியம் கூறுகிறது. 'அறியாமையின் சொரூபமான மகிஷாசுரனையும், கொடுமைகளின் சொரூபங்களான வேறு அசுரர்களையும் நாம் இந்த நவநாகரிக யுகத்திலும் காணத்தான் செய்கிறோம். அசுர சுபாவங்களுக்கு அஞ்சித் தலை வணங்காமல் மகிஷாசுரமர்த்தினியைச் சரணமடைந்து படைத் துணையாக நாம் புறப்பட வேண்டும். அப்போதுதான் தேவியின் தர்மாவேசம் நாடெங்கும் பரவ, மக்களிடையே சாந்தி நிலை ஏற்படுவது சாத்தியமாகும்.'

ஆசிரியர்: பி. ஸ்ரீ: அமுத நிலையம், சென்னை-18. விலை 30 புதுக்காசு.

## கீதார்த்தஸங்க்ரஹம்

பல நூற்றாண்டுகளுக்கு முன் ஆளவந்தார் ஒரு நூலை ஆக்கினார். அது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தையொட்டிக் கீதையின் உட்கருத்தை விளக்குவது. சென்ற வியாஸர் திருநாளன்று அதே முறையில் அத்வைத சித்தாந்தத்தை யொட்டி ஸ்ரீ மீமாம்ஸ வேதாந்த சிரோமணி கா. ராமமூர்த்தி சாஸ்திரிகள் கீதார்த்த ஸங்க்ரஹம் என்ற புதிய நூல் ஒன்று வெளியிட்டிருக்கிறார். இதிலுள்ள சுலோகங்கள் 229. கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்தின் கருத்தையும், ஓர் அத்தியாயத்துக்கும் அடுத்ததிற்கும் உள்ள தொடர்பையும், முழு கீதையின் ஸாரமான அபிப்பிராயத்தையும் ஸ்ரீசங்கரபாஷ்யத்தைப் பின்பற்றி இந்நூல் எளிய ஸம்ஸ்கிருத நடையில் விளக்குகிறது. — அண்ணா

ஆசிரியர்: ஸ்ரீ கா. ராமமூர்த்தி சாஸ்திரி, ஸம்ஸ்கிருத கலாசாலை, மயிலாப்பூர், மதராஸ் 4.

## சீனாவில் இளமைப் பருவம்

நன்மொழிகள் புத்தக டிரஸ்ட் ஆதரவில் ஜெமினி பிரசுர வெளியீடு இந்நூல். இதன் ஆசிரியர் சுியாங் யீ என்பவர் தமது குடும்பத்தின் கதையைத்தான் இவ்வாறு 'சீனாவில் இளமைப் பருவம்' என்று எழுதியுள்ளார். சீனக் குடும்பங்களில் செல்வந்தராயினும் எளியவராயினும் எல்லோருக்கும் பண்பாடு என்பது ஒன்றாகவே விளங்கி வந்திருக்கிறது. சீனக் குடும்பங்களின் பண்பாடு என்றும் அழிக்க முடியாதது. அந்த உயர்ந்த பண்பாடுகளில் பெரியோர்களுக்கு அம்மக்கள் செலுத்திவரும் மரியாதையை உதாரணமாகச் சுட்டிக்காட்டலாம். குடும்பங்களில் ஒவ்வொரு சீனரும் தமது நித்ய கடமைகளில் ஒன்றாக வயதானவர்களுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு வெளி வேலைகளுக்குப் புறப்படுவதைக் குறிப்பிடவேண்டும். இந்த நற்பழக்கம் தத்தி நடக்கும் பருவத்திலுள்ள குழந்தைகளிலிருந்தே சீனர்கள் ஆண் பெண் இருபாலாருக்கும் பயிற்றுவிக்கப்படுகிறது. இருபது அல்லது முப்பது தலைமுறைகளுக்கு மேலான மூதாதையர்களின் விவரங்களை எழுதி வைத்துக் கொள்ளும் பழக்கமும் சீனக் குடும்பங்களில் உண்டு. இவ்விதச் சிறப்பான பழக்கங்களை யெல்லாம் ஆசிரியர் சுியாங் யீ, தமது குடும்பத்துச் சம்பவங்கள் மூலம் நன்கு வெளியிட்டிருக்கிறார்.

வீட்டில் தோன்றும் காட்சிகளின் எல்லா நிகழ்ச்சிகளையும் மிக அழகாக விவரித்திருக்கிறார். சுியாங் யீயின் இந்த அற்புத நூல், பிற நாடுகளில் பெரிதும் போற்றப்பட்டதில் வியப்பில்லை. ஏனெனில் இதைப் படிக்கும் போது, சீனக் குடும்பத்தில் தாமும் ஒருவராகவே நடமாடுவது போன்ற எண்ணம்தான் வாசகர்களுக்கு ஏற்படும். ஆங்கிலத்தில் வெளியான இந்நூலைத் தமிழில் சுவை குறையாமல் ஜனாப் எம். ஏ. அப்பாஸ் மொழிபெயர்த்திருக்கிறார்.

கிடைக்குமிடம்: ஜெமினி பிரசுரம், எல்லையம்மன் காலனி, சென்னை-6. விலை: ரூ.2-25.

## தினசரி 80,000 கெஜம் துணிகள் எங்கள் தறிகளிலே நெய்யப்படுகின்றன.

கடந்த 50 வருஷங்களாக லக்ஷக்கணக்கானவர்களுக்கு துணிகள் தயாரிப்பதிலே எங்களுடைய தறிகள் முக்கியமான பங்கெடுத்துள்ளது. ஸாரிகள், வேஷ்டிகள், பாப்லின், மல்துணிகள் மற்றும் அவரவர்களுக்குத் தேவையான விதவிதமான துணிகளும் தயாரிக்கப்படுகின்றன.

## ஸயாஜி மில்ஸ் நம்பர்—2, பெர்குஸன் ரோடு, பம்பாய்—13.



இது ஒரு ரோஹித் க்ருப் ஸ்தாபனம்.

# எல்லாம் ஒன்றுதான்

நாமகிரி

பூர்ண சந்திரன் ஆகாயத்தில் ஒளி வீசிக் கொண்டிருந்தான். அவனது அழகைப் பருகியவளாய் மீனாட்சியும் பங்களாவின் மூன்றும் தளத்து மொட்டை மாடியில் உலாவிக் கொண்டிருந்தாள். மாடிப்படி அறையில் 'லிப்ட்' சத்தம் கேட்கவும் அவள் நின்று திரும்பிப் பார்த்தாள். அவளது கணவன் மாதவன், "என்ன தனியாயிருக்கிறாய், மீனு? என்ன மனக்கோட்டை உருவாகிறது?" என்று கேட்டுக்கொண்டே அவளை நோக்கிப் பூரிப்புடன் வந்தான்.

"ஒன்றுமில்லை" என்றாள் மீனாட்சி.

மாதவன் அவளுடன் உலாவிக் கொண்டே, "மீனு, உன் அம்மா வரப்போவதாகச் சொன்னாயே, 'கெஸ்ட் ஹவுஸ்' இன்னும் சில வாரங்களில் கட்டி முடிந்துவிடும்" என்றான்.

மீனாட்சிக்குத் தன் பிறந்தகத்தைப் பற்றி மிகவும் பெருமையுண்டு. அதே சமயத்தில் தன் புருஷன் வீட்டாரிடமும், அவள் இது வரை யாரையுமே பார்த்திரா விட்டாலும் மதிப்பு உண்டு. புக்ககத்தினர் நினைவும் அவளுக்கு அப்பொழுது வந்திருக்க வேண்டும்.

"ஆமாம், அம்மாவுக்கு எனக்கு இங்கே என்ன அசௌகரியமோ, இங்கே வந்திருந்து எல்லாம் அமைத்துக் கொடுத்துப் போகலாம் என்று யோசனை. அம்மா நம்மோடு சேர்ந்து இருக்க மாட்டாள். எங்கள் அக்கா வீடுகளுக்குப்போனால்கூடத் தனி வீட்டில் இருந்துதான் எல்லாம் செய்வாள். அதற்குத்தான் 'கெஸ்ட் ஹவுஸ்' கட்ட ஆசைப்பட்டேன். அதனால் நான் அம்மாவுக்கு இரண்டு மாதங்கள்கழித்து இங்கு வரும்படி எழுதி விட்டேன். அங்கிருந்துதான் நமக்கும் பின் ஏழு தலைமுறைகளுக்குக் கூடக் காணும்படி சீர்கள் அனுப்பியிருக்கிறார்களே!" என்றாள். இது மாதவனுக்கு ஏமாற்றமாக இருந்தது.



மீனாட்சியின் கரங்களைப் பிடித்துக் குலுக்கி, "என்ன காரியம் செய்து விட்டாய் மீனு? வருகிறேன் என்றவர்களை 'இரண்டு மாதங்கள் கழித்துவா!' என்று எழுதினால் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்கள்?" என்று அங்கலாய்த்தான்.

மீனாட்சி கணவனையே சிறிது உற்றுப் பார்த்துவிட்டு, "இல்லை,—நடுவே, நீங்களும் நானும் ஒரு நடை அம்மாவிடம் வந்துபோக உத்தேசம் என்றும் எழுதியுள்ளேன்" என்றாள்.

"அப்படியா?... நீ வேண்டுமானால் போக முடியும். நான் எப்படிப் போகமுடியும்? எனக்கு விடுமுறை கிடைக்காதே!" என்று குறைப்பட்டான் மாதவன்.

• • •

மாதவனுக்கு விவாகம் முடிந்து இரண்டொரு மாதங்களே ஆகியிருந்தன. அவன் கல்லூரிப் பரீட்சைகளில் முதல் வகுப்பில் தேறியவுடன் பெரிய கம்பெனி யொன்றில் மானேஜர் வேலை கிடைத்தது. அதிர்ஷ்டம் மேலும் பெருக, ஒரு மந்திரியின் மகள் அவனுக்கு மாலையிட்டாள். மந்திரி தம்பதிகள் அவனுக்குச் சகல சௌகரியங்களும் செய்து கொடுத்து இன்னும் பெரிய மனிதனாக ஆக்கி விட்டனர். அவர்கள் கட்டிக் கொடுத்த பங்களாவில் மாதவன் இப்பொழுது 'தானாகவே ஒரு விருந்தினர் விடுதி' கட்டத் தொடங்கியிருந்தான். அது கட்டி முடிந்தால் தன் வீட்டகத்தார் வந்து தங்கிப் போகச் சௌகரியமாக இருக்குமென்று அவன் நினைத்தான்.

• • •

மறுநாள் பொழுது விடிந்ததும் மாதவன் வழக்கம்போல் படுக்கையை விட்டெழுந்து தன் காரியங்களைக் கவனித்துவிட்டுக் காரியாலயம் சென்று விட்டான். மீனாட்சிதான் சற்று ஒரு மாதிரி யிருந்தாள். சமையற்கார ரங்கு வாயிற்படியண்டை வந்து நின்று, "அம்மா, நீங்கள் சமையல் என்ன செய்வதென்று சொல்ல மறந்து விட்டீர்கள். நானே யோசித்து ஏதோ செய்து வைத்தேன். எஜமான் எப்படிச் சுவைத்துச் சாப்பிட்டாரோ?" என்றான்.

மீனாட்சிக்கு அப்பொழுதுதான், தான் அன்று காரியம் எதையும் கவனிக்கவில்லை என்பது நினைவுக்கு வந்தது. அவள் ஏதேதோ எண்ணமிட்டுக் கொண்டு ஏதும் முடிவுக்கு வராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். மெதுவாக எழுந்து அன்று தபாலில் வந்த கடிதங்களைப் பார்வையிட்டாள். சாதாரணமாகத் தன் கணவனுக்கு வரும் கடிதங்களையும் அவள் பிரித்துப் பார்ப்பதுண்டு. ஆனால், அன்று ஏனோ அவள் அவனுடைய கடிதங்களைத் தனியே எடுத்து வைத்து விட்டாள். ஒரேஒரு கடிதத்தில் தன் கணவனின் கையெழுத்தைப் போலவே தென்படவே அதை எடுத்து முகவரியை வாசித்தாள். அவரே எப்படித் தனக்கே எழுதிக்கொள்ள முடியும்? அவரது தகப்பனாரோ, அல்லது

தலைமையனுசராவாகத் தானிருக்கும் என்று அவளுக்குச் சந்தேகம் வந்தது. அந்தக் காரணத்தாலேயே அன்று அவள் மாதவனது கடிதங்களைப் பிரித்துப் படிக்கவில்லை போலும். மாலையில் மாதவன் காரியாலயத்திலிருந்து திரும்பியதும் கடிதங்களைப் படித்தபொழுது அந்தக் கடிதத்தைப் பார்த்தான். அதைப் படிக்கையில் அவன் முகக் குறி மாறியதை மீனாட்சியும் கவனித்தாள். ஆனால் அவன் ஏதும் தெரிவிக்காமல் வாளாவிருக்கவே அவளும் அதுபற்றி ஏதும் அவனைக் கேட்கவில்லை. 'காலையில் சமையல் எப்படியிருந்தது?' என்று மட்டும் விசாரித்தாள். 'நன்றாக இருந்ததே' என்று ஏதோ ஒப்புக்குப் பதிலளித்தான் மாதவன்.

''ஏன் நீங்கள் ஒருமாதிரி இருக்கிறீர்கள்?''

''நீ என்னை விட்டு எங்கு உன் அம்மாவிடம் போய் விடுகிறாயோ என்ற கவலைதான் எனக்கு'' என்று சொல்லி மாதவன் சிரிக்க முயன்றான்.

மறுநாள் விடியற்காலை மாதவனுடைய மோட்டார் வண்டி ரயிலடிக்குப் போயிருந்தது. மீனாட்சிக்கு அப்பொழுதுதான் யாரோ வரப்போவது தெரிந்தது. பிறகு ஒருவாறு தனது மைத்துனர் வரப்போவதை ஊகித்தறிந்துகொண்டாள். அவளுக்குத் தன் கணவனின் போக்குப் புரியவில்லை.

''நீங்கள் மைத்துனர் வருவதாக என்னிடம் ஏன் முன்னதாகச் சொல்லவில்லை? அவருக்குச் சௌகரியமாக எல்லா ஏற்பாடுகளும் செய்து வைத்திருப்பேனே!'' என்று அங்கலாய்த்துக் கொண்டாள். தவிர, தன் உடன்பிறந்த சகோதரனை அழைத்துவர மாதவன் ரயிலடிக்குப் போகாமல் இருந்ததும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

''நீங்கள் ரயிலடிக்குப் போயிருக்கலாமே'' என்று துணிச்சலாக அவனைக் கேட்டு விட்டு, மறுகணமே அதை ஏன் கேட்டோம் என்று உள்ளுக்குள் பயந்தே போனாள்.

மாதவன் அவளைத் தட்டிக் கொடுத்து, ''அதெல்லாம் அவசியமில்லை. நீ கவலைப் படாதே'' என்று ஒரு வார்த்தையில் விஷயத்தைத் தீர்த்துவிட்டான்.

சற்று நேரத்தில் மாதவனின் கார் 'போர்டிகோ'வில் வந்து நிற்க, வாயிற் காப்போன் வண்டியின் கதவைத் திறந்துவிட்டான். மாதவனின் சகோதரன் வண்டியிலிருந்து கீழே இறங்கினான்.

மாதவன் தன் சகோதரனை வரவேற்றுத் தன் மனைவியை அவனுக்கு அறிமுகப்படுத்தினான். தன் கணவன் சாயலாகவே யிருந்த மைத்துனர் கோவிந்தனைப் பார்த்து, மிகவும் சந்தோஷப்பட்டாள் மீனாட்சி. கோவிந்தன் கொண்டு வந்த ஒரே ஒரு கைப்பையை மட்டும் பார்த்து அவர் அதிக நாட்கள் தங்குவதற்காக வரவில்லை என்பதையும் அவள் கவனித்துக் கொண்டு அவருக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் தானே முன்னின்று செய்வதில் தீவிரமாக ஈடுபட்டாள்.

மாதவன் தன் சகோதரனிடம் அதிகமாக ஏதும் பேசவில்லை. வழக்கம்போலவே காரியாலயம் சென்றுவிட்டான். மாலையில் வீடு திரும்பியவுடன் சகோதரனைத் தன் காரில் ஏற்றிப் பட்டணத்தைச் சுற்றிப் பார்க்க அனுப்பி வைத்தான்.

அன்றிரவே கோவிந்தன் தன் அப்பா இருந்த கிராமத்துக்குப் புறப்பட்டு விட்டான். மாதவன் அவனைச் சில நாட்களாவது தன்னுடன் தங்கும்படி கேட்காதது மீனாட்சிக்கு என்னவோ மாதிரி இருந்தது. அதனால் அவளே, ''ஏன் அவசரமாகத் திரும்ப வேண்டும்? சில நாட்கள் நீங்கள் எங்களுடன் இருந்து விட்டுப் போகலாமே?'' என்று தைரியமாகக் கேட்டு விட்டாள்.

கோவிந்தன் அதற்கு இசையாமல்போகவே, புன்சிரிப்புடன் வழியனுப்பினாள் மீனாட்சி.

• • •

கிராமத்தில் சங்குவையர் தம் சிறிய வீட்டில் அடுப்பைமூட்டிக் காப்பிபோட்டுக்கொண்டிருந்த சமயம் கோவிந்தன் உள்ளே நுழைந்தான். தந்தை மகனைச் சந்தோஷமாக வரவேற்றார். ''வா அப்பா! ராஜம் குழந்தைகள் சௌக்கியமா? பட்டணத்தில் மாது—அவன் மனைவிசௌக்கியமா? எப்படியிருக்கிறார்கள்?'' என்று எல்லா க்ஷேமலாபங்களையும் விசாரித்தார். மகனுக்குக் காப்பி கொடுத்துத் தாமும் சாப்பிட்டார். பிறகு குளிய லறையில் வெந்நீர் காயவைத்து மகனுக்கு வைத்துவிட்டு மிஞ்சிய வெந்நீரில் குளித்தார். ருசியாகச் சமையல் செய்து தமது மகனுக்கும் போட்டுத் தாமும் உண்டார். சாப்பாடு



முடிந்ததும் இருவரும் இளைப்பாறலாயினர். கோவிந்தன் பேச ஆரம்பித்தான்:

''அப்பா! பட்டணம் போனேன். அரண்மனை போன்ற பங்களாவில் மாது வசிக்கிறான். அவர்கள் நிரம்பவும் நாகரிகமான வாழ்க்கை நடத்துகிறார்கள். அவர்களுக்கும் நமக்கும் ஏணி வைத்தால்கூட எட்டாது. நீங்கள் அவர்களுடன் சேர்ந்து இருக்க முடியுமா என்று தெரிந்து வரத்தான் அங்கு போயிருந்தேன். அவன் அதுபற்றி ஒரு வார்த்தைகூட என்னை விசாரிக்கவில்லை. என்னைப் பற்றியும் அவன் ஏதும் விசாரிக்கவில்லை. பெரிய அறை கொடுத்துச் சுகமாக வைத்தான். மாலையில் ஊர் சுற்றிவர ஏற்பாடு செய்தான். இரவு வண்டி யேற்றி அனுப்பிவைத்தான். அவ்வளவோடு சரி. அவன் மனைவி மீனாட்சி வெகு நல்ல பெண்ணாகத் தோன்றுகிறாள். அந்த அளவுக்கு நாம் பாக்கியம் செய்தவர்கள். புருஷன் சொற்படிதான் நடந்துகொள்வாள் என்று தெரிகிறது.''

சங்குவையர் முகம் அதைக் கேட்டு மலர்ந்தது. ''அதுதானே வேண்டியது'' என்றார்.

கோவிந்தன் பிறகு, ''அப்பா! அவனைப் பற்றி நான் சொல்லி ஆயிற்று. இனி என்னைப் பற்றிச் சொல்லி விடுகிறேன். எனக்குச் சம்பளம் முந்நூறு ரூபாய்தான் வருகிறது. விலைவாசி விஷம் போல் ஏறிவிட்டதால் இந்தச் சம்பளத்தில் குடும்பம் நடத்துவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ராஜத்தின் உடம்பு உழைத்து உழைத்து ஓடாய்ப் போய்விட்டது. நல்ல போஷாக்கும் இல்லை. மருந்து மாயம் வாங்கப் பணம் போதவில்லை. குழந்தைகளுக்கும் வேண்டியதை வாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே இனிமேல் நான் உங்களுக்குப் பணம் உதவிக்கு அனுப்பச் சிரமப்படும். நீங்களே சின்னப்பிள்ளைக்கு எழுதி ஏதாவது வரவழைத்துக் கொள்வது நல்லது'' என்றான்.

சங்குவையர் அமைதியாகவே எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு தூங்கியே விட்டார். பிற்பகல் மூன்று மணிக்கு 'டாண்' என்று எழுந்தார். தமக்கும் மகனுக்கும் காப்பி போட்டுக் கொண்டார். எதிர்வீட்டுக்காரர்கள் தங்கள் வீட்டுச் சிறுபெண் ராதையிடம் ஒரு டப்பியில் பலகாரம் செய்து கொடுத்து அனுப்பி யிருந்தனர். கிழவர் பிறகு இரவு ரயிலுக்கு வழிக்குருசியான கட்டுச் சாதம் பிசைந்து கொடுத்து மகனை ரயிலேற்றினார். முடிவாக, ''கோபி! உன் மனைவி ராஜம் இளைத்திருக்கிறாள் என்றாயே, ஒரு மாதம் வேணுமானாலும் இங்கு அனுப்பி வை. இங்கே நல்ல காற்று, உடம்பு தேறும். இனிமேல் நீ எனக்குப் பணம் அனுப்பாதே. நான் பார்த்துக் கொள்ளுகிறேன். நீயும் மாதுவும் எங்கேயாவது சுகமாயிருப்பதைக் காதால் கேட்டுக் கொண்டிருந்தாலே எனக்குப் போதும்'' என்றார்.

கோவிந்தனுக்கு மனச் சுமை குறைந்தது. தந்தைக்கு மாதா மாதம் அனுப்பும் பணம் மிச்சம் பிடித்தாயிற்றல்லவா?

ஊர் திரும்பியதும் மனைவியும் குழந்தைகளும் கோவிந்தனைச் சூழ்ந்து கொண்டனர். 'சித்தப்பா வீடு எப்படி யிருந்தது? சித்தி எப்படி இருக்கிறாள்? தாத்தா என்ன கொடுத்தார்?' என்றெல்லாம் அவர்கள் கேள்விகள் கேட்கத் தொடங்கினர்.

அவன் மனைவி ராஜமோ, ''அது சரி, உங்கள் அப்பா விஷயம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டாள்.

''அப்பாவுக்கு இனிமேல் நாம் பணம் அனுப்ப வேண்டியதில்லை.''

''அப்படி யென்றால் மாதவன் அனுப்பப் போகிறாரா?'' என்று ராஜம் ஆவலுடன் கேட்டாள். கோவிந்தன் அதற்குப் பதில் சொல்லாமல் இருக்கவே, ''மாதவன் பணம் அனுப்பினாலும் சரி, அனுப்பா விட்டாலும் சரி, கிழவரை இங்கு சேர்த்துக் கொண்டு விடாதீர்கள். அவருக்கு உழைத்துப் போட என்னாலாகாது. என்ன?'' என்றாள் ராஜம்.

கோவிந்தனுக்கு அவள் அப்படிப் பேசியது என்னமோ போல் பட்டது.

''நீ ஏன் இப்படி பயந்து சாகிறாய்? எங்கள் அப்பாவே நாலு பேர்களுக்கு உழைத்துப் போடுவார். அவர் திடமாகவே யிருக்கிறார். உன்னையும் குழந்தைகளையும் அவரிடம் அழைத்து வரும்படி சொன்னார்'' என்றான்.

சொல்லிவிட்டுக் கோவிந்தன் மனைவியை உற்று நோக்கினான். உண்மையில் அவள் மெலிந்துதான் காணப்பட்டாள்.

''உங்கள் தம்பி பணம் அனுப்ப, அவரிடம் நான் இருந்து உழைத்துக் கொட்ட, நான் உங்கள் வீட்டு வேலைக்காரியில்லை'' என்று கூறி ராஜமும் சிரித்தாள்.

இவை நடந்து ஒரு மாதம் ஆயிற்று.

தினப் பத்திரிகைகளில் சர்க்கார் பரிசுப் பத்திரங்களின் முடிவு வெளிவந்தது. சங்குஅய்யருக்கும் அவரது இரண்டு பத்திரங்கள் பரிசு பெற்று ஏகப்பட்ட ரூபாய் கிடைத்திருப்பதாகச் செய்தி தெரிந்தது.

கோவிந்தனுக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. ராஜமும் ''அப்பாவைப் பார்க்க நாம் எல்லோரும் போவோமா? இனி அவரை நம்மிடமே அழைத்து வைத்துக் கொள்ளலாம்'' என்று அவனை நச்சரித்து விட்டாள்.

மாதவனுக்கும் தன் தகப்பனார் இப்பொழுது தன்னுடன் தங்கியிருக்கக் கூடிய அந்தஸ்து பெற்று விட்டதாகப் பட்டது. அவனும் சங்குவையருக்கு ஒரு கடிதம் எழுதினான்.

'பிரியமுள்ள அப்பா,

இனி நீங்கள் கிராமத்தில் வசிக்க வேண்டாம். எங்கள் காம்பவுண்டிலேயே 'விருந்தினர் விடுதி' தயாராகி விட்டது. அதை உங்களுக்காகவே கட்டியதாக மீனாட்சி சொல்லுகிறாள். இப்பொழுதுதான் தன் விருப்பத்தை என்னிடம் தெரிவித்தாள். உங்களை என்னுடனே வந்து தங்கும்படி அவள் மிகவும் கனிவுடன் கேட்டுக் கொள்ளுகிறாள்.

இப்படிக்கு பிரியமுள்ள
மாதவன்.'

சங்குவையரோ கிராமத்தில் எப்பொழுதும் போலவே யிருந்தார். அவர் வாழ்க்கையில் ஏற்றத்தாழ்வு எதுவும் காணப்படவில்லை. பிள்ளைகளின் க்ஷேமத்துக்காக அவர் சதா கடவுளைப் பிரார்த்தித்து வந்தார். அவருக்கு எல்லாம் ஒன்றுதானே!

# உருக்கு உற்பத்தி பெருக, போக்கு வரத்து வசதிகள் வளரும்

சுறுசுறுப்பு வாய்ந்த தொழிலாளிகள் பரபரப்புடன் ரயில் பாதை அமைத்து வருகின்றனர். உருக்காலான இருப்புப் பாதை. காடு. மேடு. மலை. வனாந்திரங்கள் அனைத்தையும் கடந்து செல்லும் இருப்புப் பாதை. மூலை முடுக்குகளிலுள்ள கிராமங்களிலும், பட்டி தொட்டி களிலும் நவ நாகரிகத்தின் நற்பலன் களைக் கொண்டு சேர்க்கும் இருப்புப் பாதை.

விரிந்து, பரந்து கிடக்கும் இப் பாரத நாட்டில், 41 கோடி மக்கள் நிறைந்த இந்த உப கண்டத்தில், துரிதமான, திறமையான போகுவரத்து வசதி அத்தியாவசியமானது. ரயில் போக்குவரத்து அல்லது ரஸ்தா போக்குவரத்து, எதுவாயினும் சரி, அதற்கு எஃகின் உதவி தேவையே. சாதாரண சைக்கிள் முதல் அதிவேக விமானம் வரை நவீன வாகனாதிகள் எல்லாமே எஃகினலாக்கப்பட்டவை. வெகு விரைவிலேயே பாரத உப கண்டத்தின் மூலைமுடுக்குகளெல்லாம் போக்குவரத்து வசதி பெறும். உருக்கு உற்பத்தி பெருகப் பெருக இந்த அனுகூலங்களெல்லாம் நம்மை வந்தடையும்.

அதற்கெனவே இஸ்கோ பணியாற்றி வருகிறது. அதிகப்படியாக எஃகு உற்பத்தி செய்து உங்கள் அனைவருக்குமே உதவ முழு மூச்சுடன் முயன்று வருகிறது. உங்களுக்கு செய்யும் சேவை நாட்டிற்குச் செய்யும் பெரும் பணியாகும், அதுவே எங்கள் பாக்கியமாகும்.

தி இந்தியன் ஐரன்
& ஸ்டீல் கோ.
லிட்.

INDIAN IISCO STEEL

IIC-79 1

## குழந்தைகள் விரும்புவது

# காட்பரீஸ்

### டிரிங்கிங் சாக்லேட்

காலையிலும், மாலையிலும், எவ்வேளையிலும்
அதிருசிகரமான காட்பரீஸ் டிரிங்கிங் சாக்லேட்
தவறாமல் அருந்துங்கள். சீக்கிரமாகவும்
சுலபமாகவும் தயாரிக்கலாம்.

## தரத்தில் உயர்ந்தது காட்பரீஸ்




**தயாரிக்கும் முறை :**

சூடான ஒரு கப் பாலிலோ (அல்லது
தண்ணீர் கலந்த பாலில்) மூன்று
தேக்கரண்டி அளவு காட்பரீஸ் ட்ரிங்கிங்
சாக்லேட் பவுடரைத் தூவிக் கலக்கவும்.

காட்பரீஸ் டிரிங்கிங் சாக்லேட்
கேக்குகளுக்கும் புட்டிங்குகளுக்குங்கூட
உபயோகிக்கலாம்.

# சொர்க்கத்தின் நிழல்

## அத்தியாயம் ஒன்பது

நீசர்களால் வீசி யெறியப்பட்ட தெய்வ விக்கிரகம் போல் அந்தச் சிறிய அறையின் ஒரு மூலையில் ஒடுங்கி முடங்கிப் படுத்துக் கிடந்த கோமதி மெள்ள எழுந்து உட்கார்ந்தாள்.

பழைய பத்திரிகைக் காகிதத்தில் சுற்றிக் கட்டப்பட்ட சதுரமான பொருள் ஒன்றை இடக்கை கட்கத்தில் இடுக்கிக் கொண்டு, வலக் கையில் ஒரு சாமந்திப் பூ மாலைப் பொட்டணத்துடன், சிறிதும் உற்சாகமின்றி உள்ளே வந்த சாரங்கன், அவற்றைக் கோமதியின் அருகில் வைத்து விட்டு அவளிடம் ஒன்றுமே பேசாமல் துவாலையை எடுத்துக் கொண்டு குளியலறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டான்.

முகத்தை முன்றானையால் துடைத்துக் கொண்டு திரும்பிய கோமதி அந்தச் சதுரமான பொருளின் மேல் சுற்றப்பட்டிருந்த காகிதத்தைப் பிரித்தாள். அவளுடைய கைவிரல்கள் நடுநடுங்கித் துடித்தன.

அது ஒரு போட்டோப் படம்! சிவகாமியம்மாளின் உருவப் படத்தைப் பெரிதாக்கி அதற்கு அழகிய சட்டம் போடப்பட்டிருந்தது.

அந்தப் படத்தைச் சுவரில் சாய்த்து வைத்த கோமதி, பூமாலையை எடுத்துச் சூட்டி விட்டுச் சற்றே முன்னால் நகர்ந்து வந்து அந்தப் படத்தையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தவள், “அம்மா!” என்று அலறிக்கொண்டே அதில் முகம் புதைத்து விம்மி விம்மி அழுதாள்.

துவாலையால் முகத்தைத் துடைத்தவாறு குளியலறையிலிருந்து வெளியே வந்த சாரங்கன், கோமதியை ஒரு கணம் உற்றுப் பார்த்துவிட்டு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். அவனது இரு கண்களும் சிவந்து இமைச் சருமங்கள் வீங்கிப் புடைத்திருந்தன. மூக்கை வேகமாக உறிஞ்சிக் கொண்டு கரகரத்த குரலில் சொன்னான்: “கோமதி! உனக்கு நான் ஆறுதல் சொல்வதாகவோ புத்திமதி கூறுவதாகவோ நினைத்துக் கொள்ளாதே! அப்படிச் சொல்லக் கூடிய நிலையில் நானும், அவற்றை ஏற்றுக் கொள்ளக் கூடிய நிலையில் நீயும் இல்லையென்பது எனக்கு நன்றாகத் தெரியும். உனக்கேற்பட்டு விட்ட மாபெரும் நஷ்டத்தை வெறும் ஆறுதல் மொழிகளால் மீட்டுக் கொடுத்துவிட முடியாதென்பதும் எனக்குத் தெரிந்த விஷயமே. அந்த நஷ்டத்தை எண்ணி யெண்ணி ஆண்டாண்டு காலம் நீ கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாலும் அது தவறு என்றோ, பேதைமை என்றோ சொல்ல நான் முன் வரமாட்டேன். மனத்தின் வேதனைகளைக் கரைக்கும் ஆற்றல் கண்ணீர் ஒன்றுக்குத்தான் உண்டு. ஆகவே, உன் மனக் குமுறல் ஓயும்வரையில் கபால ஓட்டிலுள்ள நீரையெல்லாம் கண்வழியே பிழிந்து கொட்டிக்கொண்டிருந்தாலும் 'ஏன்' என்று கேட்கப் போவதில்லை; அது 'வீண்' என்றும் நான் சொல்லப் போவதில்லை. ஆனால் 'இத்தனைக்கும் பின் எஞ்சி நிற்கப் போவது என்ன?' என்று ஒரு கேள்வி எழும் அல்லவா? அந்தச் சிறு கேள்வியை மட்டும் இப்போதே நீ கேட்டுக் கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.”

கோமதி அவசரமாகத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு சாரங்கனை ஏறிட்டுப் பார்த்தாள். அவன் ஜன்னலுக்கு வெளியே சூன்ய வெளியில் தனது பார்வையைச் செலுத்தியவாறு கம்மிய குரலில் தொடர்ந்து சொன்னான்: “ஆமாம், கோமதி! அந்தக் கேள்வியில்தான் உனக்குரிய ஆறுதல் அடங்கியிருக்கிறது — அதாவது, 'அந்த மாபெரும் நஷ்டம் மனித சக்தியால் தவிர்க்க முடியாதது; அது நடந்தே ஆகவேண்டிய ஒரு நிச்சய நடப்பு' என்று வரும் பதிலே இப்போது உனக்குரிய ஒரே ஆறுதல்! ஏனென்றால் பிறப்பைப் போல் இறப்பு ஓர் அசந்தர்ப்பமான நிகழ்ச்சி அல்ல; அது நிச்சயிக்கப்பட்ட ஒரு நிலையான சம்பவம். ஆனால், நாம் அந்த அசந்தர்ப்ப நிகழ்ச்சியையும், இந்த நிச்சய சம்பவத்தையும் முன்பின்னாக மாற்றிப் போட்டு எண்ணிக் கொண்டிருக்கிறோம். அதனால்தான் பிறப்பைக் கண்டு மகிழ்வதும், இறப்பைக் கண்டு அழுவதுமாக நமது அறியாமையை

ஜெகசிற்பியன்

வாழையடி வாழையாக வெளிப்படுத்திக் கொண்டு வருகிறோம்.''

சாரங்கன் சட்டென்று எழுந்து தன்னைத் தானே கேலியாகப் பார்ப்பது போல் பார்த்து மூக்கால் சிரித்துக் கொண்டே, ''ஓ!...,.இப்போது நான் யாருக்கு இந்த ஆறுதலும் புத்திமதியும் சொல்லிக்கொண் டிருக்கிறேன்? எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேனோ?'' என்றவாறு மீண்டும் நாற்காலியில் அமர்ந்தான். அவனை யறியாமலே அவனுடைய பார்வை சிவகாமியம்மாளின் அந்தப் போட்டோப் படத்தின்மீது போய்ப் பதிந்தது. ''ஆமாம்; என்ன செய்வது? இந்தச் சிவகாமியம்மாளின் விதி இங்கு வந்து முடிய வேண்டுமென் றிருக்கிறதே! இதுஎன்னுடைய துரதிர்ஷ்டம்தானே?''



அடைத்துக் கொண்டு வந்த துக்கத்தை அடக்க முடியாமல் விம்மிச் செருமினாள் கோமதி.

அவளுக்குத் தெரியாமல் தன் கண்களைத் துடைத்துக் கொண்ட சாரங்கன் அடைத்த குரலில், ''அழாதே, கோமதி! வாழ்க்கையின் குரூர-வசீகரங்களை நன்கு அறிந்தவளான நீயே இப்படி மனத்தைத் தளர விடலாமா?'' என்றான்.

தன்பொருட்டு அந்த எளிய வாலிபனின் மனம் எவ்வளவு வேதனை யடைந்திருக்கிறது என்பதை உணர்ந்த கோமதி உள்ளம் நெகிழ்ந்தாள். தனக்காகவும் அநுதாபப்படக்கூடிய ஓர் ஆத்மா இந்த உலகத்தில் இருக்கிறதே என்று எண்ணிய போது அவளுடைய துக்கம் பன்மடங்காகிப் பொங்கியது. ''அண்ணா!'' எனக் கதறிக் கொண்டே ஓடிப் போய்ச் சாரங்கனின் காலடியில்விழுந்து குலுங்கிக் குலுங்கி அழுதாள் அவள். சாரங்கன் மரக்கட்டையைப் போல் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

சில விநாடிகளுக்குப் பின் :

''அண்ணா, என் அம்மா இறந்துபோனதைப்பற்றிக் கூட நான் அவ்வளவு கவலைப்படவில்லை. அவள், இறக்கும் தருவாயில் நான் அவள் அருகில் இல்லையே என்ற ஏக்கம்தான் என்னைச் சித்திரவதை செய்கிறது, அண்ணா!'' என்று அரற்றிப் பொருமினாள் கோமதி.

இதுவரை சாந்தமே வடிவாய் அமர்ந்திருந்த சாரங்கன் சடாரெனத் துள்ளியெழுந்து சினம் பொங்கும் குரலில், ''ஆமாம்; அந்தச் சமயம் பார்த்து நீ அன்று எங்கே போய்த் தொலைந்தாய்?'' என்று கேட்டான்.

திக்கித் திணறிய கோமதி, ''உங்கள் சங்கத்துக்குத்தான் போயிருந்தேன், அண்ணா!'' என்று மெல்ல இழுத்தாள்.

''நீ ஏன் அங்கு போக வேண்டும்? உனக்கு அங்கே என்ன வேலை?'' என்று மீண்டும் இரைந்துகேட்டான் சாரங்கன்.

கோமதி பதில் ஒன்றும் சொல்லாமல் தலை கவிழ்ந்துகொண்டிருந்தாள்.

''நீ அங்கு போனதால்தானே அந்த இருதயமற்ற பயல் உன்னை வெளியே விரட்டியடித்தான்?...''

தேள் கொட்டினாற்போல் பதறி எழுந்த கோமதி, ''அண்ணா! நீங்கள் யாரை இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று நடுங்கும் குரலில் வினவினாள்.

சாரங்கன் அலட்சியமாக முகத்தைச் சுளித்து, ''ஹூம்! ...யாரையா? மகாமேதாவி என்று நினைத்துக் கொண்டிருக்கும் அந்த மண்டைக் கர்வம் பிடித்த விவேகானந்தனைத் தான் சொல்கிறேன்!'' என்றான் கடுகடுத்த குரலில்.

''அண்ணா!'' எனக் கிறீச்சிட்ட கோமதி அடிபட்ட நாகம் போல் நெளிந்து தலை தூக்கி அவனை வெறித்து நோக்கினாள். ''அண்ணா, தயவு செய்து அவரை இப்படி யெல்லாம் கௌரவக் குறைவாகப் பேசாதீர்கள்!''

சாரங்கனின் கோபம் அதிகமாகியது. ''ஏன்? அந்த அயோக்கியனைப்பற்றிச் சொன்னால் உனக்கு ஏன் இவ்வளவு ரோஷம் வருகிறது?'' என்று வெறுப்புடன் கேட்டான்.

கோமதியின் கண்கள் சிவந்தன. அவனை எரித்து விடுவது போல் பார்த்து விட்டு முகத்தை வெடுக்கென்று வேறு பக்கம் திருப்பிக் கொண்டு சொன்னாள்: ''ஆண்களின் நட்புறவு எவ்வளவு பலஹீனமானது என்பதை இன்றுதான் நான் புரிந்து கொண்டேன்! கேவலம், நேற்று அறிமுகமான ஒரு பெண்ணுக்காக, பல வருஷகாலம் நகமும் சதையும் போல் பழகியதையும் அவர்கள் மறந்து விடுவார்கள் போலும்! இன்றைய இந்த உலகில் சத்திய உணர்ச்சிதான் மெலிந்து போய்க்கொண் டிருக்கிறதென்றால், நட்புணர்ச்சியுமா இப்படி மழுங்கிப் போக வேண்டும்? அண்ணா, உண்மையிலேயே

உங்களுக்காக நான் அநுதாபப்படுகிறேன்! இந்நாள்வரையில் என் உள்ளத்தில் ஓர் உன்னதமான ஸ்தானத்தை வகித்து வந்த நீங்கள் இந்த ஒரே விநாடியில் ஒரு சாதாரண சராசரி மனிதனாகி அங்கிருந்து உருண்டு விழுந்து விட்டீர்களே என்பதற்காக மிகவும் பச்சாத்தாபப்படுகிறேன்!''

சாட்டையால் சாடப்பட்டவன் போல் துடித்துவிட்டான் சாரங்கன். அவன் வாழ்நாளிலேயே இவ்வளவு பெரிய அவமான அதிர்ச்சியை அநுபவித்தறியாதவன் போல் திகைத்துத் திணறினான். உயிருக்குயிரான தன் நண்பனை அப்படிப் பேசியது தவறுதான் என்று அவனுடைய உள் மனம் வெட்கிக் குமைந்தது. பேந்தப் பேந்த விழித்தபடி நாற்காலியில் தொப்பென்று சாய்ந்தான் அவன்.

ஆக்கிர உணர்ச்சியிலிருந்து அமைதியடைந்தவளாய்க் காணப்பட்ட கோமதி தணிந்த குரலில் கூறினாள்: ''ஆமாம் அண்ணா! அன்று அவர் என்னை அவ்வளவு



மூர்க்கமாக வெளியே போகச் சொன்னது கொஞ்சங்கூடத் தவறில்லை என்றே எனக்குப் படுகிறது. ஏனென்றால், அப்போதிருந்த அவருடைய மன நிலையில், வேறு யாரா யிருந்தாலும் — ஏன்? நீங்களாக இருந்தாலுங்கூட — அப்படித் தான் நடந்து கொண்டிருக்க முடியும்.''

சாரங்கன் ஏகத்தாளமாகத் தலையசைத்து, ''ஓகோ! மனச்சாட்சியை இழந்து காரியம் செய்யும் ஒவ்வொருவரும் இப்படித்தான் நொண்டிச் சமாதானம் சொல்லிக் கொள்வார்கள். அதையெல்லாம் நியாயம் என்று ஏற்றுக் கொள்ள உன்னைப் போன்ற பேதைப் பெண்களால்தான் முடியும்!'' என்றான்.

கோமதி இதைக் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை.

சாரங்கன் சட்டென்று நிமிர்ந்து, ''அது சரி; அன்று நீ விவேகானந்தனைப் பார்த்துவிட்டு வந்த பிறகு எங்கே போனாய்?'' என்று புருவங்களை நெரித்துக்கொண்டு கேட்டான்.

''அபரஞ்சியம்மாளைப் பார்த்து வரலாமென்று போனேன், அண்ணா!''

''பிறகு அங்கிருந்து எங்கு போனாய்?''

சற்றே தயங்கிய கோமதி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, ''தேவகியின் வீட்டுக்குப் போயிருந்தேன்'' என்று கூறினாள்.

''என்ன! தேவகியின் வீட்டுக்கா? அவளை நான் கடற்கரையில் அல்லவா பார்த்தேன்?''

''ஆமாம், அண்ணா! நான் போனபோது அவள் வீட்டில் இல்லை.''

''அவளைப் பார்க்க வேண்டிய அவசியம் உனக்கு என்ன ஏற்பட்டது?''

''அவளுக்குச் சேர வேண்டிய கடிதம் ஒன்று என் வசம் இருந்தது. அதை அவளிடம் கொடுப்பதற்காகக் கொண்டு போனேன்!'' என்று நாத் தழுதழுக்கச் சொன்னாள் கோமதி. வறண்டிருந்த அவள் கண்கள் மீண்டும் கண்ணீரை வழிய விட்டன.

''அது என்ன, அப்பேர்ப்பட்ட முக்கியமான கடிதம்?'' என்று அலட்சியமாகக் கேட்டான் சாரங்கன்.

கோமதி இதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாயிருந்தாள். ஆனால் அவளுடைய கண்கள் முன்னிலும் அதிகமாக நீரைப் பொழிந்தன.

''சரி சரி; உன்னுடைய அந்தரங்க விஷயங்களை யெல்லாம் கிண்டிக் கிளறிக் கேட்பதாக நினைத்துக் கொள்ளாதே! நான் கேட்பதற்குக் காரணம் வேறு; அன்றிரவு பதினோரு மணிவரை உன்னை எங்கெங்கோ தேடியலைந்தேன். குற்றுயிராய்க் கிடந்த உன் தாயை ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போவதற்குள் நான் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல. அச் சமயம், நீயும் உடன் இருந்திருந்தால், அவளுக்குச் சற்று முன்னதாகச் சிகிச்சை செய்து பார்த்திருக்கலாம். அதனால் ஒரு வேளை அவளுடைய விதியின் போக்கும் மாறியிருக்கலாம்!'' என்று படபடப்புடன் சொன்ன சாரங்கன், சிறிது நிதானித்து அவளை ஏறிட்டுப் பார்த்து, ''இங்கே பார், கோமதி! உன் மனத்தில் இருப்பதை நான் ஓரளவு அறிவேன். கைகூடாத கனவுகளை யெல்லாம் கண்டு காலத்தை வீணாக்கிக்கொண்டிருக்கிறாய்! இப்போதைக்கு நான் சொல்லக் கூடியது இவ்வளவே!'' என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து விர் 'ரென வெளியே போய்விட்டான்.

கோமதியின்மீது கொண்ட தூய பாசத்தினால்தான் அவளை அப்படிக் கோபமாகக் கடிந்து பேசி விட்டான் சாரங்கன். ஆனால், கோமதி அதைப் புரிந்து கொண்டிருப்பாளா? அல்லது, 'எனக்கு உண்ண உணவும், இருக்க இடமும் அளித்திருப்பதால்தானே அவன் அப்படியெல்லாம் கடிந்து பேசத் துணிகிறான்? என் சொந்த விஷயங்களில் தலையிட்டுப் புத்திமதி சொல்ல இவன் யார்?' என்று வெறுப்படைவாளா?

பஸ் நிலையத்தை நோக்கி நடந்து கொண்டிருந்த சாரங்கன் தன்னைத் தானே கடிந்து கொள்வதைப் போல் வலக் கையைத் தூக்கி வேகமாக ஆட்டி அசைத்தான். இச்சமயம் அந்தப் பக்கம் காலியாகச் சென்ற ஓர் ஆட்டோ ரிக்ஷா, அவன் கையசைத்ததைக் கண்டு அருகில் வந்து நின்றது. 'நான் உன்னைக் கூப்பிடவில்லையே' என்று சொல்லி ஆட்டோ-ரிக்ஷாக்காரனின் வசவை வாங்கிக் கட்டிக்கொள்ள விரும்பாத சாரங்கன், தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே அந்த வாகனத்தில் ஏறி அமர்ந்தான். ஆனால், எங்கே போவதென்று அவனுக்கு விளங்கவில்லை. ''நேரே போப்பா!'' என்று மட்டும் சொல்லிவிட்டு ஆசனத்தில் சாய்ந்தான். அவன் மனம் மீண்டும் கோமதியைப் பற்றியே எண்ணமிடலாயிற்று.

'அவள் இப்போது என்ன செய்வாள்? நான் சொன்ன கடுசொற்களைத் தாள மாட்டாமல் தன்னுடைய பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு எங்கேயாவது போய் விடுவாளோ?'

சட்டென்று நிமிர்ந்த சாரங்கன், ''இந்தாப்பா, வண்டியைத் திருப்பு!'' என்று கூவினான்.

வாகனத்தின் வேகத்தைக் குறைத்த சாரதி, "எங்கே சார், போகணும்?" என்று கேட்டான்.

அதற்குள் ஏதோ நினைத்துக் கொண்ட சாரங்கன், "சரி சரி; வேண்டாம்! நேராகவே போ!" என்று முனகினன். டிரைவர் அவனை ஒருதினுசாகப் பார்த்துவிட்டு வாகனத்தை வேகமாகச் செலுத்தினன்.

'அவள் எங்கே போவாள்? எங்கும் போக மாட்டாள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட சாரங்கன் மெல்லச் சிரித்தான்.

ஆமாம்; கோமதி இப்போதைக்கு அவனுடைய பாதுகாப்பிலிருந்து விலகி எங்கும் போக மாட்டாள் என்று அவன் உறுதியாக நம்பினன். இந்த அவனது நம்பிக்கைக்குக் காரணம் என்ன?

கோமதி விவேகானந்தனைக் காதலிக்கிறாள் என்னும் விஷயத்தை அவன் நன்கு அறிந்துகொண்டிருந்தான். அதற்காகவே அவள் தன்னுடைய பாதுகாப்பில் இருந்து வருகிறாள் என்பதும் அவனுக்குப் புரிந்த விஷயமாகி விட்டது.

ஆனால், அந்தப் பேதைப் பெண்ணின் கனவு ஈடேறுமா? அதை நினைக்கும் போது சாரங்கனின் மனம் வெகுவாக வருந்தியது.

ஏனென்றால், அவனுக்கு இப்போது விவேகானந்தனைப் பற்றிய எல்லா விவரங்களும் தெரியும். இரண்டு நாட்களுக்கு முன் அவனே இவனிடம் அந்த விஷயங்களை மனம் திறந்து சொல்லி விட்டான். அவனுடைய ஒவ்வொரு சொல்லும், தேவகியை அவன் எவ்வளவு தீவிரமாகக் காதலிக்கிறான் என்பதைத் தெள்ளத் தெளிய எடுத்துக்காட்டி விட்டது. அவனது வீட்டார் அந்தப் பெண்ணையே அவனுக்குச் செய்துவைக்க முயன்று கொண்டிருக்கிறார்கள் என்பதும் சாரங்கனுக்குத் தெரிந்த விஷயமாகி விட்டது. இந்த நிலையில், இந்தப் பைத்தியக்காரப் பெண் கோமதி, விவேகானந்தனிடம் தன் மனத்தைப் பறி கொடுத்து நிற்கிறாள் என்றால் அதை என்னென்பது?

விவேகானந்தன் தேவகியை மணக்க விருக்கும் செய்தி கோமதிக்குத் தெரியும். அது தெரிந்தும்கூட அவள் ஏன் இப்படித் தன் மனத்தை அலைய வைத்துக் கொண்டிருக்கிறாள்? அவனோ இவளை ஓர் அற்பப் புழுவென மதித்து ஒதுக்கித் தள்ளுகிறான்! அப்படியிருந்தும் இவள் எந்த அஸ்திவாரத்தின்மீது தன் மனக் கோட்டைகளை எழுப்பிக் கொண்டிருக்கிறாள்?......

ஆட்டோ-ரிக்ஷா ஏதோ ஒரு பள்ளத்தில் இறங்கி ஏறியதால் அதிர்ச்சியுற்று முன்னே சாய்ந்த சாரங்கன் 'மீட்டர்' கருவியில் போய் 'டங்'கென்று மோதிக் கொண்டான். அப்போதுதான் அவனுக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. பரபரப்புடன் ஜேபியைத் தொட்டுப் பார்த்துக் கொண்ட அவன் பேந்தப் பேந்த விழித்தான். காரணம், அவனுடைய ஜேபியில் மணிபர்ஸ் இல்லை-அதை எடுத்துவர அவன் மறந்து போய்விட்டான்!

"யோவ், யோவ்! வண்டியை நிறுத் தய்யா!" என்று கூவிக்கொண்டே, உள்ளே ஒரு காலும் வெளியே ஒரு காலுமாகப் பரப்பினன் சாரங்கன்.

அவன் போட்ட கூச்சலில் மிரண்டு விட்ட டிரைவர், எக்கச்சக்கமாக 'ஹாண்டில்-பாரை'த் திருப்பி விடவே, ஆட்டோ ரிக்ஷா சடாரென்று திரும்பிச் சாலையைக் கடந்து ஒரு பெரிய பங்களாவின் வாசலுக்குள் புகுந்து ஒரு குலுக்குக் குலுக்கி நின்றது. அந்த அதிர்ச்சியால் வெளியே தூக்கி எறியப்பட்ட சாரங்கன், முட்டிக்காலைத் தேய்த்துக்கொண்டு நடுக்கத்துடன் எழுந்து நின்றான்.

"ஹல்லோ, மிஸ்டர் சாரங்கன்! வரவேண்டும்! வரவேண்டும்!"

பீதியுடன் திரும்பிப் பார்த்தான் சாரங்கன். அந்தப் பங்களாவின் வராந்தாவில் தொங்கிய ஊஞ்சலிலே உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்த தேவகி, எழுந்து நின்றுகொண்டு அவனை வரவேற்றாள்!

## அத்தியாயம் பத்து

நாணுப் பிள்ளையிடம் காப்பிக்குச் சொல்லிவிட்டுக் கூடத்து அறைக்கு வந்தாள் தேவகி. இன்று அவள் முகமே நன்றாயில்லை. ஏதோ ஓர் ஆழ்ந்த கவலையால் பொலிவிழந்து வெளிறிக் காணப்பட்டாள். ஆயினும் ஒரு வெற்றுப் புன்னகையுடன் சாரங்கனைப் பார்த்து, "நவயுக வாலிபர் சங்கத்தின் புகழுக்கெல்லாம் நீங்கள்தாம் காரணம் என்று கேள்விப்பட்டேன். இன்று உங்களைச் சந்தித்ததில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி!" என்று கூறிக்கொண்டே வந்து ஓர் இருக்கையில் அமர்ந்தாள்.

பொறியில் அகப்பட்ட எலியைப் போலத் திருதிரு வென்று விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சாரங்கன், அவளைப் பயபக்தியுடன் பார்த்துக் கும்பிடுவதுபோல் கைகளைக் குவித்துக்

குவித்துத் திறந்தான். ஏதோ சொல்ல வாயைத் திறப்பதும், எச்சிலைக் கூட்டி விழுங்குவதும் கழுத்தை நீட்டுவதுமாக அவஸ்தைப்பட்டான். ஆனால் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. உடம்புமட்டும்தான் புடலங்காய்போல் நெளிந்தது.

தேவகி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துப் புன்னகை செய்தாள். அவன் வாய் திறந்து பேசச் சங்கோசப்படுவதற்கு அவனுடைய மனம் வேறு பொருள் கற்பித்துக் கொண்டது. விவேகானந்தன்தான் அவனிடம் ஏதோ சேதி சொல்லி இங்கு அனுப்பி வைத்திருக்கிறான் என்று அவள் எண்ணினாள்.

தாணுப்பிள்ளை மணம் கமழும் காப்பியைக் கொண்டு வந்து சாரங்கனின் எதிரில் வைத்து விட்டுப் போனார்.

"ரொம்பவும் களைத்து வந்திருக்கிறீர்கள்போல் இருக்கிறது. காப்பியைச் சாப்பிடுங்கள்" என்று பரிவுடன் சொன்னாள் தேவகி.

உபசாரம் பலப்படுவதைக் கண்டு சாரங்கனுக்கு உதறலெடுத்து விட்டது.

'என்ன விஷயமாக, யாரைப் பார்க்க வந்தீர்' என்று தேவகி கேட்டால் என்ன பதில் சொல்வது? அல்லது, 'என்னுடைய கவிதைகளை நீர் படித்திருக்கிறீரா? எங்கே, ஒரு கவிதையைப் பாடுங்கள் பார்க்கலாம்!' என்று அவள் கேட்டு விட்டால் என்ன செய்வது? இதையெல்லாம் விட அவனுக்கு இன்னொரு விஷயம் தான் பெரிய கவலையை அளித்தது: வெளியே ஆட்டோ-ரிக்ஷாவை நிறுத்தி வைத்துக் கொண்டு நிற்கும் டிரைவர் வந்து, 'நான் போக வேண்டும், மீட்டரைப் பார்த்துப் பணத்தைக் கொடு' என்று கேட்டால் என்ன பண்ணுவது? மானம் கப்பலேறி விடுமே!

சாரங்கன் அவசரமாகக் காப்பியை எடுத்து ஒரே இழுப்பில் குடித்துத் தீர்த்தான். சர்க்கரைக் கிண்ணத்துடன் அங்கு ஓடி வந்த தாணுப்பிள்ளை, "அடடே! காப்பியில் சர்க்கரை போட மறந்து விட்டேனே, குடித்து விட்டீர்களா?" என்றார். அப்போதுதான் சாரங்கனுக்குத் தன் வாய் வேம்பாகக் கசப்பது தெரிந்தது. "டோன்ட் வொர்ரி, டோன்ட் வொர்ரி!" என்று குழறியவாறு தொண்டையைத் தடவிவிட்டுக் கொண்டான். தொந்தி குலுங்கச் சிரித்த தாணுப்பிள்ளை, காலியான கோப்பையை எடுத்துக்கொண்டு சென்றார்.

இதையெல்லாம் கவனியாமல் ஏதோ யோசனையில் எங்கோ பார்த்துக் கொண்டிருந்த தேவகி, மெல்ல அவன் பக்கம் திரும்பி, "உங்கள் நண்பர் நலம்தானே?" என்று கேட்டாள்.

சாரங்கன் வாயைத் திறக்கவே பயந்தான். ஏனென்றால் அவள் ஒரு புகழ் பெற்ற கவி. அவளிடம் பேசும்போது ஏதாவது இலக்கணப் பிழை ஏற்பட்டு விடுமோ என்று அவன் அஞ்சினான். ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு நெளிந்து நிமிர்ந்து, "அம்மையாரவர்கள் எவர் நலன் குறித்துக் கடாவுகிறார்கள்?" என்று பணிவுடன் கேட்டான்.

தேவகிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "உங்களுடைய சங்கத் தலைவரைப் பற்றித்தான் கேட்கிறேன்" என்றாள் அவனைக் குறும்பாகப் பார்த்து.

"ஓ!...எமது தலைவர் பெருமகனாரைப் பற்றிக் கடாவுகிறீர்களோ? இறைவன் அருளால் அன்னார் நன்னலமே, அம்மணி!" என்று திருத்தமாகச் சொன்னான் சாரங்கன்.



தேவகி கலீரென்று சிரித்தாள். சாரங்கனுக்குச் சந்தேகமாகி விட்டது, தான் சொன்னதில் ஏதாவது இலக்கணப் பிழை கலந்து விட்டிருக்குமோ என்று. அவளைப் பரிதாபமாக ஏறிட்டுப் பார்த்தான் அவன்.

சற்று நேரம் மௌனமாயிருந்த தேவகி, "ஆமாம்; இப்போது இங்கே என்ன விஷயமாக வந்தீர்கள்?" என்று சந்தேகத்துடன் கேட்டாள்.

எதிர்பார்த்துக் கொண்டிருந்த இடி தலைமேல் விழுந்து விட்டதுபோல் உள்ளூற நடுங்கிய சாரங்கன், சோபாவின் மூலையில் ஒடுங்கி முடங்கிக்கொண்டு, "அதாகப் பட்டது...அம்மணி!...வந்து...வந்து...நானாக இங்கு வரவில்லை!..." என்று ஜுரம் கண்டு உளறுபவனைப் போல் உளறினான்.

மெல்லச் சிரித்த தேவகி, "விவேகானந்தன் உங்களை இங்கே அனுப்பி வைத்தாரா?" என்று கேட்டாள்.

சாரங்கன் மேலும் குழம்பினான். அவனுக்கு என்ன சொல்வதென்றே தோன்ற

வில்லை. 'ஆமாம்' என்பது போலவும், 'இல்லை' என்பது போலவும் தலையாட்டினான் அவன்.

"நான் அப்படித்தான் நினைத்தேன்" என்றவாறு எழுந்த தேவகி, ஒருகணம் தயங்கி நின்று ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய், "சற்று இருங்கள்; இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லி மாடிப் படிகளில் ஏறி மறைந்தாள்.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி திகிலடித்துப்போய் உட்கார்ந்திருந்தான் சாரங்கன். வெளியே வெகு நேரமாகக் காத்துக்கொண்டிருந்த டிரைவர் 'ஹாரன்' ஒலியெழுப்பித் தன் பொறுமை பறி போய்க் கொண்டிருப்பதைக் காட்டிக் கொண்டான்.







மாடிக்குச் சென்ற தேவகி மிகவும் நிதானமாகக் கீழே இறங்கி வந்தாள். அவள் முகம் இப்போது சவம்போல் வெளுத்துக் காணப்பட்டது. "மிஸ்டர் சாரங்கன்! உங்களுக்கு நான் ஒரு சிரமம் தரப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டே வந்தவள், "நீங்கள் இப்போது மிஸ்டர் விவேகானந்தனைச் சந்திப்பீர்களா?" என்று கேட்டாள்.

"ஓ....அவசியம் சந்திப்பேன் அம்மணி!" என்று பவ்யமாகப் பதில் சொன்னான் சாரங்கன்.

ஒருகணம் தயங்கிய தேவகி முகத்தைவேறு பக்கம் திருப்பிக் கொண்டு, "நீங்கள் தவறாகஎதும் நினைக்கக் கூடாது. இந்தக் கடிதத்தை நானே அவரிடம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டுமென்றிருந்தேன். ஆனால், அதற்குள் அவர் அவசரப்பட்டு உங்களை அனுப்பி வைத்து விட்டார்..." என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே சாரங்கன் குறுக்கிட்டு, "ஐயையோ! அவர் என்னை அனுப்பி வைக்கவில்லை அம்மணி! நானாகத்தான் வந்தேன்!...இல்லை, இல்லை: நானாக வரவில்லை. நான் ஏறி வந்த ஆட்டோ-ரிக்ஷாதான் என்னை இங்கே கொண்டு வந்து இப்படித் தள்ளி விட்டது!" என்று குழறினான்.

புன்முறுவல் பூத்த தேவகி அவனை அநுதாபத்தோடு பார்த்து, "அதனாலென்ன, பரவாயில்லை! உங்கள் நண்பருக்கு நீங்கள் இந்த உதவியைக்கூடச் செய்யக் கூடாதா?" என்றாள்.

"ஓ! தாராளமாக, தாராளமாகச் செய்யலாம்" என்று பெரிதாகத் தலையசைத்து வைத்தான் சாரங்கன்.

"இந்தாருங்கள், இந்தக் கடிதத்தை அவரிடம் கொடுத்து விடுங்கள்!" என்றவாறு நன்றாக ஒட்டி மூடிய கவர் ஒன்றைச் சாரங்கனிடம் கொடுத்தாள் தேவகி. அந்தக் கடிதக் கூட்டின்மீது விவேகானந்தனின் பெயர் தெளிவாக எழுதப் பெற்றிருந்தது.

சாரங்கன் கவரை வாங்கி ஜேபியில் வைத்துக் கொண்டு "மிக்க நன்றி, அம்மணி! நான் சென்றுவர விடை தாருங்கள்!" என்று இலக்கணச் சுத்தமாகச் சொல்லிக் கரம் கூப்பினான்.

"புறப்பட்டு விட்டீர்களா? சரி" என்று சொன்ன தேவகி சட்டென்று அவனை ஏறிட்டுப் பார்த்து, "ஒரு விஷயம்! உங்கள் நண்பரிடம் சொல்லுங்கள்: இனிமேல் அவர் எனக்கோ என்போன்ற வேறு யாருக்குமோ கடிதம் எழுதி அனுப்புவதானால், அதை ஒரு பெண் வசம் கொடுத்து அனுப்ப வேண்டாம் என்று நான் சொன்னதாக அவரிடம் சொல்லுங்கள்!" என்றாள் படபடப்புடன். பிறகு அவள் அங்கிருந்து சரேலென்று மாடிக்குப் போய் விட்டாள்.

கண்ணில் மின்னல் தெறித்தாற்போல் திகைத்து நின்றான் சாரங்கன். அவனுக்குக் கொஞ்ச நேரம்வரை ஒன்றுமே புரியவில்லை. மூக்கை வேகமாக உறிஞ்சிக் கொண்டு வெளியே

வந்தான். பளிச்சென்று ஓர் எண்ணம். 'அன்றொரு நாள் கோமதி, ஏதோ ஒரு கடிதத்தைத் தேவகியிடம் கொடுக்கப் போனதாக இன்று சொன்னாளே! அதற்கும் இப்போது தேவகி சொன்னதற்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ?' —

ஆட்டோ-ரிக்ஷாவின் 'ஹாரன்' ஒலி கேட்கவே, அவசரமாக ஓடிப் போய் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டான் சாரங்கன். வண்டி அந்தப் பங்களா காம்பவுண்டைக் கடந்து சாலையில் ஏறிய சமயம், பின்னால் யாரோ கை தட்டும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான். கமலிதான் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

"வணக்கம், சார்! எங்கே, ரொம்ப தூரமா?" என்று எழில் வழியச் சிரித்துக் கேட்டுக் கொண்டே வந்த கமலி, "நல்ல நேரத்தில் உங்களைப் பார்த்தேன். இல்லையென்றால், இங்கே டாக்ஸிக்காகக் காத்து நின்று என் கால்தான் புண்ணாகிப்போயிருக்கும்!" என்றாள்.

இப்போதுதான் சற்று நிம்மதியாக மூச்சு விட்டுக் கொண்டிருந்த சாரங்கனுக்கு மீண்டும் மூச்சு அடைத்துக் கொண்டமாதிரி ஆகிவிட்டது. அவளைத் திருதிருவெனப் பார்த்து விழித்த அவன், "ஓ. கமலியா? ஆமாம்; கமலிதான்!" என்று உளறினான்.

"நீங்கள் எங்கே போக வேண்டும்?" என்று தலையைச் சாய்த்துக் கேட்டுக் கொண்டே ஆட்டோ-ரிக்ஷாவின்மீது தன் வலக்காலை ஒயிலாக எடுத்து வைத்தாள் கமலி.

"நான்...நான்?...நீங்கள் எங்கே போக வேண்டும்?" என்று பயந்தவன் மாதிரி முகத்தை வைத்துக்கொண்டு கேட்டான் சாரங்கன்.

"நானா? நீங்கள் எங்கே போகிறீர்களோ, அதுவரையில் என்னைக் கொண்டு போய் இறக்கிவிட்டுவிடுங்கள்!" என்றாள் கமலி புன்சிரிப்புடன்.

திடுக்கிட்ட சாரங்கன், "ஐயையோ! நான் எங்கள் சங்கத்துக்கல்லவா போகிறேன்?" என்றான் அவசரமாக.

'அதனாலென்ன? உங்கள் வாலிபர் சங்கத்தைப் பெண்கள் பார்க்கக்



"என்ன அண்ணே! ஏன் உனக்குத் தொண்டை கட்டி இருக்குது?"
"'கத்தி கத்தி'ன்னு கத்தித்தான் இப்படி ஆகிவிட்டது!"

கூடாதா என்ன?" என்று குறும்பாகக் கேட்டாள் கமலி.

சாரங்கன் விழித்தான்.

"என்ன சார், பாவம் அந்த அம்மா இவ்வளவு தூரம் கேட்கிறாங்க! நீங்க என்னமோ 'சால்' பண்றீங்களே?" என்று மத்தியஸ்தம் பேசினான் டிரைவர். நடுரோட்டில் வண்டியை நிறுத்திக் கொண்டு நேரத்தைப் போக்குவதனால் ஏற்பட்ட ஆத்திரம் அவனுக்கு.

"சரி; கொஞ்சம் நகர்ந்து உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று சொல்லிக் கொண்டே வண்டியில் ஏறி அமர்ந்து கொண்டாள் கமலி.

சாரங்கன் பரிதாபமாகத் தன் ஜேபியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். மீட்டரில் ஆகும் தொகையைக் கொடுக்கத் தன்னிடம் பணம் இல்லையே என்ற திகில் அவனைப் பேயாகப் பிடித்து உலுக்கியது. அங்கு போய் இறங்கியதும், பணத்துக்கு என்ன செய்வது? இந்தப் பெண்ணின் எதிரில், டிரைவர் மானத்தை வாங்கி விடுவானே!

இந்தக் குழப்பத்திலும், தன் ஜேபியிலிருந்த கடிதத்தைக் கமலியின் கண்ணில் படாமல் மறைத்து வைத்துக் கொள்ள அவன் மறக்கவில்லை. அதை வேறு அவள் பார்த்து விட்டு, "இது என்ன கடிதம்?" என்று கேட்டு விட்டாளானால், அப்புறம் வம்புதான்!

குபுக்கென்று புறப்பட்ட ஆட்டோ-ரிக்ஷா பெருங் குரல் எழுப்பிக் கொண்டு பறந்தது.

அரை மணி நேரத்துக்கெல்லாம் நவயுக வாலிபர் சங்கத்தின் எதிரே வந்து நின்றது வண்டி.

"ஒரு நிமிஷம் வண்டியிலேயே உட்கார்ந்திருங்கள். இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கீழே இறங்கிய சாரங்கன், மாடியிலுள்ள சங்கக் காரியாலயத்துக்கு மளமளவெனப் படிகளில் ஏறி ஓடினான்.

அவன் போவதையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு வண்டியில் அமர்ந்திருந்தாள் கமலி.

மாடிக்குச் சென்ற சாரங்கன் மகிழ்ச்சியடைந்தான். ஏனென்றால், அங்கு

விவேகானந்தன் தனிமையில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்திருந்தான்.

"வணக்கம், தலைவரவர்களே! எங்கே நீங்கள் இங்கே இருக்க மாட்டீர்களோ என்று பயந்து கொண்டு வந்தேன்" எனக் கலகலப்பாகச் சொல்லிக் கொண்டே வந்த சாரங்கன் ஒரு நாற்காலியில் தொப்பென்று சாய்ந்தான்.

"வா, சாரங்கா! உன்னைத்தான் நானும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்று கரகரத்த குரலில் கூறியவாறு நிமிர்ந்து உட்கார்ந்தான் விவேகானந்தன்.

"என்ன விஷயம்? சீக்கிரம் சொல், நான் போக வேண்டும்!"

"என்னப்பா, வந்ததும் வராததுமாகப் போகிறேன் என்று அவசரப்படுகிறாய்?" என்றான் விவேகானந்தன்.

"ஆமாம்; அவசரம்தான். நீ சொல்ல வேண்டியதைச் சீக்கிரம் சொல்."

உயிரற்ற சிரிப்புடன் அவனை உற்றுப் பார்த்த விவேகானந்தன், "நான் சொல்லப் போவது ஒரு நல்ல விஷயம். அதை நிதானமாகத்தான் சொல்ல வேண்டும்!" என்றான்.

"பரவாயில்லை; சுருக்கமாகச் சொன்னால் நான் புரிந்து கொள்வேன்."

"அடுத்த மாதம் நடக்கவிருக்கும் உப தேர்தலில் நான் ஓர் அபேட்சகனாகப் போட்டியிடப் போகிறேன். அதற்கான அபேட்சாப்பத்திரத்தை இன்று தாக்கல் செய்துவிட்டேன்."

"அடப் பாவி!" என்று வாயைப் பிளந்த சாரங்கன், சட்டென்று எழுந்து, "கன்கிராஜுலேஷன்ஸ் மிஸ்டர் விவேகானந்தன்!" என்றவாறு அவன் கையைப் பிடித்துக் குலுக்கியபடியே, "ஊம்! எடு, ஐந்து ரூபாயை! சீக்கிரம் எடு!" என்று கூவினான்.

"ஐந்து ரூபாயா? எதற்கு?"

"முதலில் ரூபாயைக் கொடு, அப்புறம் சொல்கிறேன்."

"நான் தேர்தலில் நிற்கப் போவதாகச் சொன்னதற்குத் தட்சிணையா?"

"இல்லை; அதைவிடப் பெரிய விஷயம் ஒன்றை உனக்காகக் கொண்டு வந்திருக்கிறேன்! அதற்குத்தான் ஐந்து ரூபாய் பக்ஷிஷ் கேட்பது! என்னிடம் மணிபர்ஸ் இல்லை!"

"என்னப்பா, உளறுகிறாய்?"

"உளறுகிறேனா? இதோ பார், இதுதான் நான் உனக்குக் கொண்டு வந்திருப்பது!" என்றவாறு தன் ஜேபியிலிருந்த கடிதத்தை எடுத்து நீட்டினான் சாரங்கன்.

"கடிதமா? என்ன கடிதம்? யார் கொடுத்தது?"

"பிரித்துப் பார், தெரியும்."

"சொல், சாரங்கா! யார் இதைக் கொடுத்தது?"

"சொல்லட்டுமா? தங்கள் உள்ளங் கவர்ந்த கவியரசியான குமாரி தேவகி கொடுத்து அனுப்பிய கடிதம் இது!"

"யார்? தேவகியா?" என்று பரபரப்புடன் கேட்டுக்கொண்டே அந்தக் கடிதத்தை வெடுக்கென்று பிடுங்கிய விவேகானந்தன், "நீ அவளை எங்கே பார்த்தாய்?" என்று முகம் மலரக் கேட்டான்.

"அவளை அவள் வீட்டில்தான் நான் பார்த்தேன்...."

"நீ ஏன் அங்கு போனாய்?"

"விதி என்னை அங்கு தள்ளிக் கொண்டு போயிற்று!"

"அவள் என்ன சொன்னாள்?"

"இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னாள்."

"அப்புறம்?"

"சர்க்கரை இல்லாத காப்பியைக் கொடுத்து என்னைக் குடிக்கச் சொன்னாள்."

"அந்தப் புல்லாங்குழல் வித்வானுக்கு நான் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியதைப்பற்றி அவள் உன்னிடம் ஒன்றும் சொல்லவில்லையா?"

"இல்லையே!"

"நல்ல வேளை. நானும் அந்த வழக்கைத் தொடர வேண்டாம் என்று நம் வக்கீலுக்கு இன்று தெரிவித்துவிட்டேன்" என்று புன்னகையுடன் சொல்லிக் கொண்டே வேறு பக்கம் திரும்பித் தன் கையிலிருந்த கடிதக் கூட்டின் வாய்ப் புறத்தைக் கிழித்தான் விவேகானந்தன்.

என்ன ஆச்சரியம்! அந்தக் கவரிலிருந்து வெறும் காகிதத் துணுக்குகளாகக் கீழே கொட்டி, வேலே வேகமாகச் சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறியின் காற்றினால் குபீரெனப் பறந்து அந்த அறையெங்கும் சிதறின.

பலத்த அதிர்ச்சியடைந்த விவேகானந்தன், பறந்து சிதறிய அந்தக் காகிதத் துணுக்குகளில் ஒன்றை எடுத்துப் பரபரப்புடன் பார்த்தான்.

அது, அவன் தேவகிக்கு எழுதிய காதல் கடிதத்தின் சுக்கலாகக் கிழிந்த ஆயிரத்தில் ஒரு சிறு துணுக்கு.

அவனுக்கு உலகமே தலைகீழாகச் சுழல்வதுபோல் இருந்தது. மேஜையின்மீது அப்படியே குப்புறச் சாய்ந்து விட்டான் விவேகானந்தன். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.

# மேலான வாழ்க்கைக்கு மேன்மையான தயாரிப்புகள்



தரத்திற்கும் குறைந்த விலைக்கும் பெயர்போன நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் இஷ்டம் போல் தேர்ந்தெடுத்துக் கொள்ள விதவிதமானவை கிடைக்கின்றன.

## நேஷனல் எக்கோ

### ரேடியோக்கள்



**நேஷனல்-எக்கோ மாடல் U-717:** 5 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ ஸெட்டுகளில் உள்ள சில அம்சங்கள் அடங்கியுள்ளன. மான்ஸூனைஸ் செய்யப்பட்டது. ரூ. 250/- நெட்



**நேஷனல்-எக்கோ மாடல் A-731:** இந்த "ஸ்யூ பிரமுக்" ரேடியோ, 7 வால்வுகளும் 8 பாண்டுகளும் கொண்ட சிறந்த ஏஸி ஸெட். தெளிவாக ஒலியை கிரகிக்கக்கூடியது. ஆர். எப். ஸ்டேஜ் ட்யூன் செய்யப்பட்டது. வெளி லௌட் ஸ்பீக்கரும் கிராமபோன் பிக்கப்பும் இணைக்க வசதியுள்ளது. "மான்ஸூனைஸ்" செய்யப்பட்டது. ரூ. 625/- நெட்

## Kleertone

### க்ளியர்டோன் லாம்புகளும் உபகரணங்களும்



**க்ளியர்டோன் வாட்டர் பாயிலர்:** வெந்நீர் மற்றும் தகிக்கும் ஜலம் வெகுசீக்கிரத்தில் தயார் செய்யக் கூடியது. சைஸுகள்: 3.5 காலன் மற்றும் 6 காலன். ஏஸி கரண்டில் இயங்குகிறது.



**க்ளியர்டோன் வீட்டு இஸ்திரிப்பெட்டி:** 7 ராத்தல் எடை, 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ். ஏஸி/டிஸி பேக்லைட் பிடி. பிரத்தியேகமான பட்டன் க்ரூவ்ஸ்.



**க்ளியர்டோன் பல்புகள் ப்ளோரஸண்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள்:** சிக்கனமானவை; பிரகாசமான ஒளிகொடுக்கச் சிறந்தவை.



**க்ளியர்டோன் எலக்ட்ரிக் கெட்டில்:** மூன்று பைண்ட் பிடிக்கக் கூடியது. க்ரோமியம் முலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 750 வாட்ஸ். ஏஸி/டிஸி.



**க்ளியர்டோன் ட்வின் ஹாட் ப்ளேட்டுகள்:** சமையலறைக்கு. இரண்டு ஹாட் ப்ளேட்டுகளுக்கும் தனித்தனி கன்ட்ரோல்கள் உள்ளன. 230 வோல்ட்ஸ். ஏஸி/டிஸி 3,500 வாட்ஸ்வரை மின்சாரப் பளுவைத் தாங்கக்கூடியது.



**க்ளியர்டோன் மடக்கு ஸ்டீல் நாற்காலிகளும் மேஜைகளும்:** விதவிதமான வர்ணங்களில் கிடைக்கும். மிகுந்த சுகந்தரும் அமைப்புடன் கூடிய நாற்காலிகள், மெத்தையுடனோ அல்லது இல்லாமலோ கிடைக்கும்.




ஜெனரல் ரேடியோ அண்டு அப்ளையன்ஸஸ் ப்ரைவேட் லிட்.
ஆபேரா ஹவுஸ், பம்பாய்-4 • 3 மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா-13 • ப்ரேஸர் ரோட், பாட்னா • 1/18, மவுண்ட் ரோட், மதராஸ்-2 • 35/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டெல்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

